# என் முருகனுக்காக

## (கந்த புராணச் சுருக்கம்)

முதல் பாகம்

We acknowledge with thanks
**Thirumala-Thirupathi Devasthanams**
for the grant of financial Assistance to bring out this book

துரை. சுந்தரேசன்

கிடைக்குமிடம்

**மனசை ப. கீரன்**

'தணிகை' 135, சாந்தி நகர் முதல் தெரு,
குரோம்பேட்டை, சென்னை - 600 044

*Title*

En Muruganukkaga - Volume I
"For my Lord Muruga" based on Kandapuranam

| | | |
|---|---|---|
| First Edition | : | **June, 2000** |
| Pages | : | Demy 212+12+படங்கள் 18 பக்கம் |
| Author | : | D. Sundaresan, I.A.S. |
| Paper used | : | Maplitho |
| No.of copies | : | 1000 |
| Typeset | : | PADMA GRAPHICS<br>CHENNAI - 600 034<br>Phone 8270648 |
| Price | : | Rs.90/- |
| Printed at | : | Kavikuil Printers<br>47, Nallathambi Street<br>Triplicane<br>Chennai-600 005 |

*Copies available with*
**Manasai Pa. Keeran**

'Thanighai' 135, Shanthi Nagar Street
Chromepet, Chennai - 600 044

# முன்னுரை

**எ**ன முருகனுககாக (கநத புராணச சுருககம) எனற இநநூல எனனுடைய பததாவது நூலாகும திருமுருகப பெருமானுடைய வரலாறறை ஒரு சேர ஒரே இடததில தெககக வேணடும எனபது, எனனுடைய நீணட நாள அவா இதறகுத தேவையான தகவலகளைச சேகரிகக முறபடட பொழுது, பல தகவலகள கிடைபபதறகு அரிதாக இருநதது அநதச சமயததில கநத புராணததினுடைய பததாயிரததிறகும மேறபடட பாடலகளை பொழிபபுரையைப படிககும சநதாபபம எனககுக கிடடியது அபபடிபபடட ஒரு காவியததைப பல நூறு ஆணடுகளுககு முனபு இயறறிய மாமனிதரை, ஒரு சாதாரணராககக கருத முடியாது

2 அநநூலில பல செயதிகள, புராணததின அடிபபடையில வழஙகபபடடுளளது முருகப பெருமானின வாழககை மடடும இயமபும பகுதிகளை மடடும திரடடி இநநூலில அளிததுளளேன இதில கொடுககபபட டுளள தகவலகள, தமிழ நாடடு மககளுககு ஒரு புராணக கதையாாகவும அலலது வரலாறறைப படிககக கூடிய அனுபவமாகவும அமையும எனறு நான நமபுகிறேன இநநூல இரணடு பாகஙகளாக வெளிவருகிறது இநநூலை வெளிககொணரத திருமலை திருபபதி தேவஸதான நிறுவனததினா ஒரு பகுதி நிதியுதவி அளிததுளளாாகள அவாகளுககு என நனறியைத தெரிவிததுக கொளகிறேன இநநூலைப பதிபபிககத தமிழக அரசு வழககம போல அனுமதி தநதிருககிறது அவாகளுககும என நனறி உரிததாகுக

3 கநத புராணததில கொடுககபபடடுளள தகவலகளைத தவிர முருகக கடவுள தொடாபான மேலும பல தகவல்கள இஙகே சோககபபடடு பல தலைபபுகளில வழஙகபபடடுளளன முருகனபால ஈாககபபடடுளள பகதாகளுககும, மறறவாகளுககும இததகவலகள மிகவும பயன உளளவையாக இருககும எனறு நான எணணுகிறேன சாதாரணமாக, இதுவரையிலும தெரியாத மறறும தெரிநது கொளள முடியாத கநதபுராணச செயதிகள இநநூலில ஆஙகாஙகே சுடடிக காடடபபடடுளளன படிபபோாககு அவை நினைவில நிறகக கூடியதாக அமையும

4 திருமுருகப பெருமான சிவபெருமானின நெறறிக கணணிலிருநது உதிதத பிறகு, குழநதையாக, குமரனாக வளாநது சூரனை வதைககத தெறகு நோககிச சென றதைக கநதபுராணம மிகவும தெளிவாகக குறிபபிடுகினறது திருககுமரன தேவகிரியை விடடு, திருககேதாரததைக கடநது, காசியில தரிசிததது, ஸ்ரீ சைலததை அடைநதாா எனறும, தொடாநது

தென்கயிலை என்று அழைக்கப்படுகின்ற திருக்காளத்தியில் தன்னுடைய படைகளுடன் சேர்ந்து, தொடர்ந்து திருவாலங்காடு, கம்பை நதி சூழ்ந்த சீரார் காஞ்சி, திருவண்ணாமலை, பெண்ணை ஆறு சூழ்ந்த திருவெண்ணைநல்லூர், காசி நகரிலும் சிறந்ததான விருத்தாச்சலம், மூதூரான சிதம்பரம், காவிரியின் வட கரை பால் உள்ள மண்ணி நதிக்கரை போன்ற எல்லா ஊர்களையும் கடந்து திருச்சேய்ஞலூரை அடைந்து தங்கினார். பிறகு, காவிரியைக் கடந்து திருவிடைமருதூர், மயிலாடுதுறை, அரியலூர் மற்றும் திருவிளஞ்சியங்கானத்துக் கோயிலைத் தரிசித்து, திருவாரூரைக் கண்டு மகிழ்ந்தார். பின்பு பாலை வழியைக் கடந்தார். திருப்பரங்குன்றத்தை நீங்கினார். சூரபத்மனுடன் போர் செய்து தேவர்களின் குறையைத் தீர்க்கத் திருச்சீரலைவாய் ஆகிய திருச்செந்தூரை நண்ணி, தன்னுடைய படை வீட்டை அமைத்துக் கொண்டார், என்று கந்த புராணம் வரிசையாகத் தொகுத்துத் தருகிறது. இவற்றைப் பற்றியெல்லாம் தெரிந்து கொள்ள இந்தத் தொகுதி உதவும் என்று நான் நம்புகிறேன்

5. இந்நூலைப் பதிப்பிக்க, தொடர்ந்து எனக்குப் பல உதவிகளைச் செய்து வருகின்ற நண்பர் **மனசை ப. கீரன்** அவர்களுக்கும், இந்நூலில் அணிந்துரை வழங்கியதோடல்லாமல், இத்தொகுப்பைப் படித்து, திருத்தி, சிறிய தலைப்புகள் கொடுத்து, தெளிவாக வெளிவர உதவிய நண்பர் திரு. **ஞா. மாணிக்க வாசகனாருக்கும்** இந்நூலில் இடம் பெற்றிருக்கும் திருமுருகன் வண்ணப் படங்களைத் திரு. **அரங்கநாதன்** கற்பனைத் திறத்துடனும், மிகுந்த இறை ஈடுபாட்டுடனும் வரைந்து நூலுக்குச் சிறப்பை சேர்த்துள்ளமைக்கும், நூலை வடிவமைத்த ஓவியர் திரு.**ஓ. கிருஷ்ணராஜ்** அவர்களுக்கும் என்னுடைய நன்றி உரித்தாகுக.

6. வழக்கம் போல் இப்படிப்பட்ட பணிகளில் என்னுடைய குடும்பத்தினர் மிகவும் உறுதுணையாகவும், ஊக்கப்படுத்தியும் வந்தனர். அவர்கள் ஒவ்வொருவருக்கும் என் ஆழ்ந்த ஆசியையும், குறிப்பாக என் துணைவியார் **திருமதி. ஜோதிலட்சுமி** அவர்களுக்கு என் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

135, கற்பகம் அவின்யூ,
சென்னை - 600 028.

**துரை. சுந்தரேசன்**

*****

**கவிஞர்கோ**
**ஞா. மாணிக்கவாசகன்.**

# அணிந்துரை

**த**மிழ்க் கடவுள் முருகன். முருகன் என்ற சொல்லுக்கு அழகன் என்று பொருள். " முருகு அல்லது அழகு" என்பார், திரு. வி.க.

" ஒன்றே குலம், ஒருவனே தேவன்" என்ற தமிழ்ச் சாதி வாழ்வை "அகம்" என்றும் "புறம்" என்றும் இரண்டாகக் கண்டது. பேசி மகிழும் மொழியை, இயல், இசை, நாடகம் என்று மூன்றாக வகுத்தது. வாழும் நிலப்பரப்பை, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என நான்காக அமைத்தது. மலையும் மலைசார்ந்த இடமுமே குறிஞ்சி நிலம். இந்தக் குறிஞ்சி நிலத் தலைவன், குன்று தோறாடும் குமரன். குறிஞ்சி நில விளைபொருள் தேனும் தினைமாவும். இன்றும் பழநி முருகனுக்கு இரவுப் பூசையில் படைப்பது தேனும் தினைமாவுமே? குறிஞ்சிக் கிழவன் என்று குமரனைப் பாடுவர், அடியார்கள்.

**"இழுமென இழி தரும் அருவிப்**
**பழமுதிர் சோலை மலைகிழவோனே!"**

என்று பாடுவார், "திருமுருகாற்றுப் படையில் " நக்கீரர் பெருமான். குன்று தோறும் குடியிருப்பான் வேலவன் என்றாலும், "திருச்சீரலைவாய்" என்னும் "திருச்செந்தூர்" திரு ஆவினன்குடி என்னும் பழநி, திருப்பரங்குன்றம், பழமுதிர்சோலை, திருத்தணி, திருஏரகம் என்னும் சுவாமி மலை, என்னும் ஆறுபடை வீடுகளும் அவன் அருளாட்சி புரிகின்ற இடங்களில் சிறப்பானவை என்பார் அடியார்கள். மற்ற இறைவன் திருநாமங்களை நூற்றி எட்டு, ஆயிரத்தெட்டு என்று போற்றிப் பரவ வேண்டும். ஆனால் முருகனின் "சரவணபவ" மந்திரத்தை ஒருமுறை உச்சரித்தாலே போதும் பிறவிப்பிணி அகலும் என்பார் அருணகிரியார். "சரணக் கமலாயத்தை அரை நிமிட நேரம்" தவமுறைத் தியானம் செய்தால் போதும் என்று பாடும், திருப்புகழ்.

விலங்கிலிருந்து தோன்றியவன், மனிதன். இந்த மனித மனத்துள் விலங்கும் குடியிருக்கிறது. மனிதன் அறிவாலும், முயற்சியாலும், விலங்கு குணத்தை வெளியேற்றிவிட்டு உயர்ந்த நிலை பெறுகிற போது மாமனிதனாக - தேவனாக இயலும். சூரபத்மன் அரிய தவம் பல செய்து எண்ணிய வரம்பல பெற்று, தேவர்களும் கண்டஞ்ச வாழ்ந்தான். தவத்தால் அவன் பெற்ற மேன்மை, வரத்தால் அவன் பெறற வல்லமை, அவனைத் தன்னை மறக்கச் செய்தது. ஆணவம் தலைக்கேறியது. "ஆணவம்", "கன்மம்", "மாயை" என்னும

முமமலஙகிளிருநது அவனை மீடக முருகப பெருமான திருவுளம கொணட கதையே **கந்தபுராணம்**

கநதபுராணம" பாடியவா கசசியபப சிவாசாரியாா இவா கறறவா போறறும கஞசியில வாழநதவா, குமரகோடடம கநதப பொருமான கோயில குருககள முருகப பெருமானே, கநத புராணம பாட இவருககுத"திகட சககரச செமமுகம ஐநதுளான" எனறு அடி எடுததுக கொடுததாகவும், இது பிழை உடைய சொறபிரயோகம எனறு புலவாகள அரஙகேறற மறுதத போது, முருகப பெருமானே ஒரு புலவராக வநது திகழ, தசக கரம எனப பிரிததுப பொருள கொளளச சொனனதாகவும, குமர கோடடத தல வரலாறு கூறும

செயயுள வடிவாகச செயயபபடட இநதக கநத புராணததை உரைநடை ஓவியமாக ஆககியுளளாா போறறுதலுககுரிய **திரு. துரை. சுநதரேசன** அவாகள அழகான எளிய இனிய தமிழில

திரு துரை சுநதரேசன அவாகள இநதிய ஆடசிப பணியில உயா பதவியில இருபபவா ஆடசிபபணி அநதஸது பெறற பலா ஆஙகிலப புலமையாளாகளாக இருபபதே - இருநததே மரபு தமிழில சிநதிபபவாகள, சிநதிததவறறை எழுததாக வடிகக நினைபபவாகள எழுதததாக வடிபபனவறறையும எலலாாககும புரிய நூலாககும எணணம உடை யவாகள அருமையிலும அருமையே!

இநத அருமையிலும பெருமைககுரிய பணியைச செயதிருககிறாா திரு துரை சுநதரேசன இநத நு ல மூலம நூலாசிரியாகள சிலா தஙகள புலமையைக காடட எழுதுவாாகள பலா மறறவாகளுககுப புரியவைகக எழுதுவாாகள எலலோருககும புரியும வகையில புலமையும திறமையும பளிசசிட எழுதுவோா சிலரே! இநதச சிலாிலும சிறநத முதலிடம பெறததகக பெருமைககுரியவா **என் முருகனுக்காக** நூல ஆசிரியா திரு துரை சுநதரேசன

தமிழ ஆடசி மொழி எனனும இவருடைய நு ல தமிழக அரசின பரிசில பெறறது ஆடசித தமிழுககு அணி செயயத துடிககும ஆாவலா திரு துரை சுநதரேசன என முருகனுககாக எனனும நூல மூலம, தமிழ கடவுள முருகனுககு ஒரு சொல மாலை, நூல மலா சூடசயுளளாா இவரின சீரிய முயறசிகள வாழ வளர வெலல வாழததுககள

வணககம ! வாழக தமிழ !

**ஞா. மாணிக்கவாசகன்.**

*****

# காணிக்கை



தமிழ்
கூறும்
நல்லுலகிற்கு!

# நூல் ஆசிரியரின் பணிகள்

- வட ஆற்காடு அம்பேத்கார் மாவட்டத்தைச் சேர்ந்தவர்.
- 1968-இல இந்திய ஆட்சிப் பணியில் சேர்ந்தார்.
- 1979-'82 ஆண்டுகளில் கன்னியா குமரி, தஞ்சாவூர் மாவட்டங்களின் ஆட்சியாளராக இருந்துள்ளார்.
- 1984-'85 இல - இலண்டனில் M. B. A. மேற்கல்விக்காகச் சென்றார்.
- ஐரோப்பிய நாடுகள், அமெரிக்கா, சிங்கப்பூர், மலேசியா, தாய்லந்து, இந்தோனேஷியா, ஹாங்காங் முதலிய நாடுகளுக்குச் சென்றுள்ளார்.
- இந்து அறநிலையத் துறை ஆணையாளராக இருந்துள்ளார்.
- தமிழ் நாட்டுப் பொருளாதார முன்னேற்றம் பற்றி ஆய்ந்து டாக்டர் பட்டம் பெற்றுள்ளார்.
- இவரின், **என் குழந்தைகளுக்காக, என் நண்பர்களுக்காக, என் உறவினருக்காக, என் தெய்வங்களுக்காக** - என்று தொடச்சியாகக் குடும்பம் - நட்பு - உறவு தொடர்பான தன் வரலாறு போன்ற வாழ்க்கை அனுபவ நூல்கள் நான்கு வெளிவந்துள்ளன.
- **என் தலையில் தெறிக்கும் பூக்கள், விடிந்தது!** என, கவிதைகளில் சில இரு தொகுதிகளாக வெளிவந்துள்ளன.
- ஆவணக் காப்பக நூல்கள் பிற வெளியீடுகள் ஆகியவற்றில் ஆழ்ந்துதொகுத்துத் தொடர்ந்து பல்லாண்டுகளாக ஆய்ந்து தமிழ்நாடு அரசு, தமிழ் அறிஞர்கள், தமிழ் இயக்கங்கள் முதலியோர் ஈடுபட்ட தமிழ் ஆட்சி மொழி - பயிற்சி மொழி நடவடிக்கைகளின் வடிவத்தை ஆவணங்கள் வழியே முழுதாகக் காட்ட முனைந்துள்ளார்.
- 1986-இல் **தமிழ் ஆட்சி மொழி : ஒரு வரலாற்று நோக்கு** தஞ்சை தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடாகவும், 1993-இல் **தமிழ் ஆட்சி மொழி : ஒரு வரலாற்று நோக்கு : மாநாடுகள், இதழ்கள்** நூலும், இப்போது, இந்தத் **தமிழ் ஆட்சி மொழி** : ஒரு வரலாற்று நோக்கு, 1960-'65 நூலும் வெளி வந்துள்ளன. பணி தொடர்கிறது.

*****

# முதல் பாகம்

## பொருளடக்கம்

* * * * *

# என் முருகனுக்காக

## *1. உலகநாயகி ஒரு குழந்தையாய் பிறந்து.....*

**பொ**ன்மயமாக விளங்கும் ஒப்பற்ற திருக்கோயிலில் ஒப்பற்ற கிரகங்களும் நட்சத்திரங்களும் சூழ்ந்து ஒளி மயமாக விளங்க அழகியதொரு ஆசனத்தில் உமை அம்மையுடன் வீற்றிருந்தபோது பா்வதகுமாரி இறைவன் பாதமலா் தொழுது சொல்வாள்:-

கற்பனை கடந்த பரம்பொருளே! முக்கண் முதல்வா! தக்கனிடத்தில் பல நாடகள் வளா்ந்து, 'அத்தீயவன் பெற்ற மகள்' என்று சொல்லப்படும் பெயரையும் (தாட்சாயணி) சுமந்து கொண்டிருக்கிறேன்.

"அத்தாட்சாயணி என்னும் பெயரையும அத்தக்கனிடம் வாழ்ந்து வளா்ந்த இநத உடம்பையும் இதுவரையில் நான் சுமந்தேன், இனிமேலும் அவற்றைச் சுமக்க அஞ்சினேன். அவற்றை எவ்வழி மூலம் நீக்கிக் கொள்வேனோ அவ்வழியைச் சொல்லி ஆணையருளுக என்று வேண்டவும்", கண்ணுதல் பெருங்கடவுளும் "நங்கையே! இது நல்ல முயற்சி; உன் எண்ணம் நிறைவேற வேண்டுமானால் அதற்கு ஒரு வழி கூறுகிறேன். மேரு மலைக்கு உறவுடைய பழைய இமயமலை அரசன், கடுமையான பெரிய தவம் செய்து கொண்டிருக்கிறான்.

உன்னைத் தன் மகளாகப் பெற்று, வளா்த்து பிரியத்தோடு எனக்கு மணம் செய்து தருகின்ற எண்ணமே இமவான் தவநோக்கம் ஆகும். எனவே, நீ அவனிடம் குழந்தையாகச் செல். உடம்பு இளைத்து மெலியும்படி கடுந்தவம் செய்யும் மலையரசனின் சிறு குழந்தையாக நீ சென்று, அவன் மனம் மகிழும்படி ஐந்து வயதுவரை வளா்ந்து, அதற்குப் பின் குறைவற்றபெரும் தவத்தைச் செய். பாறகடலில் தோன்றிய நஞ்சினை உண்ட சிவபெருமான், இவ்வாறு நடக்கவேண்டிய முறையைச் சொல்லவும் அதைக் கேட்ட உமை, 'அவ்வாறு செய்வது நல்லது' என்று மகிழ்ந்து சிவன் திருவடிகளை வணங்கி, நின்று அன்போடு போற்றி, அவனிடம் விடைபெற்றுக் கொண்டு சென்றாள். சிவனைப் பிரியும் துன்பமும், தக்கன் தொடா்பான பெயரும வடிவும் நீங்கப் போவதால் ஏற்படட இன்பமும், சிவனைப் பிரிந்தாலும் குறையாத அன்பும், அதற்குக் காரணமான சிவனது அளவற்ற கருணையும் ஒன்று சோ்ந்து முன்னே செல்ல, மென்மையான சாயலுடைய உமை, கயிலை மலையை விட்டு, இமயமலைக்கு விரைந்து சென்றாள்.

இந்திரனது ஐராவதம் எனனும் வெள்ளை யானையின் வடிவைப போலச் சிந்துகின்ற துளிகளை உடைய பனிமழை தொடர்ந்து எங்கும் பரவுவதால, இகழ்வதற்கரிய - பெரிய இமயமலை, கயிலை மலை போலக் கட்சியளித்தது. அத்தகைய இமயமலைக்கு அரசனானவன், நிலை பெற்ற உமாதேவியைத் தன் மகளாகப பெறுவதற்காகவும அம்மகளைத் தனக்குவமை இல்லாத சிவனுக்கு மணம் செய்து கொடுபபதற்காகவும், அந்தத் தடாகத்தில் முன்னதாகவே ஓர் அரிய தவததைத் தொடங்கிச் செய்து கொண்டிருந்தார். அவ்வாறு உண்மையான தவததைச் செய்து கொண்டிருந்த இமயமலை அரசன் காணும் பொருட்டு, உலகத்து உயிர்களுக்கெல்லாம் தாயான உமாதேவி அத்தடாகத்தில் மலர்ந்திருந்த ஒரு தாமரை மலரில் தானே ஒரு பசுங்குழந்தையின் வடிவத்தை மேற்கொண்டு எய்தினாள். இமயமலை அரசன் அத்தாமரை மலரில் அக்குழந்தையைப் பார்த்து, 'உமாதேவி, அடியவனாகிய என் பொருட்டு, முக்கண் பெற்ற-மாசற்ற சிவபெருமானை நீங்கி வந்தாள் போலும்' என்று எண்ணி தனது தவத்துக்காகச் சிவபெருமான் இரக்கம் கொண்டான் என்றும், இச் செயல்கள் யாவும் சிவனது பெருங் கருணையால் நிகழ்பவை என்றும் எண்ணி மகிழ்ச்சிக் கடலுள் மூழ்கினான்.

உயர்ந்ததான இமயமலையின் அரசன், தாமரை மலர் என்னும் ஆசனத்தில் இருந்த உமையைத் தன்னுடைய சிவந்த கைகளால் எடுத்து, விரைவாகத் தலைமேல் வைத்து எடுத்துச் சென்று, இல்லத்தை அடைந்து, மங்கலம் பொருந்திய மனைவியாகிய மேனையின் கையில் கொடுத்தான்.

அவ்வாறு கொடுத்த குழந்தையை வணங்கி வாங்கிக் கொண்ட மேனை, 'அரசே இவள் உன்னிடம் வந்தது எவ்வாறு?', என்று கேட்டதை இமயமலை அரசன் நடந்த செயல்கள் அனைத்தையும் சொன்னான். குற்றமற்ற கற்பு மிக்க மேனைஅதைக்கேட்டு இது இறைவன் திருவருளோ என்று வியப்படைந்து, மனமகிழ்ச்சி அடைந்தாள்.

இமயமலை அரசனின் மனைவியான மேனைக்கு அப்போதே பால் சுரந்து , புளகம் உடல் முழுதும் பரவியது. உமையின் அருளே உடலெல்லாம் நிறைந்தது. கவலைகள் யாவும் நீங்கின; முன்பு செய்த தீவினைகள் யாவும் அழிந்தன.

அக் குழந்தைக்கு, சிலம்பு, தண்டை, அழகிய பொன்னாலான பாடகம், பாதசரம், செறிந்த தங்கவளையல், சங்கு வளையல், வியக்கத்தக்க மணிகள்

பதித்த நெற்றிச் சுட்டி, முத்துமாலை, மரகதமணி பதித்த பதக்கம், பொன்னாலான காதணி, தோளணி (வங்கி) ஆகியவறறையும் மற்றைய அணிகளையும் அணிவித்து, பாலையூட்டி, மகிழ்வித்தாள்.

எம பெருமாட்டியாகிய உமை இவ்வாறு இவர்களிடம் குழநதையாய் இருந்து, ஐந்து ஆண்டு கடந்த பின்பு, 'பிரமன் முதலிய தேவர் யாவர்க்கும் தந்தையான சிவனது அருளை எண்ணி இனித் தவம் செய்வேன்' என்று நினைத்துத் தந்தையாகிய இமயமலை அரசனிடம்,

"பெரிய - அகன்ற நான்கு தோள்களை உடைய சிவபெருமான் என்னை மணந்து கொள்ளும்படி, இம் மலையில் சொல்வதற்கு அரிய ஒரு பகுதியில் தவம் செய்வேன். அதற்குப் பொருத்தமான கன்னியர்களுடன் என்னை அனுப்புக," என்று சொல்ல அதைக் கேட்ட இமவான், "தாயே, கேட்பாயாக! இந்தச் சிறுவயது, எம்மை விட்டுப் பிரிந்து அரிய தவம் செய்வதற்கு உரியதன்று. உனக்கு ஐந்து ஆண்டுகளே ஆகின்றன. உனது இளைய உடல் தவத்தின் கடுமையைத் தாங்காது. அதனால் தவம் செய்வேன் என்னும் முடிவை விட்டுவிடு" என்று கூறக்கேட்ட பர்வதவர்த்தினி மெல்ல நகைத்தபடி;

"எல்லோரையும் சிவபெருமானே காப்பாற்றுவான், அவ்வாறின்றிப் பிறராலோ, தம்மாலோ தீமை நீங்கும்படி காத்துக் கொள்ள முடியாது. இது உறுதி. இங்கே நான் 'தவம் செய்வேன்' என்று சொன்னதும் சிவனது திருவருளினாலேதான்! அதை தடை சொல்ல வேண்டாம்" என்று பார்வதி கூறவும் மலையரசன், அன்போடு அதற்குச் சம்மதித்து, நீ எண்ணிய தவத்தைச் செய்வாயாக, என்றான்.

இவ்வாறு மலையரசன் சம்மதித்து, பின்பு, அந்தப் பெரிய மலையின் ஒரு பக்கத்தில் அன்னம் போன்ற மென்மையான நடையை உடைய பார்வதி தவம் செய்வதற்கு ஏற்ற அரிய தவச் சாலையை அமைத்தான்; தன்னுடைய நெருங்கிய உறவினரிடம் அவர்கள் செய்த தவத்தால் பிறந்த கன்னியர் பலரை அழைத்து, பார்வதியின் அருகே இருக்கும்படி செய்தான்.

தவச்சாலையில் தங்கியிருந்த ஒவவொரு நாளும், தந்தையும் சிறந்த கற்புடைய தாயும் அவளைப் போற்றி விட்டுச் செல்ல, பார்வதி தவம செயது கொண்டிருந்தாள். இங்கு இவ்வாறு இருக்க, உமை தன்னைப் பிரிந்து பின்பு வெள்ளி பனிமலை கயிலையில் இருந்த எம் சிவபெருமான் ....

## 1. ஞான சக்தி ஸுப்ரமணியர்

*ஏகவக்த்ரம் த்விநேத்ரம் ச ஜடாமகுட ஸம்யுதம்*

*ச்வேதார்க்க புஷ்பமாலாம்ச ஹேமரத்ன கிரீடினம்*

*சதுர்புஜைர் வஜ்ரசக்தி குக்குடா அபய தாரிணம்*

*திவ்யகந்தாநு லிப்தாங்கம் சுக்ல யஞ்ஞோப வீதினம்*

*சிவசக்தி ஞானயோகம் ஞானசக்தி ஸ்வரூபகம்*

*ச்வேதவர்ண:*

*ஒரு திருமுகம், இரு கண்கள், ஜடை, வெள்ளெருக்கு மாலை; ரத்நங்களிழைந்த பொன் கிரீடம், நான்கு திருக்கரங்களில் முறையே வேல், வஜ்ரம், கோழிக் கொடி, அபயம், வெண்மை நிறம்.*

## 2. இந்திரன் தவக்கோலம்.

சூரபன்மன் எனனும் கொடிய அரக்கன் அரிய பல தவம் செய்து அண்டங்களை எல்லாம் ஆட்டிப் படைக்கும் வல்லமை படைத்தவனாகி தேவர்களை எல்லாம் சொலலொண்ணாத் துயரத்துக்கு ஆளாக்கினான். தேவர்கள் வருந்தினர்.

சனகாதி முனிவர்கள் ஒருநாள் திருக்கயிலாயம் சென்று பேரறிவு படைத்த நந்திதேவரின் திருவடிகளை வணங்கி நின்றனர் அந்த நநதி தேவர் கருணை கொண்டு, புனிதமான திருக்கோயிலில் உள்ள மன்றத்திற்கு அழைத்துச் சென்றார். அங்கே அம் முனிவர்கள், பிரமன முதலாய தேவர்களுக்கும் எளிதில் காணக் கிடைக்காத ஞான முதல்வனான சிவபெருமானைத் தரிசித்தார்கள்.

அம் முனிவர்கள், சொல தடுமாற, உடல் முழுதும் சிலிர்க்க, கண்களில் நீர்பெருக, தீயிலே பட்ட மெழுகைப் போல மனம் உருக, சிறந்த வேதங்களுக்கும் உட்படாத ஆதி நாயகனான சிவனைத் தரிசித்து வணங்கி மகிழ்ச்சியுற்றுக் கூத்தாடி உடல் நடுக்கம் கொண்டார்கள்.

"கடலில் அகப்பட்டுக் கலக்கமுறும் கருணை கடலே! கடலுள், நள்ளிரவில், புயலில் அகப்பட்டுத் துன்புறும் கலம்போல பெரிய பொருள் கடலான வேதம் அலைக்க இன்றுவரை துன்புற்று இளைத்தோம். அறிவு செம்மை நெறியை அடையவில்லை. அதனால் நாங்கள் மயக்கம் என்னும பெரிய உடலிலிருந்து கரை சேரும்படி ஒரு வழிகாட்டி அருள்வாயாக".

குற்றமற்ற தவங்களைச் செய்த நல்ல கருணையை உடைய அந்த முனிவர்கள் இவற்றைச் சொன்னார்கள். அடியவர்க்கு எளிதில் காட்சி தரும் சிவபெருமான் அம் முனிவர்களைப் பார்த்து, "உங்கள் அறிவு அடங்கி ஒடுங்கும்படி கெடுதல் இல்லாத அழியாத சிறப்பு மிக்க நல்ல சாத்திரஙகளை நாம் சொல்வோம், உட்காருங்கள்" என்றார்.

சிவபெருமான் இச் சொற்களைச் சொல்ல, நல்ல பொருளை உணரவல்ல அந்நான்கு முனிவர்களும் சிவனுடைய இரு திருவடிகளின் முன்னே அமர்ந்தனர். கொன்றை மாலை அணிந்த சிவன் அங்கு வந்த நந்தி தேவரது சிறந்த முகத்தைப் பார்த்து "மலர் அம்புகளுக்கு உரிய மன்மதனைத் தவிர வேறு எந்தத் தேவர்கள் நம்மைத் தரிசிக்க வந்தாலும் அவர்களை இங்கே

அழைத்து வராதே. இது உனக்கு நாம் இடும் கட்டளை ஆகும் "என்று சிவபெருமான் கூற 'அவ்வாறே' என்று கூறிய நந்தி, பெருமானை வணங்கி, அந்நொடியிலேயே அங்கிருந்து அகன்று, முதல் வாயிலில் காவல் மேற்கொண்டார்.

நந்தி முதல் வாயிலைக்காத்து நிற்க, ஞான முதல்வனான சிவன், முன்னே அமர்ந்திருந்த சனகன் முதலிய முனிவர் நால்வரும கைகூப்பிக் கேட்க, முடிவற்ற சைவாகமங்களின் சரியை கிரியை யோகம் என்னும் மூன்று பாதங்களையும் உபதேசித்தார். அதைக் கேட்ட முனிவர்கள் மனம் அடங்கச் செய்யும்' ஞான போதத்தை (வரிஷ்டநிலை) உபதேசித்து அருள்க ' என வேண்டினர்.

முனிவர்கள் வேண்டியதும், பரத்துவத்தினும் உயர்ந்த சிவபெருமான் புன்னகை புரிந்து, அதை மறுத்துக் கூறவில்லை. "அந்த ஞானபோதம் வாயினால் சொல்லப்படுவது அன்று, அது இவ்வாறு இருத்தல் ஆகும்" என்று கூறி, அவர்களுக்குப் போதிக்கும்படி ஒரு செயலைச் செய்யலானார்.

பிரமனும் திருமாலும் காண்பதற்கு அரிய சிவபெருமான், வெண்மையான பன்றிக் கொம்பும் ஆமையோடும் வெண்மலை மாலையும் நிறைந்த தமது மார்பில், வலக்கரத்தைச் சேர்த்து, (கட்டை விரலில் கட்டு விரலை வளைத்து இணைத்து, மற்ற மூன்று விரல்களை விரித்து) மோன முத்திரையைக் காட்டி, ஒரு நொடி ஒரு செயலும் இல்லாமல் யோகம் செய்பவர் போல வீற்றிருந்தார்.

சிவபெருமான் இந்தக் காட்சியைக் காட்டிப் போதிக்க சனகன் முதலிய நால்வரும் பார்த்து, கெடுதல் அற்றஞான போதம் சொல்லால் விளக்கத் தக்கது அன்று, என்ற உண்மையை உணர்ந்தனர்; முக்கண்ணனின் அருளாலே தத்தம் மனத்திலே அடக்கத்தை அடைந்தனர்.

தத்தம் உள்ளம் அடங்கப்பெற்ற அம்முனிவர்கள், மூன்று தொழில் புரியும் மூப்படையாத முதல்வனான, சிவபெருமானின் சத்திய தவ வேடத்தைத் தியானித்து நுண்ணறிவு பெற்ற சித்திரப்பாவை போல அசைவற்று (மறந்த நினைவில்) வீற்றிருந்தனர்.

சிவபெருமான், சனகன் முதலிய முனிவர் அறியும்படி அதிசயமான ஞான போதத்தை இவ்வாறு மோன நிலையில் உபதேசித்த ஒரு நொடிப் பொழுதில் பிரமன் முதலிய தேவர்கள் அனைவர்க்கும் பலப்பல யுகங்கள்

கழிந்தன என்றால், மற்றவர்களுக்குக் கழிந்த காலத்தைப்பற்றி எபபடி எடுத்துச் சொல்ல இயலும் (மனிதனின் ஓர் ஆண்டு தேவர்களுக்கு ஒரு நாள்; இரண்டாயிரம் சதுர்யுகம் பிரமனுக்கு ஒரு நாள்; சிவனின் ஒரு நொடி, பிரமனுக்குப் பற்பல யுகங்கள் ஆகும்.)

'ஞான போதம் இப்படிப்பட்டது' என்று சனகன் முதலிய முனிவர்களுக்குச் சிவபெருமான் திருக்கர முத்திரையால் காட்டிய ஒரு நொடி நேரத்தில், சிறந்த காஞ்சிபுரத்தில் சிவனது திருமேனியைக் குழைவித்த உமை, கயிலை மலையில் சிவனுடைய விழிகளைக் கைகளால் மூடிய அந்த நாளைப் போல, தேவர்கள் யாவர்க்கும் மிகப் பல யுகங்கள் கழிந்தன

பிரமன் புதல்வரான சனகன் முதலியோர்க்குப் பெறுவதற்கு அரிய ஞான போதத்தை ஒரு நொடி நேரம் சிவன் காட்டுவதற்குள், உலகங்கள் யாவும் மனம் ஒரு நிலை பெற்றிட, ஆணும் பெண்ணும் இன்பவேட்கை இல்லாமல் இருந்தனர். அதனால், எல்லோர்க்கும் காரணமாக இருப்பவன் இவனே என்பதைச் சொல்லவும் வேண்டுமா?

பிரமன், திருமால், ஆகிய இருகடவுளர் இருந்தாலும், சிவனையே சிந்தித்து மோட்சத்தில் சேர்ந்த சுகப்பிரம்ம முனிவரையும், சிறந்த புகழை உடைய வசிட்ட முனிவரின் சொற்படி காம இச்சை இல்லாமல் கல்லைப் போல அசைவற்றுப் பல காலம் நின்ற அருந்ததி என்னும் பெண்ணையும் போல ஆடவரும் மகளிரும் காமமும் போகமும் இல்லாமல் இருந்தனர்.

இன்பம் அமைந்த மூன்று உலகங்களையும் செம்மையாகக் காத்திருக்கின்ற தாமரைக் கண்ணனாகிய திருமால் இளமை பொருந்திய திருமகள் - நிலமகள் ஆகிய மாதர்களைக் கூடவில்லை. ஒப்பற்ற மன்மதனும், அழகிய மகளிரது கலவியை விரும்பவில்லை. இவர்களைப் போலவே, முன்பு காம ஆசை பெற்றிருந்த அனைவரும் இப்போது ஆமையைப் போல மனம் ஒடுங்கும் நிலை பெற்றனர்.

பாம்பணிந்த சடை முடியை உடைய சிவபெருமான் சனகன முதலிய நான்கு முனிவர்களும் உய்யுமாறு யோக நிஷ்டையைச் சின் முத்திரையாகக காட்டிய ஒரு நொடியில், உயிர்க் கூட்டங்கள், முன்பு எவரையும் வென்ற மன்மதனும் இப்போது செயலற்று நிற்க, காமவேட்கையும கலவியும் இழந்தன. அதனால் உலகம் முழுதும் அவனே - அந்தச் சிவனே என்பது தெரிகிறது அல்லவா?

நெறபயிாகள வளரும காலததில மிகுநத நீாவறறிப போக அவை கதிாகள ஈனாமல வாடி அழிவதைப போல மணணுலகின உயிாகள யாவும சிவனது திருவருளினபடி போகததை வெறுததிருநதன அதனால கருபப விருததி இலலாமல நாளுககு நாள அவை குறைநது போயின

உலக உயிாகள தனிததனியாகி உறவு இசசை மறநதன விணணும மணணும உனனதத துறவு நிலையில ஒனறியதுபோல ஓயநது கிடநதன மேகததை வாகனமாகக கொணட இநதிரன, கயிலை மலைககுச செனறு முககண சிவனைக காணும சமயம இலலை எனறு திருமபி மேருமலையை அடைநதான அபபோது சூரபனமன மகன பானுகோபன தேவலோகததை அழிதது, இநதிரன மகன சயநதனைச சிறை செயத செயதியை அறிநதான பொன மயமான மேரு மலையில இநதிரன தன மனம ஒரு நிலை கொளளுமபடி சிவனை நினைதது பலகாலம நீணட தவம செயதான சிவபெருமான இநதிரன தவததுககு இரஙகி காடசியளிகக இநதிரன கணடு வணஙகிப போறற, சிவபெருமான, "இநதிரனே அளவிலலாத காலம வருநதித தவம செயது வலி குனறப பெறறாய உனககு எனனவரம வேணடும எனபதைச சொல" எனறு எலலாம அறிநத சிவன அறியாதவனைப போலக கேடக, இநதிரன, வணஙகி வாழததிச சொலவான "சொலல முடியாத பாவஙகளை உடைய சூரபனமன, எமமைத துனபுறுததி, என மகனையும, பிறரையும, வருததித தனது மகேநதிரபுரியில சிறை வைததான, எம தேவலோகததையும எரிததுத தீமை புரிநதான அதனால அவனை அழிதது எமமை ஆதரிகக வேணடும" எனறு இநதிரன வேணடினான

"உணமையிலிருநது நீஙகிய தககனது யாகததில இருநத பாவம இததுனபம அனுபவிததீா, நமககு ஒரு புதலவன பிறநது சூரபனமனைக கொனறு உமமை விரைவாகக காபபாறறுவான" எனறு கூறி மறைநதாா

எம இறைவனாகிய சிவன, குறறமறற அறிவினை உடைய சனகன முதலியோாககு உபதேசிததுக கொணடு கயிலையில இருநதான, உமாதேவி இமயமலையை அடைநதாள இபபடிப பிரிநதிருககும இவவிருவருககும மாசறற மகன பிறபபது எபபடி? எனறு இநதிரன யோசிததுக கவலையடைநதான

சொர்க்கலோகத்து அரசனான இந்திரன் மனக்கவலையுடன, மேரு மலையில் உள்ள மனோவதி என்னும் நகரத்தை அடைந்தான் அங்குள்ள வியாழ பகவானுடைய மனைவியான தாரையிடம் தன் மனைவி இந்திராணியை விட்டுவிட்டு, தேவர்களோடு சென்று, அதே மனோவதியில் வீற்றிருக்கும் காவலை உடைய கோயிலை அடைந்தான். அதே சமயம். சிவபெருமான் சனகன் முதலியோர்க்கு ஞானபோதம் காட்டியபடி இருக்கும் தன்மையால் படைப்புத் தொழில் செய்யாமல் துன்பத்தோடு பிரமன் வீற்றிருந்தான். அவனது பழைய முறைமை உடைய சபையை அடைந்து இந்திரன் அவன் திருவடிகளை வணங்கி, பின்பு அளவின்றிப் போற்றினான்.

இந்திரன் இவ்வாறு போற்றி நின்றதும், அழகிய தாமரையில் அமரும் பிரமன், அவனைக் கருணையோடு பார்த்து, 'தேவராசனே! வந்த காரணம் என்ன என்று கேட்டான். உடனே சூரபன்மன் செய்யும் தொல்லைகள் எல்லாவற்றையும் இந்திரனிடம் எடுத்துச் சொன்னான்.

கொடிய சூரபன்மனின் செயல்களை விளக்கி சிவன் முனிவர்களுக்கு ஞானபோதத்தைக் காடடிக் கொண்டிருப்பதை உரைத்து, பின்பு தான் செய்த தவத்தைக் கண்டு சிவபெருமான் வரம் தந்ததைக் கூறி, 'தேவர்களும் நானும் துன்பத்திலிருந்து மீளத் தக்க வழி கூற வேண்டுமென்று வேண்டிநின்றான் இந்திரன்.

இந்திரன் இவ்வாறு கூறியதும், பிரமன் அதைக் கேட்டு, "எல்லார்க்கும் முதல்வனாகிய சிவன், பெருங்கருணை உடையவன்; தன்னை அடைந்தவருக்கு உதவுபவன்; அவை தவிர, முறைப்படி செயல் புரிபவன். அதனால் அவன் நம்மை அடிமை கொள்ளும் எண்ணத்துடனே கயிலையில் யோகி போல வீற்றிருக்கிறான்"என்றான். அதனால் சிவபொருமானே இனி அருள் செய்வான்; அவ்வாறு அவன் அருள் செய்வதற்கு நாமும் குற்றமின்றி முயற்சி செய்யும் வழி இருக்கிறது. இவை அனைத்தையும் திருமாலிடம் தெரிவித்து நாம் செய்ய வேண்டிய செயல்களை விரைவில் செயவோம்" என்று கூறி, தாமரையில் வீற்றிருந்த பிரமன் தன் ஆசனத்தை விட்டு எழுந்தான். அப்போது இந்திரன், நல்லது என்று கூறி, தேவர் கூட்டம் தனக்குப் பின்னே வர, நான்முகனாகிய பிரமன் வைகுண்டத்தை நோக்கிச் செல்லத் தொடங்கினான்

எலலா உலகஙகளையுமபடைத்த பிரமன் தூய்மையான தனது மனோவதி நகரததை விடடு, அதறகு மேலே உள்ள வைகுந்தம எனனும பெரிய நகரில உளள கோயிலின அகனற வாயிலை அடைந்தான அபபோது சககரமுமசங்கும தரித்துளள சேனையின தலைவனான விடுவசேனன அதனைப பார்த்து இந்திரனுடன பிரமன் வநதிருபபதைத் தெரிவிததான

பாஞசன்னியம் எனனும சஙகை ஏந்தியுள்ள திருமால, அவாகளை இஙகு அழைத்துவா' என்று கூறினான உடனே ஒப்பற்ற காவலனான விடுவசேனன உளளே அனுப்ப, உலகஙகளைப் படைத்த பிரமன இந்திரனோடும தேவர்களோடும் சென்று, ஒப்பற்ற உயர்ந்த முனிசிரேட்டர்களால போற்றப்படும தமது வடிவத்தை (சாருப்பியத்தை) ப் பெறறுளள எண்ணற்ற திருமால்கள முறைப்படி துதிதது நிற்க, அழகிய அனநத சயனத்தின் மேல் திருமால் அமர்நதிருந்த சபா மண்டபத்தை அவர்கள் அடைநதாாகள்

அன்னவாகனம பெறற பிரமன, தேவலோகத்தை ஆளும் இநதிரனோடும், அவனுடன் வந்த தேவாகளோடும, பாம்புப் படுக்கையில இருக்கும தாமரைக் கண்ணனாகிய திருமாலின அழகிய திருவடிகளைத தொழுதான் நிலவுலகத்தை ஓரடியால அளநத பாதத்தை உடைய திருமால், அப்போது அருள் புரிந்து தன் புதலவனான பிரமனுக்கு ஓர் ஆசனத்தை முறைப்படி கொடுத்து, அதில் அப பிரமனை அமரச் செயதான் துளசி அணிந்த திருமுடியைக் கொணட திருமால அபபோது, பெரிய தாமரை மலரில வீற்றிருக்கும் பிரமனைப பார்தது, 'உனக்குப பொருந்திய படைப்புத் தொழில தடையினறி நடைபெறுகிறதா?" என்று கேட்டான்; பிரமன், "இரணியன் பயம்கொள்ளுமாறு தூணிலே வந்து தோனறிய கடவுளே! நான் சொல்லும் இதனைக் கேட்பாயாக அறிவு பொருந்திய சனகன முதலிய நான்கு முனிவர்களும என் மனததிலே முற்காலத்தில் தோனறினார்கள் அறிவிலே சிறநத அவர்களைப பாாதது, நான் பெற்றுளள இநதப பெரிய படைப்புத தொழிலைச் செய்து கொணடு இஙகேயே இருங்கள் எனறு கூறினேன், அதை அவாகள் மனததில ஏறறுக கொளளாமல, சிரித்து விடடு "நாங்கள் பாசம் எனனும் வலிய சிறையில அகபபட்டுப் படைபபுத தொழில என்று சொல்லபபடுகின்ற பெரிய விலஙகை அணிநது கொளள மாடடோம; சிவனுடைய சிறந்த திருவடியை அடைவோம - எனறு கூறி விட்டு, நாலவரும் எனனை விடடுச செனறனர்

அம்முனிவர்களாகிய என் புதல்வர்கள் பெருந் தவம் செய்தனர். அவர்கள் முன் சிவபெருமான் காட்சியளித்து, 'உமக்கு வேணடியது என்ன?' என்று கேட்டான். அவர்கள், 'எண்ணற்ற வேதங்களின் மெய்ப் பொருளை உபதேசியுங்கள்' என்று வேண்டினர். முனிவர்கள் இவ்வாறு கேட்டதும் சிவபெருமான், கயிலைமலையில் தெற்குச் சிகரத்தில் நிற்கின்ற ஒரு கல்லால மரத்தின் நிழலில் வீற்றிருந்து வேதங்களின் பொருளை நன்றாக உபதேசித்தான்; நான்கு முனிவர்களும் அவற்றில் தேர்ச்சி பெற்றார்கள்.

எம் தந்தையாகிய சிவபெருமான் பழமையான வேதங்களை முழுமையாக உபதேசித்துச் சென்ற பின்பு, அவர்கள் விண்ணுலகத்தை அடைந்து தம் மனம் ஒருமைப்படுவது அருமையாக இருந்தமையால் வருந்தி, மீண்டும் தவம் செய்தார்கள். "அப்புதல்வர்கள் நால்வரும் மேலும் பெரிய தவத்தைச் செய்து பழைய வன்மையைப பெற்ற தூய்மையான மனத்தை உடையர்வளாகி, என்னை அடிமையாகக் கொண்ட சிவபெருமான் அருளால், நிலை பெற்ற கயிலை மலைக்குச் சென்றார்.

எம் தலைவனான சிவபெருமான் தம்மிடம் வந்த சனகன் முதலிய முனிவர்களுக்கு பக்குவம் அடைந்திருக்கும் தன்மையை அறிந்து ஆகமங்களில் கூறப்படும் சரியை, கிரியை, யோகம் என்னும் அரிய பதங்கள் மூன்றையும் உபதேசித்தான்.

பிறைச் சந்திரனை அணிந்த சிவபெருமான், ஞானபோதம் என்பது வாய்ச்சொல்லால் சொல்லமுடியாத தன்மை பெற்றதால், அம் முனிவர்கள் அதைக் காட்சி மூலம் அறியும்படி மௌனமாக இருத்தலாகிய முதன்மை பொருந்திய சின்முத்திரையைக் காட்டினான்.

அப்போது சிவபெருமானின் திருவருளைக் கண்டு தம் மனம் ஒரு நிலைப்பட்டு, அப்பெருமானது திருவடித் தாமரையைத் தியானம் செய்து, தொன்று தொட்டு இருந்து வரும் ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்று பந்தங்களும் தம்மிடம் பொருந்திய தன்மை நீங்கிப்போக அம்முனிவர்கள் செயலற்று மோன நிலையில் வீற்றிருந்தார்கள்.

அகிலத்தின் அன்னையான உமையைப் பிரிந்து சிவபெருமான் எச்செயலும் இல்லாமல் யோகிபோல வீற்றிருந்ததால், முன்போல் ஆணும் பெண்ணும் கூடுதல், இல்லாமல் நிலைபெற்ற உயிர்க் கூட்டம் பெருகாமல் இருந்தது.

வையகததிலும வானததிலும உளள மனிதா தேவா அனைவரும விருமபும காமததினால ஏறபடும புணாசசி இலலாமல மனககவலை கொணடு பெருநதுனபம அடைநதாாகள எனது ஒபபறற படைபபுத தொழில நினறு விடடது இதறகு மேல நான எனன சொலவது

இது இபபடியிருகக, சிவனது வரததினாலே குறையாத செலவததை அனுபவிககும கொடிய சூரபனமன, எனககுத தினமும, அவனுககுப பஞசாஙகம சொலலும ஒரு வேலை கொடுததுளளான மேலும சொாகக லோகததில துனபததை நிலைநாடடி விடடான கலை நிறையபபெறற முழுநிலாவை இராகு எனனும பாமபு மறைபபதைபபோல, தேவாகளுடன அரசாடசி செயத இநதிரனின புதலவனான சயநதனைக கொடுநதொழில புரிநது சிறை வைததான "உயிாகள அனைததுமாகி, அருவமாகி, உருவமும ஆகி, பிரமன - விஷணு - உருததிரன எனனும மூவகையான இயலபினை உடைய முதறகாரணமுமாகி, தேவாகளுககுத தேவனாக நிறபவன சிவபெருமான அபபெருமான யோகச செயலின முறையைக காடடிக கொணடிருபபாரேயானால, உலகில மகிழசசியில திறைநது இருககத தககவா எவா? ஒருவரும இலா

பிரமனே! சிவபெருமான சனகன முதலியோருககுக காடடும மௌன நிலையை நீககி இமயமலை அரசன புதலவியை மணம புரிநது கொணடால படைபபுத தொழில முழுமையாக நடககும அசசிவ பாாவதியருககு ஒரு குமரன பிறநதால சூரபனமன கூடடம முழுதும அழியும துனபமடைநத உலகம யாவும முனபோல உயாகதி அடையும

சிவனுககு ஒரு குமரன பிறககும அநதச செயல நிறைவேறுவதறகாக நான ஒரு வழி கூறுகிறேன உலகில உளள எவரும மயககமடையுமபடி மலா அமபு எயகினற மனமதனை அனுபபினால, எம தநதையாகிய சிவபெருமான, உமையை மணநது குமரனைப பிறககச செயவான எனறு திருமால உரைததாா

## 3. காம தகனம்

**இ**நதிரனோடும தேவா கூடடததோடும சென்று முதனமை பொருநதிய தாமரைப பொகுடடின மீது வீறறிருநத பிரமன, ஐநது வகையான மலா அமபுகளையும கருமபு விலலையும உடைய மனமதன தனமுனனே வருமபடி மனததில நினைததான

"கங்கை நதியைச் சடையில் அணிந்த நெற்றிக் கண்ணை உடையச சிவபெருமான் இமயமலை அரசனின் மகளை அடைவதற்காக, உன் மலர் அம்புகளை எய்து அங்குள்ள மௌனநிலையை, நீக்கிவிட்டு உடனே இங்கு வா; இதை நீ எனக்காகச் செய்" என்றான் பிரமன்.

நாண் பூட்டிய கரும்பு வில்லை உடைய மன்மதன், பல பாவங்கள் ஒன்று சேர்ந்தாற் போன்ற ஒரு கொடிய மொழியைக் கேட்டேன் என்று மனத் துயரம் அடைந்து நெருப்பிலே வாட்டப்பெற்ற மென்மையான மலரைப் போல அழகு இழந்து, "திருமால் முதலிய தேவர்களிடம் போரிட்டு வெற்றி பெறுவதல்லாமல், சடையிலே கங்கை நதியைச் சூடிய சிவபெருமான்மீது அம்புகளைச் செலுத்தி வெற்றி பெறுவது முடியுமா? என்று கேட்க, "சிவபெருமானை வெல்வது அரிதாக இருந்தாலும், தன்னை அடைந்தவரின் துன்பதைத்தைப் போக்கும் அப்பெருமானின் அருளினாலே இச் செயல் உன் மூலம் நிறைவேறும்; மற்றவரால் இது நிறைவேறுமா? நிறைவேறாது. சிந்தித்துப் பார்த்தால், இச் செயலைச் செய்வதற்கு முதற் காரணம் நீயே என்று பிரமன் கூற; "முற்காலத்தில் எல்லா உலகங்களையும் உண்டாக்கும் பொருட்டு, குறையாத அருளினைப் பெண்ணாகப் படைத்துத் தாமே அதைத் தம் இடப்பாகத்தில் இருத்திக் கொண்ட சிவபெருமானை, எளியோனாகிய நானா, காம மயக்கம் கொள்ளுமாறு செய்வது?" என்று மீண்டும் கூறி மன்மதன், பிரமன் வேண்டு கோளுக்குச் சம்மதிக்காமல் மறுத்துவிட, அழகு நிறைந்த தாமரைப் பூவிலே வீற்றிருக்கும் முதல்வனாகிய பிரமன் மனக்கவலை அடைந்தான்; சிறிது நேரம் சிந்தனை செய்து, பின்பு பேசலானான்.

"அசுரரை வென்று செருக்கடைந்து தம்மைத் தாமே புகழ்ந்து கொண்ட தேவர் கூட்டம் வியக்குமாறு சிவபெருமான் வேறொருவன் போல வந்து, ஒரு துரும்பை நட்டு, 'இத்துரும்பைத் துணிப்பவனே அசுரரை வென்ற வீரன்' என்று கூறினான். பிரமன் முதலிய அனைவரும் முயன்று தோற்றனர். அச்செயல் மூலம் 'எல்லாம் தன் செயல்களே' என்று வெளிபபடுததினான், சிவன். எனவே 'நம்மாலும் சில செயல் முடியும்' என்பது நாணத்தக்கது. (சிவனது யோகம் நீக்கப் போகும் உன் செயலும், அவன் செயலே! சிவன் செயலே என்று பிரமன கூறினான்).

"கரும்பு வில்லை வளைத்து கையில் உள்ள அரும்பு அமபை அதில் தொடுதது அழிவில்லாத சிவபெருமானை எய்து மயக்குமாறு, அவனை

வழிபாடு செயது நீ செலவாயாக அவவாறு செலவது செயவதும அவன திருவருளால நிகழபவையே! இது சததியம அதறகுரிய காரணததை ஒரு மகன பெறுவோம எனறு இநதிரனிடம சிவன கூறிய அனறே நாம தெரிநது கொணடோம எவனாவது ஒருவன யாராவது ஒருவருககு ஏதாவது ஒரு உதவி தனனால செயயமுடியும எனறால, அதை அவா கேடகும முனபே தானே முன வநது செயதல தலையாய செயலாகும (உததமம) அவா கேடடபினபு செயது முடிபபது இடைநிலையான செயலாகும (மததிமம) கேடட பினபும உடனே செயயாமல பல நாள முடியாது என மறுததுப பினபு செயவது கடை நிலையான செயலாகும (அதமம) விரதததினால வலிமை பெறற சூரபனமனது ஏவலினால நாஙகள அனைவரும துனபமடைநது வருநதினோம அததுனபம இனி நீஙகிபபோகுமபடி சிவபெருமான ஒரு புதலவரைத தோறறுவிபபதறகாக ஒபபறற ஐநதுமலா அமபுகளைச செலுததுமாறு உனனிடம வேணடிககொணடோம எனவே எஙகளுடைய துனபததை நீககும பொருடடு உனககு மரணம ஏறபடடாலும அது குறறமாகுமா? ஆகாது புகழை அடைய விருமபுபவா எநதத தீமை செயதாலும பினவாஙகாது முனசெலவா அதனால எமது கடடளையை ஏறறுச செல இனி அதறகு மறுபபுச சொலலாதே" எனறு கூறினான பிரமன

தாமரைத தணமலரில வீறறிருககும பிரமன இவவாறு கூறவே, ஐநது மலா அமபுகளை உடைய மனமதன மனக கவலை அடைநது, "முதற கடவுளான சிவபெருமானை எதிாதது நான போரிடமாடடேன இநத ஒரு செயலைத தவிாதது, நான செயயததகக வேறு செயலைச சொலக அதை மறுககாமல செயவேன' எனறு கூறினான மனமதன இவவாறு கூறியபோது, தேவரோடு இருநத பிரமன கோபம அடைநதான "நலல விதமாகக கூறிய நமமுடைய சொறகளை ஏறக மறுததுவிடடாய நாம கூறியவாறு செயதால உயிா வாழவாய இலலையெனறால உனககு நாம கொடிய சாபம கொடுப போம உன முடிவு எனன எனபதைச சொல" எனறு கேடடான அழகிய வடிவம கொணட மனமதன 'கொடிய சாபம தருவேன எனறு கோபததோடு பிரமன கூறியதைக கேடடு மனம வருநதிப பெருமூசசு விடடான 'இனிநாம செயயததககது எது?' எனறு ஆராயநது மனததைத தேறறிககொணடு உலகைப படைதத பிரமனது முகததைப பாாததுக கூறலானான

"பிரமனே! நான இநத ஒனறை மடடும சொலவேன, கேடபாயாக! உனது வாயிலிருநது தோன்றும கெடுதி தரும சாபச சொறகளால முனனுளள

பெருமையை இழந்து துன்புற்று இறப்பதைவிட, நீல கண்டனான சிவன் முன்பு சென்று, வேகத்தை உடைய கொடிய அம்புகளைச் செலுத்தி இறந்தாலும், அதுவே சிறநதது ஒருவேளை அந்த இறப்பிலிருந்து பின்பு உய்தி பெறவும் கூடும். "பிரமனே! கோபம் கொள்ளாதே, சிவந்த சடையை உடைய சிவபெருமானோடு போர் செய்ய நான் இன்றே செல்வேன்' என்று மன்மதன் உரைத்திடவும் தாமரை மலரில் அமரும் பிரமன் மிகுந்த மகிழ்ச்சியடைந்து, மனம் களிப்புற்றுப் பேசலானான்.

இவ்வாறு பிரமன் அனுப்பியபோது வேள்விக்கு அதிபதியாகிய இந்திரன் மன்மதனைப் பார்த்து, "மகனே! நான் தேவர்களோடு துன்பப்பட்டு இழிவு பெற்றதை நீ அறிவாயாக; அதை நீக்கி நீங்காத நல்வாழ்வை எனக்குத் தர விரும்பினால், உமாதேவியைச் சிவபெருமான் கூடுமாறு செய்வாயாக" என்று கூறி, அவன் விரைந்து செல்லும்படி விடை கொடுத்தான். இவ்வாறு இந்திரன் விடை கொடுத்ததும், மன்மதன் கைகளைக் கூப்பி வணங்கி, பிரமனின் உலகமான மனோவதி நகரை நீங்கித் தான் வாழும் நகரத்துக்குச் சென்றான். அங்கே தன் மனைவியான ரதியிடம் மனோவதியில் நடந்தவற்றைச் சொன்னான். அதைக் கேட்டு மனம் கலங்கிய அவளைத் தேற்றித் தன் கருத்துக்கு உடன்படச் செய்தான். பின்பு, மணமுள்ள தேனைச் சிந்தும் மலர் அம்புகள் நிறைந்த அம்பறாத் தூளியைத் தன் முதுகில் இறுக்கிக் கட்டினான்.

அந்த மன்மதன், குளத்தில் உள்ள (தண்டுடன் கூடிய) தாமரை மலராலான காமகாண்டம் என்னும் வில்லையும், கரும்பு வில்லையும், தான் இயக்கியுளள கரும்பு வில்லையும் எடுத்துத் தோளில் வைத்துக்கொண்டான். குளிர்ச்சி பொருந்திய - இளமையான மாந்தளிர் என்னும் வெற்றியும் தறுகண்மையும் பொருந்திய ஒரு வாளினைப் பெரிய இடுப்பில் வைத்துக் கொண்டான்.

அந்த மன்மதனுக்குக் குயில்களும் சமுத்திரக் கூட்டங்களும் முறையே காகளங்களாகவும் முரசுகளாகவும் முழங்கின; அலைகள் யாவும் சாமரங்களாக அசைந்து வீசின; மீன் கொடி ஆகாயத்தில் உலாவியது;வெண்மையான முழுநிலா என்னும் குடை நிழல் செய்தது. மன்மதன் ஒப்பற்ற கிளிகள் என்னும் குதிரைகள் பூட்டப்பட்ட தென்றல் என்னும் தேரில் ரதியோடு ஏறினான். தீய சகுனங்கள அளவின்றி ஏற்பட, தான் இருந்த பழைய நகரத்தை விட்டு சிவபெருமான் வீற்றிருக்கும் திருக்கயிலை மலையை அடைந்தான்.

அந்த மனமதன கயிலை மலையைக கண்டு கையால தொழுது, தனது தேரிலிருந்து இறங்கினான தனககு அருகே வந்த பரிவாரஙகளை அஙகேயே நிறுததினான தனககுப பழககமான விலலையும, அமபுகளையும எடுததுககொண்டு புலியைத தூககததிலிருந்து எழுபபுகினற மானைப போல மனம துணிந்து ரதியுடன செலலத தொடஙகி மனமதன பிறைச சந்திரனை அணிந்த அழகனாகிய சிவபெருமான வீறறிருககும கயிலை மலை மேல ஏறினான தனது கையிலிருந்த கருமபு விலலை வளைதது ஒபபறற அமபுகளைத தொடுதது அமமலையிலிருந்து பறவைகளும விலஙகுகளும அடையாதிருந்த புணாசசி விருபபததை இபபோது நினைககச செயவது பறறிச சிந்திததான

ஒபபறறவனான அந்த மனமதன இத தனமையை நினைதது, அஙகே இருந்த விலஙகுகள மீதும பறவைகள மீதும மலா அமபுகள எலலாவறறையும செலுததினான முதறபொருளான சிவபெருமானது கோயிலின முதல வாயிலில கருணையோடு வீறறிருந்த நந்தி தேவா அசசெயலைக கண்டாா

நந்திதேவன "பகையும நடபும சிறிதளவும இலலாமல, எலலா உயிாகளுககும அமைந்துளள காமஙகளை அறிந்து, அவறறிறகு உரிய விதிகளை மேறகொண்டு, தமமை அடையும பககுவம மிககவாகளுககு மேலான முகதியைக கொடுதது, அருள செயயும சுயமபுவான சிவபெருமான முனனிலையில செலல விருமபினால பெருமை பொருந்திய மேறகு வாயிலை அடைந்து, அவவழியே உளளே செலக" என்று கூறினான **நந்திதேவன இவவாறு கூறியதும, மனமதன அவரைக கை குவிதது வணஙகி அவா கூறியதறகு உடனபட்டு, சிறபபாக ஒளிவீசும பொன பிரமபு தாஙகிய கையை உடைய நந்தி அனுமதி அளிகக, அஙகிருந்து சென்றான, மேறகுத திசையில உளள கோபுர வாயிலை அடைந்து, தேவாகளுககெலலாம தேவனாகிய சிவபெருமான நீறுபூதத நெருபபு மலை போல யோகததில வீறறிருந்த இடததை அணுகினான**

**"இவை யாவும சிவபெருமான திட்டமிட்ட செயலகள, இனி நடககப போவது எதுவாக இருககும எனபதை அறியேன நான சோமபிக கிடபபதும கூடாது விரைவாக எழுந்து, விலலையும வளைதது, அமபைத தொடுதது, சிவபெருமானது புககததே நின்று எனனால முடிந்த அளவு முயறசி செயவேன அதன பிறகு நடபபவை நடககட்டும" என்று எணணிய**

மன்மதன் குளிர்ந்த மலராகிய அம்பைத் தொடுத்து, ரதி தன்னைவிட்டு அகலாமல் உடன்வர, பிறைச் சந்திரன் திகழும் சடை முடியை உடைய சிவபெருமானது ஒரு பக்கத்தில் பொருந்தி, போரிட முயற்சி செய்தான்.

பகைவர் மீது வீசுவதற்கான மழுப் படையை ஏந்திச் சிவந்த கையை உடைய சிவபெருமான் மேல் படை செலுத்த குறி பார்க்கும் கருத்துடையவன் போல மன்மதன், சிறந்த வாசனை கொண்ட மலர் அம்புகள் ஐந்தினையும் சிவபெருமானை நோக்கிச் செல்லுமாறு எய்தான்.

மன்மதன் செலுத்திய கொடிய அம்புகள் ஐந்தும் வியக்கத்தக்க பெருமை உடைய சிவபெருமான் மீதுபட்டன. பட்டதும், பெருமான் மன்மதனைச் சற்றுப்பார்த்தார். பார்த்ததும் பெரும் நெருப்புத் திகழும் அவரது நெற்றிக் கண் மன்மதனை எரித்தது. அதனால் கயிலை முழுதும் புகைபரவிச் சூழ்ந்தது.

கரும்பு வில்லை உடைய மன்மதனது உடல் தீப்பற்றி எரிய, கயிலை மலையில் கொடிய புகையும் நெருப்பும், திருமால்-பிரமன் முதலிய தேவர்கள் எல்லோரும் கடைந்தபோது, பாற்கடலின் நடுவேயிருந்து கொடிய நஞ்சு விரைவாக தோன்றியது போலத் தோன்றியது.

எங்கும் பரவிய அக்னியிலிருந்து மேலெழுந்த புகைப்படலம் பரவிச் செல்ல, கிழக்குத் திசைக் காவலில் பொருந்திய நந்திதேவன் உடனே அதனைப் பார்த்தான்; 'உள்ளே சென்ற மன்மதன் இறந்து விட்டான்' என்பதை அறிந்து கொண்டான்; நெற்றிக் கண்ணின் நெருப்பு எரித்ததால் மன்மதனது உடல் முழுதும் சாம்பலாகிக் கீழே அவன் இறந்து போனான். அதன் பின்பு பெருமை மிகுந்த சிவபெருமான் பழைய ஞானயோகத்தில் வீற்றிருந்தான். எல்லாத் தொழில்களையும் ஒரே நேரத்தில் சிந்தித்துச் செய்து முடிக்கும் எம் பெருமானுக்கு இச் செயலா அரியது? தன் கணவனாகிய மன்மதன் இறந்த தன்மையைப் பார்த்ததும் ரதியின் உள்ளத்தில் துயரம் பெருகியது. அவள் முன்பு பெற்றிருந்த அறிவு அழிந்தது; கண்ணீர் ஆறாக ஓடியது; உடல் வியர்த்தது; மூக்குப் பெருமூச்சு விட்டது; உயிர் ஒடுங்கியது. 'இவளும் இறந்தாள்' என்று பார்த்தவர் கூறுமாறு ரதி நிலத்தில் விழுந்தாள்.

## 4. தவம் கலைந்தது

இவ்வாறு ரதிதேவி வருந்திக் கொண்டிருக்கத் தலைவனான சிவபெருமான் மோன நிலையில் வீற்றிருத்தலையும், வலிமை மிகுந்த

மன்மதன் மிக விரைவில் சாம்பலாகி அழிந்ததையும் பார்த்து, வேதங்களை அறிந்த பிரமன் முதலிய தேவர்கள் அனைவரும் மனக் கலக்கம் அடைந்தனர்

“மன்மதனை நெற்றிக்கண்ணால் எரித்த சிவபெருமானது ஆற்றலை யாராலும் மாற்றுவது முடியாது. அப்பெருமானே நம்மைக் காப்பாற்றி நம் துன்பத்தைப் போக்க வேண்டுமானால் நாம் விரைவாக அவனை வழிபடுவதே முறையாகும்” என்று அன்னப் பறவையை வாகனமாக உடைய பிரமன் முதலிய தேவர்கள் அனைவரும் கயிலை மலைக் கோபுர வாயிலின் புறத்தே போய்க் கூட்டமாக நின்று எம் இறைவனான சிவபெருமானைத் துதித்தார்கள்.

“தீமை செய்ய வேண்டும் என்னும் கொள்கை இல்லாத உன் பக்தர்கள், குற்றங்கள் செய்தாலும், அவற்றைக் குணனாகக் கொண்டு எம்மை அடிமை கொள்ளும் இறைவனே! உன் திருவடியே அடைக்கலம் என்று அடைந்த நாங்கள், சூரபன்மனால் தினமும் வருந்தி இறப்பதா? எமது பெருந் துன்பத்தைச் சிறிதும் நினைக்கமாட்டாயோ!

பண் இசைக்கும் வண்டுகள் சூழ்ந்த, நூறு இதழ்களை உடைய தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன் முதலிய தேவர்கள், நெருப்பிலே உருக்கிய அரக்கைப் போல உடல் தளர்ந்து உள்ளம் வருந்தி இவ்வாறு புலம்பி அவர்களது பாவம் நீங்கும் காலம் நெருங்க, மனம் இரங்கிச் சிவபெருமான் அருளுடைய நந்தியை நினைத்தான்.

சிவபெருமான் நந்தியை நினைததவுடன், நந்தி பெருமான் முன் வந்து நின்று வணங்கினான். வேதங்களைவிட உயர்ந்தவனான சிவபெருமான், ‘மணம் மிகுந்த தாமரையில் இருக்கும் பிரமன் முதலிய தேவர்களை எம் முன்னே விரைவாக அழைத்து வா’ என்றான். நந்தி தேவர் சிவகணங்கள் காத்து நிற்கும் முதல் வாயிலுக்கு வந்தார். அவரைக் கண்டதும் குளிர்ந்த தாமரையில் இருக்கும் பிரமனும் இந்திரனும் மற்றைய தேவர்களும் வணங்கினார்கள். ‘சிவபெருமான் உங்களை அழைத்து வரச் சொன்னார். நீங்கள் சிறிதும் வருந்த வேண்டாம், வாருங்கள், என்று அன்போடு கூறினார். நந்திதேவர் இவ்வாறு கூறிய சொற்கள் காதுகளில் ஊற்றிய அமுதமாக அமைய உடனே பிரமன் முதலிய தேவர்கள் மகிழ்ச்சியினால் பூரித்து, பதில் எதுவும் கூறத்தெரியாத மகிழ்ச்சியில் ஆரவாரம் செய்து சிவபெருமானைப் புகழ்ந்து பாடினார்கள்; ஆடினார்கள்; சுழன்று வந்தார்கள்

இவ்வாறு வணங்கிய தேவர்கள், தத்தம்மால் முடிந்த அளவு, பாம்பினைக் கச்சாக அணிந்த இடுப்பினை உடைய சிவபெருமானைப் போற்றினர். அவர்களை நோக்கி, "வாடிய மனத்தை உடையவர்களே! உங்கள் வேண்டுகோளையும் வேதனை கொண்ட நிலையினையும் விளங்கச் சொல்லுங்கள்" என்று சிவபெருமான் கூறிய அளவில், "அளவில்லாத பெரிய யுகங்களாக நாங்கள் சூரபன்மன் கட்டளையினால் ஓய்வில்லாமல் துன்புற்றுத் தாழ்வடைந்தோம். கருநிறம் பொருந்திய கண்டத்தை உடைய பெருமானே! உம்மைத் தவிர, உன் அடியவராகிய எமது துன்பத்தைப் போக்குபவர் வேறு யார் இருக்கின்றனர்?" "அந்தக் கொடிய சூரபன்மனது உயிரைப் போக்குவதற்காக ஒரு புதல்வனைத் தருவதற்காக, இமயம் என்னும் மிக உயர்ந்த மலையில் பொருந்தித் தவம் செய்யும் மாயையின் தலைவியான பார்வதியை நீ மணக்க வேண்டும்" என்று தேவர்கள் யாவரும் கூறி, சிவபெருமானின் மணம் வீசும் திருவடி மலர்களை வணங்கிப் போற்றினார்கள்; ஒளிவீசம் குளிர்ந்த கதிர்களை உடைய சந்திரனை அணிந்த சடையை உடைய சிவபெருமான் 'நல்லது'என்று சம்மதித்து, இச் சொற்களைக் கூறத் தொடங்கினார். "தேவர்களே! நீங்கள் அனைவரும் துன்பம் அடைய வேண்டாம். அந்த இமயமலையில் இருக்கும் பார்வதியை உங்களுக்காகத் திருமணம் புரிந்து, உங்கள் துன்பத்தை நீக்குவேன், இனி நீங்கள் எல்லோரும் செல்லுங்கள்" என்று சிவபெருமான் கூறினார்.

எல்லாவற்றையும் அறியும் சிவபெருமான் இதைக் கூற, பிரமனும் அசுரரால் அழகு இழந்த சொர்க்க லோகத்துக்கு அரசனான இந்திரனும், மற்றைய தேவர்களும் சிவபெருமானைத் தொழுது அனுமதி பெற்றுக் கொண்டு, தம் துன்பத்தை ஒழித்து, சிறந்த மேருமலையின் மேற்பகுதிக்குச் சென்றனர். அத்தேவர்கள் விடைபெற்றுச் சென்ற பிறகு, அங்கு நடந்த நிகழ்ச்சிகளைப் பார்த்த ரதி எம் சிவபெருமான் முன்னே சென்று வணங்கிப் போற்றி, "இறைவனே! இது நீதியா!? அழகிய தாமரையில் இருக்கும் பிரமன் முதலிய தேவர்களின் சூழ்ச்சியினால் என் கணவர் இங்கே வந்து இறந்தார். அவர் செய்த குற்றத்தை மனத்தில் கொள்ளாமல் அவரை உயிர்ப்பித்து அருள்க" என்று வேண்டினாள். ரதிக்கு அருள் செய்ய் மனம் கொண்ட சிவபெருமான் "மங்கையே! நீ மேலும் புலம்பாமல் நான் சொல்வதைக் கேள்; நாம் உமாதேவியை மணந்து கொள்ளும் பொழுது உன் கணவனை எழுப்புவோம. இப்போது செல்" என்று உரைத்தார்.

## 2. ஸ்கந்த சுப்ரமணியர்

*சதுர்புஜம் த்விநேத்ரம் சச்வேத பத்மாஸனஸ்திதம்*

*குக்குட அபய வஜ்ராணி தததும் வரதம் கரே*

*கிஞ்சித் கேசா சிகாபத்தபுஷ்பமாலாபிராவ்ருதம்*

*மேகலாம்பர சம்வீதம் ரத்ன பூஷண பூஷிதம்*

*தாம்ரவர்ண ப்ரபம் ஸ்கந்தம் ப்ரபாமண்டல மண்டிதம்*

*ஸ்கந்தரூபம் இதம் ப்ரோக்தம் .................. தாம்ரவர்ணம்.*

*இரு கண்கள், நான்கு திருக்கரங்களில் முறையே கோழிக் கொடி, அபயம், வரதம், வஜ்ரம் ; வெண்தாமரை ஆஸனத்தில் வீற்றிருத்தல்; தலைமயிரைச் சுற்றித் தவழும் பூமாலை, அரையில் மான் தோல் அரைஞாண், ரத்ன ஆபரணம், புகைநிறம்,*

*ப்ரபை முழுவதும் சூர்ய ஒளி வட்டம், புகை - சாம்பல் நிறம்.*

ரதி தனித்தவளாய் அந்த இமயமலையில் போய்த தங்கிவிட, முதலவனாகிய சிவபெருமான் தேவர்களின் துனபததைப போக்கவும், இமயம் என்னும் பெரிய மலையில் தவம செய்யும் பார்வதியை மணக்கவும் மனம் கொண்டார். கங்கை அணிந்த சிவபெருமான் தன் மனத்தில் இவ்வாறு நினைத்து, சனகன், சனந்தன், சனாதனன், சனற்குமாரன் ஆகிய நால்வரையும் இனிதாகப் பார்த்து; "சிறநத நன்மையை உடைய மைந்தர்களே! ஞானபோதம் என்பது வாயினால் சொல்லத்தக்கது அன்று; அந்த ஞானபோதம், மனத்துயரை ஒழித்து இங்கே நாம் காட்டிய மெளன நிலையோடு இருந்து எம்மைத் தியானம் செய்தலே ஆகும்" என்று அவர்கள் உணருமாறு கூறி, சிவபெருமான், "இனி நீங்கள் பெற்றிருந்த நிட்டையிலிருந்து விடுதலை பெற்று மேலாக விளங்கும் எம் திருவடிகளை அடைவீராக" என்று கூறி அம் முனிவர்களை அவரது இருப்பிடத்துக்கு அனுப்பி அருள் செய்தார்.

## 5. தவம் செய்த தையல்

சனகன் முதலிய நால்வரும் தம் இருப்பிடத்துக்குச் சென்ற அப்பொழுது, சிறந்த தவநெறியில் நிற்கின்ற பார்வதியின் ஒப்பற்ற அன்பையும், காதலையும் எல்லோரும் அறிந்து கொள்ளுமாறு காட்ட நினைத்தவராகிச் சிவபெருமான் எழுந்தார். காவி தோய்க்கப் பெற்ற ஆடையும் குடுமியும்; ஆழகிய திருநீறும் ; ஒளிவீசும் பூணூல் கமண்டலம் மழையும் பனியும் வெயிலும் தன் மேல் படாமல் காக்கும் குடை இவை தாங்கி வேதம் ஓதும் அந்தண முதியோனைப் போலச் சிவபெருமான் புறபபட்டுப் போனான். இவ்வாறு போன சிவபெருமான், உலகங்களையும் உயிர்களையும் ஈன்றெடுத்த தாயாகிய உமை இமயமலையில் மெலிவோடு தவம் செய்கின்ற சாலையை அணுகினார். அத்தவச் சாலையின் வாயிலைக் காத்து நிற்பவராகிய மகளிர் பலர், 'இவர் தூய்மையானவர், என்று எண்ணி, அவர் அருகே வந்து, திருவடியை வணங்கிப் பேசலானார்கள். "சான்றோரே! சோர்ந்த நடையினை உடைய முதியவரே! இப்பெரிய மலையை அடைவது எளிது அன்று எனினும் இங்கே வந்து சேர்ந்தது ஏன?" என்று அம் மகளிர் கேட்டனர். "வளமை மிகுந்த இமயமலையின் அரசனுடைய மகள் செயகின்ற தவத்தைப் பார்க்கும் எண்ணத்தோடு இங்கே மகிழச்சியுடன் வந்தேன்" என்று முதியோனாகிய சிவன் கூறவும் அவர்கள் அம்முதியவரை மலைமகளிடம் சேர்த்தனர்.

சோததவுடன பாாவதி இவா எம தநதையாகிய சிவபெருமானிடம பேரனபு கொணடவா எனனும எணணததால அமமுதியவனிடம பகதி தோனற கையால தொழுதாள அவளுககு உணமையான துணையாக நினற விசயை எனபவள ஓா ஆசனம இட்டு அதில அச சிவபெருமானை இருககச செயதாள பாாவதியும அருகிலே நினறாள அபபொழுது பாாவதியை அனபோடு பாாதத சிவபெருமான சொலலுககு அடஙகாத உன பேரழகு அழிய உடமபில பொருநதிய தசை ஒடுஙக மிகுநத தவம செயகிறாய இததவததின மூலம நீ எநதப பொருளை அடைய விருமபுகிறாய எனறாா

சிவபெருமான இவவாறு சொலலக கேட்டதும, பூஙகொடியைப போல அசையும இடையினை உடைய பாாவதி விசயையின முகததைப பாாதது இவருககு உடனே பதில தருக எனறு கணணால சாடை காட்டினாள அநத விசயை அடியவளாகிய எனககு இநத வேலை இடடுளளாா எனறு உணாநதவளாயக கூறத தொடஙகினாள நிலைபெறற உயிாகளுககு உயிராக (பரமாதமா) உளள சிவபெருமான இவரைத திருமணம செயது கொணடு தமது இடபபாகததில இருததிக கொளள வேணடும எனபதையே எணணி இப பாாவதி உணமையான தவததைச செயகிறாா' எனறு பாாவதியின அனபுததோழி கூறினாள முனனே தோனறிய அனைவருககும முறபடத தோனறிய பழமையுடைய சிவபெருமான சிாிததாா "துனபம ஏறபடத தவம செயவதனால உணடாககக கூடிய பயன எதுவும இலலை இததகைய பெறுவதறகு அரிய பொருளான பெருமான இவளுககு எளிதில கிடைபபாரா? கிடைககமாட்டாா எனவே இவள தவம செயத பல நாளும இவளது அழகின சிறபபு வீணாகபபோனது இனி இநதத் தவததைச செயயாமல விரைவில விடடுவிடுவதே பாாவதிககுக கடமையாகும," எனறு சிவபெருமான கூறினாா இதைக கேட்டதும மலையரசன மகள " என தவததை இகழும தீயவனே இதை உனககு விளககுவது முடியாது விளககிக கூறுவதும பாவமாகும நீ உன பொயயான வேதியா வடிவததோடு வெளியே போ" எனறு சீறினாள

அறஙகள செயயும உமையவள இவவாறு கூறியதும, "பெணணே! உனனிடம ஆசை கொணடு இஙகே வநத என செயலைப பறறி விசாரிககாமல, வெளியே போ எனறு கூறினாய இது ஏறறதோ? அனறு நான இஙகு வநத காரணம எனனவெனில வேத விதிபபடி உனனைத திருமணம செயது கொளவதே ஆகும!' எனறு முதியவன வேடததிலிருககும சிவபெருமான

கூறினார். இந்த வஞ்சக வார்த்தைகளை கேட்ட உமையவள், தன் அழகிய காதுகளைக் கையால் மூடிக் கொண்டு, மனம் பொறுக்காமல் துன்புற்று, கிழவன் இவன் போகமாட்டான். நானே இங்கிருந்து போவேன்' என்று கூறி, செம் பஞ்சு பூசிய திருவடிகள் சிவக்க அங்கே ஒரு புறமாக ஒதுங்கிப் போனாள்.

உமையவள் ஒரு புறம் போனவுடன், அழிவற்றவனான சிவபெருமான், பனி பொருந்திய இமயமலையில் இருக்கும் அந்த உமையவளின் இயல்பைப் பார்த்து, அளவற்ற கருணை பொங்க, தான் பெற்றிருந்த அந்தண வேடத்தை அகற்றி, பெருமை பொருந்திய காளை வாகனத்தின் மேலே அமர்ந்து, பல பூத கணங்கள் பின்னே நின்று போற்றக் காட்சியளித்தார்.

சிவபெருமான் இவ்வாறு வானத்தே தோன்றியதும், அதைக் கண்ட பார்வதி உடல் நடுங்கி, உள்ளம் நாணி, பலமுறை வணங்கினாள்; கைகூப்பித் துதித்தாள்; "அளவிட முடியாத அறிவாலும் அணுக முடியாத முதற்பொருளே! உன்னை அறிந்து கொள்ளும் அறிவில்லாத சிறியவளாகிய நான், உனது மாயச் செயலைப் புரிந்து கொள்ளவில்லை; அதனால் நான் உம்மை இகழ்ந்ததைப் பொறுத்தருள்க" என்று, வேண்டினாள்.

பரமசிவன், 'சிறந்த முறையில் உன் திருமணம் நடைபெறுவதற்காக நாளை வருவோம்' என்று கூறி மறைந்து போனார். போனதும், பாாவதி மனத்திலே மகிழ்ச்சியை நிறைத்துக் கொண்டு நித்தியனான பெருமானை நினைத்துப போற்றியபடி இருந்தாள். இங்கே நடந்ததை இமயமலை அரசனுக்குச் சொல்லத் தோழியர் சிலர் ஓடினர்.

சிவபெருமான் காட்சியளித்துத் திருமணம் செய்து கொள்வதாகக் கூறிய செயலை அத்தோழியர் உரைத்தனர். அதைக் கேட்ட மலையரசன், அதுவரை தன் மனத்தே இருந்த வருத்தம் நீங்கி, தன் மனைவியாகிய மேனையுடன் விரைவாகத் தவச் சாலைக்குச் சென்றான். அங்கிருந்த பார்வதியை அழைத்துக் கொண்டு தன் மாளிகை சேர்ந்தான்.

### 6. மணப் பேச்சு

இமயமலைவிடடுக் கயிலை அடைந்த முக்கண் முதல்வன், சப்த ரிஷிகளை நினைக்க, அவர்கள் அவர் முன் தோன்றினர் சிவபெருமான் அவர்களைப் பார்த்து, "இமயமலை அரசனிடம் இன்றே சென்று அவன் நமக்குப் பார்வதியைத திருமணம செய்து கொடுக்கும்படி பேசி, விரைவாக எம முனனே

வாருஙகள்" எனறாா அருநதவ சீலா எழுவரும இமயமலை அரசனைக கணடு, "நிலை பெறற உயிருககு உயிராக நிலைதது நிறகும சஙகரன, உலகஙகளை ஈனற பாாவதியை மணநது கொளள விருமபி, அதை உனனிடம தெரிவிபபதறகு எமமை அனுபபினான எனறனா அது கேடடு எலலையிலலா ஆனநதம அடைநத மலைஅரசன 'நெருஙகிய உயிாகள அனைததையும, பழமையான உலகஙகள அனைததையும பெறறெடுதத கனனியான பாாவதியைச சிவபெருமானுககுத திருமணம செயது முறைபபடி கொடுதது எனனையும அவனுககு அடிமையாகத தருவேன' எனறு உரைககவும, அநத ஏழு முனிவாகளும இமயமலை அரசன இயமபிய சொறகளைக கேடடு மிகுநத மனமகிழசசி கொணடாாகள அவாகளை அஙகே இனிதாக வாழும படி வாழததினாாகள பினபு அஙகிருநது புறபபடடு சிறபபுடைய, குளிாசசி பொருநதிய கயிலை மலையை அடைநதாாகள

கயிலையை அடைநத ஏழு முனிவாகளும பெரிய கோயிலை அணுகி நநதியிடம சேர, அநத நநதி முறைபபடி உளளே அனுபப, சிவபெருமானை அடைநதாாகள அளவறற அனபோடு அபபெருமானின திருவடிகளை வணஙகிப போறறினாாகள பினபு இமயமலையில அரசாடசி செயபவன திருமணததுககுச சமமதம தெரிவிதத செயதி முழுவதையும கூறினாாகள அதைக கேடடருளிய சிவபெருமான, "தேவமுனிவாகளே! நீஙகள செயயும தொழிலகளைத தொடாநது செயயச செலலுஙகள," எனறு சொனனான, அம முனிவாகள பெருமானின திருவடிகளை வணஙகித தம இருபபிடம செலலத தொடஙகினாாகள

## 7. விழாக் கோலம்

**க**ணககறற உயிாகள எலலாவறறிலும கலநது, அவறறின அறிவுதோறும நிறைநதிருநத சிவபெருமானுககு ஒபபறற தன மகளை முறைபபடி மணம செயயச சிநதிதது தேவாகளுககுத தேவையான வேலைகளைச செயயும தேவதசசனை (விஸவகாமா) மலைஅரசன அனபோடு நினைததான மலை அரசன இவவாறு நினைதததும தேவதசசன அவன முனபு தோனறிக கைகூபபி வணஙகி 'எனனை நினைதததது ஏன? நான செயய வேணடிய வேலை எனன? அதனைச சொலலுக' எனக கேடக, மலை அரசன அதனைச சொலலத தொடஙகினான 'எனனை அடிமையாகக் கொணட சிவபெருமானுககு நான பெறறெடுதத உலக மாதாவாகிய பாாவதியைத திருமணம செயது கொடுககப போகிறேன எனவே, இநத மலையில உளள

புதிய பெரிய நகர் முழுவதையும் சொர்க்கலோகம் போல அழகுபடுத்துக" என்றான் இமயமலை அரசன்.

அம்மலையின் மேல், மலை போன்ற கோபுரங்களையும், மன்றங்களையும், தேர்களையும், நிழல் தரும் பல மண்டபங்களையும் , மணம் வீசும் மலர்ப்பந்தல்களையும், அவற்றைப் போன்ற பிறவற்றையும் முடிவற்ற வீதி தோறும் அமைத்தான், தேவதச்சன். அத் தேவதச்சன், மரகதமணியின் ஒளியைத் தருகின்ற - குதிரையின் முகம் போல அமைக்கப்பட்ட குலைகளுடன் கூடிய வாழை மரங்களையும், கமுகு மரங்களையும், பொருந்துமாறு நிறுத்தினான்; பூந்தாதுக்களின் நறுமணம் கமழும் தோரணங்களை தொங்கவிட்டான்.

தேவதச்சன், மங்கல நிகழ்ச்சியான திருமணத்தை நடத்த, அந்தக் கோட்டையின் நடுவே அமையுமாறு, பரப்பளவு அதிகம் கொண்ட-சிறந்த பொன்னினால் அமைந்து திகழும்படி, ஒரு திருமண மண்டபம் உருவாக்கினான். அது, கயிலையில், கங்கை ஆற்றைச் சடையில் கொண்ட சிவபெருமான் வீற்றிருக்கும் கோயிலைப் போல அமைந்திருந்தது.

தேவர்கள் அனைவருக்கும் முதன்மையான தேவ தச்சன் சிந்தித்து இவ்வாறு அளவற்ற முறையில் இடங்களையும் பொருள்களையும் அமைத்தவுடன், பொன்மயமான இமயமலையில் இருந்த அரசன் அவற்றைக் கண்டு மகிழ்ச்சியடைந்தான். திருமால், பிரமன் முதலிய தேவர்களின் பெரிய கூட்டமும், சிறந்த தவத்தை உடைய முனிவர்களும், தத்தம் மனைவியரோடு, பார்வதியின் திருமணத்தைக் காண ஆவலோடு வரும்படி எல்லா இடங்களுக்கும் தூதரை அனுப்பினான், இமயமலை அரசன்.

தாமரையில் வீற்றிருக்கும் இலக்குமி முதலிய மங்கையர் அனைவரும், சிறந்த தவம் மேற்கொண்டமையால், உடல் மெலிந்திருக்கும் பார்வதியின் திருவடிகளை வணங்கி, மங்கலமாகிய திருமணத்துககுரிய அலங்காரத்தைச் செய்தனர். இமயமலை அரசனும் கயிலாயம் சென்று "எம் தந்தை போன்றவனே! முற்காலத்தில் எல்லா உலகங்களையும் ஈன்றெடுத்த அன்னையாகிய பார்வதியை விருப்பத்தோடு திருமணம் செய்து கொள்ள முடிவு செய்தாய்; சோதிட நூலில் வல்லவர்கள் குறிப்பிட்ட பங்குனி உத்திரம் இன்றைய தினமே ஆகும். இதுவே சுப முகூர்த்தம் எனவே திருமணம் செய்து கொள்ள இமயமலைக்கு வருக," என்றான்.

கருமை நிறைநத கணடததை உடைய சிவபெருமான இமயமலை அரசனைப பாாதது அளவறற கணஙகள சூழ இபபொழுதே நாம இமயமலைககு வருகிறோம நீ முனனே செலக' எனறு கூறினான உடனே இமயமலை அரசன, சிவன திருவடிகளை வணஙகிப போறறி விரைவாகத திருமபிச செனறு, தனது வளமை நிறைநத நகரததில இருநத மாளிகையை அடைநதான

இவவாறு கயிலை மலையில எலலா உயா திணைப பொருளகளும அஃறிணைப பொருளகளும வநது சோநத தனமையைப பாாதத நநதி, உளளே செனறு சிவபெருமானுககு தெரிவிகக பெருமான அவா அனைவரையும இஙகே அழைதது வருக எனக கூறினாா

நநதி தேவன முதல வாயிலை அடைநது, அஙகே கூடியிருநத உருததிர கணததவாகள, திருமால முதலிய தேவாகள, முனிவாகள ஆகிய எலலோரும ஒனறு சோநது செலலுமாறு கோயிலுககுள அனுபபி வைததான

திருமாலுககும பிரமனுககும அறியமுடியாத அரியவனான சிவபெருமான வணடுகள மொயககும கூநதலை உடைய பாாவதியிடம செலல மனததிலே நினைதது, அதைப பககததிலிருநத தலைவாகளுககுக குறிபபால அறிவிதது, இமயமலைககுச செலல எழுநதான

## 8. திருக்கல்யாணம்

**நா**னகு வேதஙகளும இருபததெடடு ஆகமஙகளும போறற சிவபெருமான பொனமயமான தனது திருககோயிலை விடடுப புறபபடடு வலிமை பொருநதிய குணடோதரனின தோளின மேலே பொன போனற தன தாளை வைதது மேலேறி ஞானவடிவமான ஒபபறற பெரிய ரிஷபவாகனததில எழுநதருளினாா வணஙகித தம வேலைகளைச செயயும அநதத தலைவாகளும, தவததால வைரமேறிபபோன நெஞசினை உடைய பூதாகளும பிற கூடடததாரும, தமமைச சூழநதுவர, சிவபெருமான கயிலை மலையை விடடு நீஙகி, பழமையான உலகததினா வாழவு பெறுமபடி இமய பெருமலை செனறாா

அநத இமயமலை அரசன தன சிறநத சுறறததாரோடு எதிரே செனறு வணஙகி அபபெருமானை புணணியம நிறைநத தனது ஔதிப பிரஸதம எனனும நகரததுககு அழைததுச செனறான ஞானத தலைவனான

சிவபெருமான் அரிய திருமண மண்டபத்தில் முன்பு சென்று, பெருமை பொருந்திய இளமையான காளை மீதிருந்து இரங்கினான். உடனே அவனுடன் வந்த அனைவரும் தத்தம் வாகனங்களிலிருந்து இறங்கினர்.

எல்லா வேதங்களும் அறிய முடியாதபடி மறை பொருளாக இருக்கும் சிவபெருமான், நந்திதேவன் தனக்குக் காட்டிய நல்ல அழகுகள் அனைத்தையும் பார்வையிட்டபடி வந்து நறுமணம் வீசும் புது மலர்களிலே அலங்கரிக்கப்பட்ட திருமண மண்டபத்தின்கண், இந்திர நீலம் என்னும் ரத்தினத்தால் செய்யப்பட்ட அழகு நிறைந்த சிங்காசனத்தின் மீது வீற்றிருந்தான்.

சிவபெருமான் இவ்வாறு வீற்றிருந்த பொழுது, வீரபத்திரன், காலாக்கினி ருத்திரன், கூர்மாண்டேசன், ஆடகேசன், ஐயனார், மற்றவர்களால் போற்றப்படும் பிரமன், திருமால், இந்திரன், முனிவர்கள், தேவர்கள் ஆகிய அனைவரும், சிவபெருமானைச் சுற்றித் தத்தமக்கேற்ற ஆசனங்கள் தோறும் அமர்ந்திருந்தனர். அப்பொழுது, அண்டத்தில் உள்ள எல்லா உலகங்களிலும் சுமையாக வாழும் அனைவரும், ஆதிநாதனான சிவபெருமானது புனிதமான சிறந்த திருமணத்தைப் பார்ப்பதற்காக வந்து கூடிய காரணத்தால் இமயமலை பாரம் தாங்காது நடுங்கியது. பொன்மயமான இமயமலை நடுங்கிய போது, போற்றுதலுக்குரிய ஆதிசேடன் தலைமேல் உள்ள பூமி என்னும் இரண்டு தராசுத் தட்டுகளுள் சுமை மிகுந்த தான வடபக்கத்துக் தட்டுத் தாழ்வடைய, மற்ற தென்பாகத் தட்டு தேவர்களும் அஞ்சும்படி மிகவும் உயர்ந்தது, தென்பகுதியிலிருந்த பூமி உயர்ந்து விட்டதால், அதைக் கண்ட தேவர்கள் அனைவரும் ஏக்கம் அடைந்தார்கள். பூமியில் உள்ள மக்கள் துன்பம் அடைந்து 'எங்களுக்கு என்ன தீமை வருமோ, என்று வாடினார்கள். முனிவர்களும் வருந்தினர். அனைவரும் 'சிவனே' என்று அலறவும், முன்னவனாகிய சிவபெருமான் அந்தச் செயலைப் பார்த்துப் புன்னகை செய்தான்; அவர்களது குறையை நீக்க நினைத்து, நந்திதேவனைப் பார்த்து, 'தனது ஒரு கையில் கடலை அடக்கி உண்ட அகத்திய முனிவனை அழைத்து வருக' என்று ஆணையிட்டான்.

குறுமுனி அகத்தியன் வந்து கொன்றைமாலை அணிந்த சிவனை வணங்கி நின்றான். நெற்றிக் கண்ணை உடைய இறைவனான சிவபெருமான் தன்னை வணங்கும் அகத்திய முனிவனைப் பார்த்து, "இந்த இடத்துக்கு எல்லோரும் வந்து விட்டதால் சொர்க்கத்துக்குக் கீழே உள்ள இந்தப்பூவுலகம் தென்பாகம

மிகுதியாக உயர வடபாகம தாழநது விடடது அகததிய முனிவனே! நான சொலவதைக கேள இநத இமயமலையை விடடு நீஙகிப போய தேன நிறைநத வயல வளம மிகுநத தெனனாடடை அடைநது, அஙகுளள வானளாவ உயாநத பொதிய மலையில வீறறிருபபாயாக அவவாறு நீ செயவாயானால உலகமெலலாம முன போலச சமமாகி விளஙகும்" எனறான

## 9. தெற்கு நோக்கிப் புறப்பட்ட குறுமுனி

"**வே**தஙகள கூறும வேளவிகளைச செயயும மாவலிச சககரவாததியின வலிமையை அடககிய, தோறறததை உடைய, வாமனனுககுத துணையாக, வேறொரு குடடை வடிவமும உணடோ' எனறு ஐயம கொணடு, வழியில எதிாபடட அவுணாகளுள சிலா எதிரே நிறகாமல ஓட, குறு முனிவனான அகததியன பெரிய பொதிய மலையை அடைநதான புனிதம பொருநதிய சிறநத அகததிய முனிவன பொதிய மலையில வீறறிருகக, புகழபபடுகினற வடபகுதிப பூமியும தெனபகுதிப பூமியும ஒரு தராசு போலச சமமாக அமைய, அபபோது உயிாகள ஆகிய அனைவரும துனபம நீஙகிச சிவபெருமானைத துதிதது மனம மகிழநது இருகக இநத உலகததைப பெறற, அனனையான பாாவதி திருமணச சாலையை அடைநது, முடிவும முதலும அறற சிவபெருமானின திருவடிகளை வணஙகினாள முனனவனாகிய எமபெருமான, அமாக எனறு கூறி, அவவாறே பாாவதி, தேவமகளிா அனைவரும போறறி அமர மலையரசன தன அனபுமகள கைகளை பரஞசுடரான சிவபெருமானின திருககரததில வைதது, என மகளை அனபோடு தததம செயது கொடுததேன' எனறு கூறி நீணட வேத மநதிரஙகளை ஓதி, அச சிவபெருமானை மருமகனாகப பாவிதது, நறுமணம உளள நலல நீரை விடடான

அபபொழுது, இமயமலை அரசன காமதேனு பொழிநத இனிய பாலையும வாழை மா பலா எனனும இனிய பழவகைககளையும நெய தேன முதலிய இனிமையான அளவறற சுவைப பொருளகளையும பொனனாலான பாததிரஙகளில வேறு வேறாகப படைதது, சிவபெருமான முனனே வைததான எம இறைவனே! இவறறை நீ உணண வேணடும எனறு கூறிக கை கூபபினான கறைபடிநத கணடததை உடைய சிவபெருமான 'நலலது , அவவாறே செயவோம எனறு அபபொருளகளைத திருககரததினால தீணடி மிகவும, பேரருள புரிநது, 'இவறறால நாம மகிழசசி அடைநதோம இனி இவறறைக கொளவாயாக' எனறு கூறினான

மலை அரசனும், அவனுடைய மனைவியும, உறவினர்களும் மற்றுள்ள அனைவரும் புனிதமான அபபொருள்களை அருந்தி, மேலானதான மோட்சம் பெற்றுள்ளவாகளைப் போல அளவற்ற ஆனநததததை அடைந்தார்கள்.

தன் கணவனான மன்மதன் இறக்க, விதவைக கோலத்தவளாகி, துன்பமுற்று, ரதி, அச்சமயத்தில் அங்கு வந்து, உயிர்கள் அனைத்தையும் பெற்றெடுத்த பார்வதியை மணந்த வளளலாகிய, சிவபெருமானின் பொன போன்ற திருவடிகளை வணங்கி, 'பாவியாகிய எனது துன்பத்தை நீக்குக' என்று வேணடினாள். உயிர்கள் முழுவதிலும் விளங்கி, அவற்றின் செயல்களை முழுமையாக உணர்ந்து, அவற்றின் பலன்களை அனுபவிக்கச் செய்யும் சிவபெருமான கணவனை இழந்த ரதி கூறிய சொறகளைக் கேட்டு, 'மங்கையே! மனம் வருநதாதே!' என்று கூறி, மன்மதன் அங்கே வந்து தோன்றும்படி மனத்திலே நினைத்தான்.

சிவபெருமான் இவ்வாறு நினைத்தபோது, நெடுமால் முதலாக உளள எல்லோரும் வியபபடைய, வருந்தி நின்ற ரதி கண்டு மகிழந்து, மேகத்தைக் கண்ட மயில் போலக் களிப்படைய, வளைந்த வில்லைக் கையில் ஏந்திய மன்மதன் அஙகுவந்து தோன்றினான். உயிர்களுக்கெல்லாம் உயிராக நிற்கும சிவபெருமான, பெரிய ரிஷப வாகனத்தில் ஏறி, பார்வதியைத் தனது ஒரு பக்கத்தில் ஏற்றிக கொண்டு, தேவர்கள், கணத்தவர்கள் நெருங்கிச் சூழ்நது வர, பொன்மயமான இமயமலையை விட்டு, வெள்ளிமலையான கயிலை மலைக்கு வந்தான்.

## 10. திரு அவதாரம்

பல நாட்கள் இவ்வாறு கழிந்த பின்பு, ஒரு நாள், பிரமன், திருமால், வேளவிக்குத தலைவனாகிய இந்திரன் ஆகியோரும், திக்குப் பாலகர்களும், புகழ் பெற்ற முனிவர்களும், சூரபன்மனது கொடுமையால், தளர்ந்து, புலம்பி, பழமையான மேரு மலையில் கூடி "சிவபெருமான் அசுரர்களுக்கு உலக ஆட்சியைக் கொடுத்து, ஞானி போல் வீற்றிருந்து எமக்குத் துன்பம் உண்டாகச் செய்தான், நாம் போர் வேண்டிக் கொண்டதும, எம்மிடம இரக்கம் கொணடு மலைமகளாகிய பார்வதியைத் திருமணம் செய்து கொண்டான். ஒரு மகனைப பெற்றுத் தநது, நமக்கு அருள் செய்யாமல் இருப்பது எதனால்? அச்சிவபெருமானது திருவடியை வணங்கி அவனை அடைந்தால், எலலா நன்மைகளும ஏற்படும் இது உறுதி. சூரியனும சந்திரனும் வலம் வருகின்ற

கயிலை மலையில் வீற்றிருக்கும் முக் கண் பெற்ற சிவபெருமானுக்கு இதனை எடுத்தச் சொல்ல நாம் அனைவரும் செல்வோம்" என்று அவர்கள் கூறினார்கள்.

அவர்கள் அனைவரும் அவ்வாறு கயிலைக்குச் செல்லச் சம்மதித்த போது, அழகு பொருந்திய தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன், "மேன்மை பொருந்திய சிவபெருமானைச் சந்திக்க ஏற்ற தருணத்தை உணர்ந்தே அங்கே செல்ல வேண்டும். அதனால் முதலில் ஒரு தூதுவனை அனுப்பி அதனை அறிவோம்" என்று கூறி வாயுதேவனை நோக்கி இதனைச் சொல்லலானான். ஆதிசேடன் அஞ்சும்படி மேருமலையிலிருந்து மேன்மை மிகுந்த மூன்று சிகரங்களைப் பிடுங்கிக் கடலில் வீசிய வீரனே! வெள்ளி மயமான - காவலை உடைய கயிலை மலையில் உள்ள கோயிலுக்குச் சென்று அடைக்கலம் அடைந்த பிறைச் சந்திரனைச் சூடிய, சடையை உடைய, சிவபெருமானைக் கண்டு நாம் சந்திக்க ஏற்ற தருணத்தை அறிந்து வருக என்று கட்டளையிட்டான்.

அக்கயிலை மலையின் ஒரு பக்கத்திலிருந்து விழுகின்ற, ஒலி எழுப்பும் அருவி நீர் நிறைந்த ஆற்றிலே படிந்து, வாசம் வீசும் அழகிய சோலையில் உள்ள மலர்களின் மணத்தை அள்ளிக் கொண்டு, மெதுவாகக் கோயிலுக்குள் வாயுதேவன் நுழையும் போது, அங்கே நின்றிருந்த நந்தி தேவன் பார்த்து, கடுங்கோபம் கொண்டு, அதட்டி, அளவற்ற அச்சத்தோடு தோன்றியதும், நந்தி தேவனின் வலிமை பொருந்திய அழகிய திருவடிகளை வணங்கி, திருமால், பிரமன, இந்திரன், பிறதேவர்கள் ஆகிய அனைவரும், கல்லால மரத்தின் நிழலில் வீற்றிருக்கும் சிவபெருமான் முன்னிலையை அடைவதற்காக யோசித்து, "அதற்குரிய சிறந்த காலத்தை அறிந்து விரைவாக வா" என்று பாவியாகிய என்னிடம் கூறினர். "சிவகணத்தவர் என்று கூறப்படுபவருள், தலைவனாகிய இறைவனே! உனது கோபத்துக்கு எதிர் நிற்பவர் யாரும் இல்லை. அத்தகைய சிறப்புப் பெற்ற நீ சிறியேனாகிய என்னிடம் கோபம் கொள்வாயோ? என் குற்றத்தைப் பொறுத்து அருள்க" என்று வாயுதேவன் நந்தியைப் போற்றி வேண்டினான். வாயுதேவன் வேண்டியவுடன், நந்திதேவன், "யாம் இப்போது உன் உயிரைப் போக்காமல் விட்டுவிடுகின்றோம். இங்கே நிற்காதே, திரும்பிப் போ!" என்று அனுப்பினான். சிறப்புப் பொருந்திய நந்தி தேவன் கட்டளையிட்டதும், வாயுதேவன் அவனுடைய திருவடிகளை வணங்கி, ஒப்பற்ற கயிலை மலையிலிருந்து விரைவாக நீங்கி, பொன்மயமான நீண்ட மேருமலையில் உள்ள தேவர்கள்

கூட்டதததை அடைநதத வாயுதேவன், பிரமன திருமால் ஆகியோரின் திருவடிகளை வணங்கி, நந்திதேவனது காவலின வலிமையினையும், அங்கே நிகழந்த செயல முழுவதையும் முறையாக உரைத்தான

தாமரை மலர் போன்ற கண்களை உடைய திருமாலும், நான்கு திசைகளை நோக்கிய நான்கு முகங்களைப் பெற்றுள்ள பிரமனும், தேவர்களுக்கு அரசனான இந்திரனும், வாயுதேவன் கூறிய சொற்களைக் கேட்டு சொல்லமுடியாத துன்பத்தை அடைந்தனர். பின்பு, தமக்குள் ஆலோசனை செய்து, "நாம் அனைவரும் இப்போதுகயிலை மலையில் உளள சிவபெருமான் முன்னே சென்று, நினைப்பதற்கு அரிய காலமாக நேர்நதிருக்கும் நமது குறைகளை அவனிடம் சொல்லுவதே முறை" என்று நினைததனா இவ்வாறு அந்தத் தேவர்கள் அனைவரும் உடன்பட்டு, செமபொனனாலான சத்தியமலையாகிய மேருவை விட்டு நீங்கி, வெள்ளி மலையாகிய கயிலையில உள்ள தெய்வத்திருக்கோயில் முன்னே சென்று, அஙகிருந்த நந்தியை வணங்கி "நந்தி தேவனே! கேட்டருள்க, எம்முடைய துன்பஙகள அனைத்தையும் நீ எண்ணிப்பார்ப்பாயாக; பிறகு, நாங்கள் இங்கே வந்திருபபதைத தேவ தேவனாகிய சிவபொருமானிடம் கூறி, எம்மை அவன் முன்னிலைக்கு அழைத்துச் சென்று காட்டு" எனறு தேவர்கள் கூறினார்கள

இப்படிப் பேசிய தேவர்கள்குழுவைப் பார்த்து, "நிலலுங்கள்" என்று அங்கேயே நிறுத்திவிட்டு, நந்தி தேவன் கோயிலுக்குள சென்றார்; நீணட சடை முடியும், நெற்றிக் கண்ணும் உடைய சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கிப் பேசலானான். "தலைமைத் தெய்வமே! தேவர்கள் அனைவரும் தமக்கு அரசனான இந்திரன், திருமால், பிரமன் ஆகியோருடன் உன்னுடைய பொன்னடிகளைத் தரிசிக்க வந்துள்ளனர்" என்று நந்தி கூறினான்; அதைக்கேட்ட குளிர்ந்த நிலாவினைச் சடையிலே அணிந்த சிவபெருமான, "அவர்களை அழைத்து வா" என்று கூறி அருளினார். அத்தேவாகள், பார்வதி இடபபாகத்தில் வீற்றிருக்கச் சிங்காதனத்தின் கண்ணே விளங்கும் எம்மை அடிமை கொண்ட இறைவனாகிய சிவபெருமானது முன்னே சென்று, அஙகே அவனுடைய திருவடிகளைத் தலையால் வணங்கி எழுந்து, மெய்யன்போடு "எங்கள் பார்வைக்குச் சிக்குவது இல்லை, நாங்கள சொல்லும் சொற்களிலும் அகப்படுவது இல்லை. மதிபபிடுவதற்கும் அகப்படுவது இலலை. ஆனால் பிரிக்க முடியாத வகையில எல்லா இடங்களிலும் இருககின்றாய. எம தந்தையே! நீ உண்டாககியுள்ள இந்த மாயையின இயலபை நாங்கள் அறிய

முடியவில்லை. இரண்டாக நிற்கும பேதம், ஒன்றாக நிற்கும் அபேதம், இந்த இரண்டு தன்மைகளும் கலந்து நிற்கும் பேதா பேதம் ஆகிய மூன்றும் அல்ல என்று சொல்லுமாறு நின்று, எல்லா உலகங்களையும் பெருமையோடு உண்டாக்கிய பெருமானே! உன செயல்கள், அரியனவாகிய வேதங்களும் அறிய முடிந்தவை அல்ல!" என்று தேவர்கள் அனைவரும் அன்பு கொண்டு போறறிய அந்நேரத்தில் கருமை தங்கிய கழுத்தை உடைய இறைவனான சிவபெருமான், அவர்களுடைய முகங்களைப் பார்த்து, "நீங்கள் துன்பம் அடைந்து மனம் வாடினீர்கள், உங்களுக்கு என்ன வரம் வேண்டுமானாலும் இப்போதே தருவோம், வேண்டிய வரத்தைக் கேளுங்கள்" என்று கூறினான். சிவபெருமான் இவ்வாறு கூறியதும், தேவர்கள் பேசத் தொடங்கினார்கள். "நாங்கள் அனைவரும் இன்று வரை கொடிய வலிமை கொண்ட அசுரர்களால் துன்புற்றோம். அத்துன்பம் நீங்கி, நன்மை மிகுந்த பழைய சிறப்பினை அடையுமாறு உன்னிடம் ஒரே ஒரு வரத்தை வேண்டுகிறோம்".

"அவன், அவள், அது என்னும் மூன்று வகைப்பட்ட உயிர்களைப் பெற்றெடுத்த பார்வதியை நீ திருமணம் செய்து கொண்ட செயல், பாவம் என்னும் கடலில் அகப்பட்ட எங்களை அடிமையாகக் கொள்வதற்கு ஒரு காரணம் காட்டிய தன்மையே ஆகும். அல்லாமல் அப்பார்வதி மூலம் இங்கே ஒரு புதல்வனைத் தருவதற்கு அன்று! "முதல், இடை, முடிவு, அருவம், உருவம், சமம், காரணம், பிறப்பு, இறப்பு, இன்பம், துன்பம் ஆகிய இவைகளில் எதுவும் இல்லாமல், வேதங்களைக் கடந்து நிற்கும் இறைவனே! உனக்கு நிகராகுமாறு ஒரு புதல்வனை உன்னிடமே தோற்றுவிக்க வேண்டும்" என்று அத்தேவர்கள் வேண்டினார்கள்.

உடனே செக்கர் வானத்தைப் போன்ற திருமேனியை உடைய சிவபெருமான், தம்மைத் துதிக்கும் பிரமன் முதலிய தேவர்கள் வேண்டியதைக் கேட்டு, "தேவர்களே நீங்கள் மனம் வருந்த வேண்டாம். ஒரு புதல்வனைத் தோற்றுவிக்கிறோம்"என்று கூறியருளினான். உடனே அறிவு மிகுந்த சான்றோர் தியானிக்கின்ற தன்னுடைய பழைய ஆறு முகங்களையும் மேற்கொண்டான். எதிரே நின்ற தேவர்கள் அனைவரும் மனம் நடுங்கி, சிறந்த அற்புதத்தைக் கண்ட தன்மையாராகித் திகழ, ஞான வடிவினான சிவபெருமான் தான் கொண்டுள்ள ஆறு திருமுகங்களிலும் திகழும் நெற்றிக் கண்கள் ஒவ்வொன்றிலும் ஒவ்வோர் அக்கினிப் பொறியைத் தோற்றுவித்தான்.

சிவபெருமானுடைய ஆறு திருமுகங்களில் உள்ள நெற்றிக் கண்களில் ஆறு தீப்பொறிகள் தோன்றின. அவை பிரமன் முதலாக உளள தேவர்கள் அனைவரும் நெருங்க முடியாதபடி வெம்மை கொண்டன அந்த வெப்பம், பூலோகத்திலும், அண்டம் முழுவதிலும் விரைவாகப் பரவியது.

பெரிய தண்டு, விளங்குகின்ற வெண்மையான சங்கு, வைரத் தன்மை பெற்ற ஒளி பொருந்திய வாள், வில், ஆகிய பஞ்சாயுதங்களை மேற்கொண்ட திருமாலும், பிரமனும், தேடிக் கண்டு பிடிக்க முடியாத சோதிமலை எல்லா அண்டங்களிலும் பரவியதைப் போல, முதல்வனாகிய சிவபெருமானின் நெற்றி விழிகளில் தோன்றிய செம்மையான தீப்பொறிகள் பூலோகம் முழுவதையும் சூழ்ந்து, பின்பு வானத்துக்குச் சென்று பழைய அண்டம் வரையும் பரவின. பார்வதியை ஒரு பாகத்தே கொண்ட பரமசிவன் தனது கையில் தாங்கிய அக்கினி, ஊழிக்காலத்தில் அனைத்தையும் அழிக்கப் பரவுவது போல அவன் விழிகள் தந்த தீப்பொறிகள் எல்லா உலகங்களிலும் பரவின.

அப்பொறிகளின் அக்கினி பரவ, உலகம் முழுவதிலும நிறைந்த வாயுக்களும் துன்புற்றுத் தளர்ந்தன; பூமியை வளைத்து நிற்கும் அலைகளை உடைய கடல் வற்றியது. அக்கடலில் உள்ள கொடிய அக்கினியான வடவைக் கனலும் தனது கர்வத்தை இழந்தது. அப்பொறிகளின் வெம்மையால் பூமி பிளவு பட்டது; மலைகள் யாவும் வெடித்தன; அட்டமா நாகங்கள் உடலை நெளித்துக் கொண்டு, நிற்கும் நிலையிலிருந்து விலகின; திசை யானைகள் புலம்பி வாடின; உயிர்க் கூட்டங்கள் நடுக்கம் அடைந்தன.

அனைத்திற்கும் தானே காரணமாக விளங்கித் தனக்கொரு காரணம் இல்லாதவனான சிவபெருமானின் நெற்றிக் கண்ணிலிருந்து வெளிப்பட்ட தீப்பொறிகள், கருணை புரிவதற்காகத் தோன்றியவை. அதனால் அவை எந்த ஓர் உயிரையும் கொல்லவில்லை, ஆனால் உயர் திணைப் பொருள்கள் அனைத்தையும், அஃறிணைப் பொருள்கள் அனைத்தையும் பயமுறுத்தின. சிவபெருமானின் இடப்பாகத்தில் இருக்கும் பார்வதியும் அப்பொறிகளின் வெம்மையைப் பார்த்து உடல் வியர்த்தாள்; உள்ளம் கலங்கினாள்; உடனே எழுந்து, தன் அழகிய கால்களில் அணிந்த சிலம்புகள் ஒலித்து ஒன்றோடு ஒன்று மோத தனது இருப்பிடத்தை அடைய ஓடினாள்.

தீப்பொறிகளின் வெம்மை எங்கும் பரவி நிறைந்ததும், செம்பொன்னால் செய்யப்பட்ட அக்கோயிலின் எல்லா இடங்களிலும் நிலைகுலைந்து சிதறி ஓடிய தேவர்கள் பெருமூச்சுடன், துன்புறும் நெஞ்சுடன் மீண்டும் எம் தந்தையாகிய சிவபெருமானின் பக்கத்தில் வந்தனர்.

சிவபெருமானின் நெற்றிக் கண் தோற்றுவித்த அக்கினிப் பொறிகள் வளைத்துக் கொண்டமையைப் பொறுத்துக் கொள்ள முடியாதவராகிச் சரணடைந்த தேவர்கள், பெரிய நான்கு தோள்களை உடைய ஞானத் தலைவனான சிவபெருமானை துதித்து இச்சொற்களைச் சொல்லலாயினர். "பிறைச் சந்திரனைச் சடைமுடியிட்டு அணிந்துள்ள சிவபெருமானே! ஆதிசேடனுடைய ஆயிரமாக நிறைந்துள்ள தலைகளின் மேல் நிற்கும் இம்மண்ணுலகையும் விண்ணுலகையும் நொடிப்பொழுதில் அழிக்க வல்ல இந்த அக்கினியை அகற்றி எமது வேண்டுகோளை நிறைவேற்றி அருளுக" என்று கூறி அத்தேவர்கள் வேண்டினார்கள். "பாஞ்சராத்திரம் என்னும் ஆகமத்தைப் பின் பற்றும் வைணவர்களால் புகழப்படும் திருமால் முதலிய தேவர்கள், கைகூப்பி இவற்றைக் கூறி வேண்டியவுடன், அழகிய கங்கை ஆற்றைச் சடைமுடியில் அணிந்த சிவபெருமான், திருக்கரத்தால் குறிப்புக் காட்டி, 'பயப்படாதீர்கள்' என்று கூறினான். மேருமலையை வில்லாகக் கொண்ட சிவபெருமான் அப்பொழுது புதிதாகத் தோன்றிய தன்னுடைய ஐந்து முகங்களையும் மறைத்து, குற்றமற்ற சிறப்பினை உடைய நல்ல முகம் ஒன்றோடு பொருந்தி பழைய தன்மையோடு தோற்றம் அளித்தான். முதற் கடவுளான சிவபெருமான் தனது கருணைத் திறத்தால் ஆறு திருமுகங்களில் திகழ்ந்த, நெற்றிக் கண்கள் தோற்றுவித்த, இம்மண்ணுலகையும் விண்ணுலகையும் நெருங்கிய அக்கினிப் பொறிகள் தன் முன்னே வருமாறு நினைத்தான். அந்தி நேரத்துச் செவ்வானம் போன்ற நிறத்தை உடைய சிவபெருமான் அவ்வாறு மனத்தில் நினைத்ததும், எங்கும் பரவி நிறைந்த பெரிய அக்கினி, முன்போல வெம்மை மிகுந்த ஆறு பொறிகளாகி, அவன் முன்னே வந்து சேர்ந்தன. அவற்றைச் சிவபெருமான் மகிழ்ச்சியோடு பார்த்தான்.

அச்சமயத்தில் குற்றமற்றவனான சிவபெருமான், எதிரே நின்ற தேவர்களுள் ஓய்வு என்னும் செயலே இல்லாத வாயு தேவனையும், பழைமை பொருந்திய அக்கினி தேவனையும் பார்த்து, சிறந்து கருணையோடு பேசலானான். "நீங்கள் இருவரும் முறைப்படி இப்பொறிகளைச் சுமந்து சென்று,

மிகுந்த நீரை உடைய கங்கை ஆற்றில் விடுங்கள். அக் கங்கை ஆறு இப்பொறிகளைச் சரவணப் பொய்கையில் அமையும்படி சேர்க்கும்; இது உங்கள் வேலை" என்று சிவபெருமான் உரைத்தான்.

"ஒரே ஒரு நொடி நேரத்தில் உலகம் முழுதும், பரவி நிறைந்த இப்பொறிகளைச் சுமந்து சென்று கங்கை ஆற்றில் சேர்ப்பதற்கான வலிமை உங்களிடம் உண்டாவதாக" என்று சிவபெருமான் கூறினான். அதைக் கேட்ட வாயுதேவனும், அக்கினி தேவனும், 'நல்லது, அவ்வாறே செய்கிறோம்' என்று சம்மதித்துத் துதித்தார்கள். இவ்வாறு நிகழ்ந்த நிகழ்ச்சியை நேரிலே பார்த்து அறிந்த சிவபெருமான், "இத் தீப்பொறிகள் சரவணப் பொய்கையை அடைந்து ஒரு புதல்வனாக வளர்ந்து, சூரபன்மனை அவனது சுற்றமோடு அழித்து விடும். இனி நீங்கள் அனைவரும் கவலை இல்லாமல் செல்லுங்கள்" என்று கூறியருளினான். இறைவனாகிய சிவபெருமான் இவ்வாறு கூறியதும், தாமரை மலர் மீது வீற்றிருக்கும் பிரமன் முதலிய தேவர்கள் அதைக் கேட்டு, "நாங்கள் உய்ந்தோம். இனி எங்களுக்கு எந்தக் குறையும் இல்லை" என்று கூறி, அப்பெருமானுடைய திருவடிகளை வணங்கி, அங்கிருந்து நீங்கிச் சென்றனர்.

வாயுதேவன், வெம்மை பொருந்திய தீப்பொறிகளைத் தலைமேல் தாங்கி, சிவபெருமான் வீற்றிருக்கும் காவல் மிகுந்த அக் கோயிலை விட்டு வெளியே வந்ததும், பிரமன் முதலிய வானத்துத் தேவர்கள் அனைவரும் நினைக்க முடியாத அளவு மிகுந்த மகிழ்ச்சியுடன் "சிவந்த நெருப்புப் போன்ற திருமேனியை உடைய சிவபெருமான், நாம் எல்லோரும் உய்யும் பொருட்டு, முற்காலத்தில் அவதரித்த வீரபத்திரன் எனும் குமரனைப் போல இப்போது தனது நெற்றிக் கண்ணிலிருந்து அக்கினியின் வடிவில் ஒரு புதல்வனைத் தந்தான். நாம் நமது பழைய நிலையைப் பெறவும், சூரபன்மன் இறக்கவும், இன்னும் சில நாட்கள் செல்ல வேண்டியது இருக்கிறது. அதனால் சிவபெருமான், தன்னை நிகர்த்த சிறந்த புதல்வனைச் சரவணப் பொய்கையில் தங்கி வளருமாறு ஒரு குழந்தையாய்த் தந்தான்," என்று கூறினர்.

திருமகள் வீற்றிருக்கும் மார்பைப் பெற்ற திருமால் முதலிய தேவர்கள் அனைவரும் வெப்பமாகி ஒளி வீசும் அக்கினிப் பொறிகளைச் சுமந்து செல்கின்ற வாயுதேவன் தமக்கு முன்னே போக, வெள்ளி மலையாகிய கயிலையை விட்டு, அந்த வாயு தேவன் பின்னே செல்லத் தொடங்கினர். ஒரு

## 3. தேவ ஸேநாதிபதி

*ஏகவக்ரம் த்விநயனம் சங்க சக்ர வரா அபயாந்*

*சர்வாபரண சம்யுக்தம் திவ்யகந்தாநு லேபனம்*

*ச்யாம வர்ணம் ப்ரபும் சைவ சுக்லயஞோபவீதினம்*

*சுச்மிதம் சாருவதனம் தேவசேநாபதிம் பஜே*

*ச்யாமவர்ணம்.*

*ஒருதிருமுகம், இருகண்கள், நான்கு திருக்கரங்களில் சங்கு சக்ரம், வரதம், அபயம், ஸர்வாபரணபூஷிதர், மணமுள்ள சந்தனப்பூச்சு, சாம்பல் நிறம், வெள்ளைப்பூணூல், அழகிய சிரிப்பு தவழும் முகம்.*

நாழிகை நேரம் கழிந்ததும், வாயுதேவன், அக்கினியின் வெம்மை பொருந்திய பொறிகளை மேலும் சுமப்பது முடியாது என்று வருந்தி, மாசற்ற பிறைச் சந்திரனை அணிந்த, சடைமுடியை உடைய, சிவபெருமானது கட்டளையினால், வலிமை பொருந்திய அக்கினி தேவனது தலைமேல் அப்பொறிகளைச் சுமத்தினான். வாயுதேவன் சுமத்தியதும், அதனைப் பெற்ற அக்கினி தேவன் உடல் வியர்த்து, புழுக்கம் அடைந்து, வருத்தத்தோடு ஒரு நாழிகை நேரம் சுமந்தான். அதற்கு மேலும் ஓர் அடி எடுத்து வைக்கவும் முடியாமல், விரைவாகச் சென்று ஒலிக்கின்ற கங்கை ஆற்றில் அப்பொறிகளை இட்டான்.

'தீப்பொறிகளைச் சரவணப் பொய்கையில் கங்கை சேர்க்கும்' என்று சிவபெருமான் கூறியதை அறிந்திருந்த கங்காதேவி, அப்பொறிகளைத் தன் தலைமேல் சுமந்து சென்றாள்; ஒரு நாழிகை நேரத்தில் சரவணப் பொய்கையில் தாமரை இதழ்கள் சேர்ந்ததைப் போலத் தோன்றும்படி அப்பொறிகளை அப் பொய்கையில் சேர்த்தாள். திருமால், பிரமன் முதலிய தேவர்கள், அச்சரவணப் பொய்கைவரை வந்து, பொறிகளைக் கங்கை அதன்கண் சேர்த்ததை மகிழ்ச்சியோடு பார்த்தனர்; பயன் பெறுவதற்கு உரிய காலம் நெருங்குவதை நோக்கிப் பயிரைக் காவல் செய்யும் வறுமையை உடைய, வளமையில் விருப்பம் கொண்ட ஏழை உழவர்கள் போல, அப்பொய்கையைச் சூழ்ந்து நின்று காத்தனர். பிரமன் ஆகாயத்தில் இருந்தும், திருமால் பூமியில் இருந்தும், இந்திரன் முதலிய திக்குப் பாலகர்களும், அழகு பொருந்திய மற்றத் தேவர்களும் எட்டுத் திசைகளில் இருந்தும், சிறப்புப் பொருந்திய சரவணப் பொய்கையைக் காவல் செய்தனர்.

ஆகாயத்திலிருந்து தோன்றியது காற்று; அந்தக் காற்றிலிருந்து தோன்றியது அக்கினி; அந்த அக்கினியிலிருந்து தோன்றியது நீர். இந்த முறைக்கு மாறாக, (அக்கினியைத் தோற்றுவிப்பது) இடம் அகன்ற - சரவணம் என்னும் பெயரை உடைய அப்பொய்கை, சிவந்த அக்கினியை மிகுந்த அருளோடு தோற்றுவித்துச் சுமந்து கொண்டதைப்போல, சிவபெருமானின் நெற்றிக் கண்களிலிருந்து தோன்றிய அக்கினியைத் தன் மீது சுமந்திருந்தது. உருவம் அற்றதாகவும், உருவம் பெற்றதாகவும் விளங்கி, முதல் அற்றதாகவும், பல பொருளாகவும், ஒரு பொருளாகவும் விளங்கி, பிரமம் என்னும் பெயர் பெற்றதாகவும் விளங்கி நிற்கும் பேரொளிப் (ஜோதி) பிழம்பே ஒரு திருமேனி பெற்று, கருணை மிகுந்த ஆறு திருமுகங்களும் பன்னிரண்டு திருக்கைகளும்

கொண்டு, உலகத்தார் உய்தி பெறுமாறு அந்த இடத்தில், ஒரு திருமுருகன் வந்து தோன்றினான்.

எவரிடமும் இல்லாதவையும், எல்லை இல்லாத சிவபெருமானிடம் மட்டும் உள்ளவையுமாகிய ஆறு குணங்களும், குமாரனுக்கு ஆறுமுகங்களாய் வந்து பொருந்தின என்று சொல்லும்படி, மலர்கள் நிறைந்த சரவணப் பொய்கையில் தங்கிய குமாரன், உயிர்களைக் காப்பதற்காக ஆறு திருமுகங்களை மேற்கொண்டான். (1. முற்றறிவு (சர்வஞ்ஞதை) 2. வரம்பில் இன்பம் (திருப்தி) 3 . இயற்கை அறிவு (அனாதிபோதம்) 4. தன்வயம் (சுதந்திரம்) 5. குறைவில் ஆற்றல் (அலுப்தசக்தி) 6. வரம்பில் ஆற்றல் (அனந்த சக்தி) என்பவையே ஆறு குணங்கள். வேதாந்தத்தினாலும், வாக்கினாலும், மனத்தினாலும் அளக்க முடியாத, எங்கும் நிறைந்து நிற்கின்ற குற்றமற்றவனான சிவபெருமான், ஆறுமுகம் கொண்ட திருவுருவத்தோடு எழுந்தருளி சரவணப் பொய்கையில் உள்ள மணம் கமழும் தாமரை மலரின் மீது கருணையோடு வீற்றிருந்தான்.

திருமால் முதலிய தேவர்கள், சரவணப் பொய்கையில் வந்து தோன்றிய முருகன், சிறு குழந்தையைப் போல, முதலில் செய்கின்ற திருவிளை யாடலைப் பார்த்து, கார்த்திகைப் பெண்களை அழைத்து, "சொல்வதற்கு அரிய பெருமை பொருந்திய சரவணப் பொய்கையில் ஆறு திருமுகங்களை உடைய ஒருவனாக விளங்கி எழுந்தருளியிருக்கின்ற மாசற்றவனாகிய முருகன் ஒரு குழந்தையைப் போலப் பிறந்துள்ளான். அவனுக்கு நீங்கள் நாள்தோறும் பாலூட்டி வளர்ப்பீர்களாக" என்று கூறினார்கள். கார்த்திகைப் பெண்கள் அவ்வாறே அச்சரவணப் பொய்கைக்கு வந்தனர்.

குற்ற மற்ற கார்த்திகைப் பெண்கள் ஆறு பேரும், நீர் நிறைந்துள்ள சரவணப் பொய்கையில் வீற்றிருக்கும் மாசற்ற முருகனை அடைந்து துதித்தனர். தன்னை அடைந்தவர்கள் வேண்டியதைக் கொடுப்பவன். அதனால், அவன், வேறு வேறான ஆறு குழந்தைகளின் வடிவத்தை மேற்கொண்டான். முருகன் ஆறு வடிவம் கொண்டதும், கார்த்திகைப் பெண்கள் ஆறுபேரும் மகிழ்ச்சி அடைந்து, தனித் தனியே அக் குழந்தைகளை எடுத்துக்கொண்டு, தங்கள் தங்கள் பெருமை மிகுந்த, மென்மை பொருந்திய மார்பில் ஊற்றெடுத்த பாலாகிய அமுதத்தை ஊட்டினர்; முருகனும் புன்னகை செய்து, ஒப்பில்லாத, கருணையோடு, பசியால் மிகவும் வருந்தியவன் போலப் பருகினான்.

முருகன தன ஆறு வடிவஙகளில ஓா உருவம தூஙகச செயதான, ஓா உருவம தூககததிலிருநது திடீரெனறு எழுநது மௌனமையான சொறகளைப பேசச செயதான, ஓா உருவம தாயின கொஙகையைப பறறிப பவளம போனற தன வாயில வைததுப பால பருகச செயதான, ஓா உருவம சிரிததபடி இருககச செயதான, ஓா உருவம விளையாடச செயதான ஓா உருவம காரணம இலலாமல அழச செயதான

ஓா உருவம தவழச செயதான, ஓா உருவம மெலலத தளாநது நடககச செயதான, ஓா உருவம விரைவாக மேலெழுநது, நிறக முடியாமல விழச செயதான, ஓா உருவம இருககச செயதான, ஓா உருவம அசசரவணப பொயகையைக காலால கலககி சுறறிவரச செயதான, ஓா உருவம தாயின மடியில அமரச செயதான, இவவாறு முருகனாகிய ஒருவனே ஆறு உருவஙகளைச செயலபடுததினான

ஓா உருவம கூததாடச செயதான, ஓா உருவம சிவநத கைகளைத தடடச செயதான, ஓா உருவம நினறு பாடச செயதான ஓா உருவம அஙகே ஓடச செயதான ஓா உருவம ஓரிடததில ஒளிநது கொளளச செயதான, இவவாறு, திருமாலும, பிரமனும, தேடுவதறகாக ஒரு ஜோதிவடிவாய நினற சிவபெருமானின திருமகனாகிய முருகன ஆறு உருவஙகளும செயலபுரியச செயதான

பரம பொருளாய விளஙகும உததமனாகிய முருகன, தன ஆறு வடிவஙகளான உருவம ஒரு நொடிப பொழுதில இவவாறே ஆயிரககணககான தொழில வேறுபாடு கொளளுமாறு எலலா உயிாகளிலும தானே நினறு திருவிளையாடல செயவதைப போல, மாயையினால அபபொயகையில அறபுதமான இததகைய திருவிளையாடலகளைச செயதான

காாததிகை எனறு கூறபபடும நடசததிரததின பிரிவில உளள ஆறு பெணகளும, குமரக கடவுளின திருவிளையாடலகள அனைததையும பாாததுப பாாதது மிகுநத வியபபடைநது, 'குழநதைகள' எனறு சாதாரணமாக மனததில நினைபபதை ஒழிததனா அககுழநதைகளை விடடு அகலாமல, அவாகளின பெருமை அறிநதமையால பயநது, தாம வழிபடுகினற தெயவஙகளைப போல மதிதது, அனபோடுகாததனா

## 11. துணைவர் வருகை

நஞ்சை உடகொண்ட சிவபெருமான தனது நெற்றிக் கண்ணிலிருந்து தோற்றுவித்த அக்கினிப் பொறிகளால உணடான வெபபத்தைத் தாங்கமுடியாது, செமமையான சிலம்புகள தன் கால்களில தாக்க, அவற்றில் இருந்த நவரததினங்கள் சிதறி விழுமாறு பதறி ஓடிய இமயமலை அரசனின் புதல்வியான பார்வதி இவ்வாறு சபித்து விட்டு, எல்லாச் சமயங்களையும உண்டாக்கிய தலைவனாகிய சிவபெருமானது பரிசுத்தமான சன்னிதானத்துக்கு வந்தாள்; அங்கே திருமாலுக்கும் முன்பு காண்பதற்கு அரியதான சிவபெருமானுடைய தாமரை போன்ற திருவடிகளைக் கண்ணால கண்டாள்; அவற்றை வணங்கிக் களிபபடைந்தாள்.

"தேவாகள் அனைவரும் வேண்டிக் கொளள, நீ தோற்றுவித்த செந்நிறத்து அக்கினிப பொறித் தொகுதியின் வலிமையினையும், வெப்பத்தினையும் உணர்ந்து, உடல் முழுவதும வெம்பிப் பதைத்து, இங்கிருந்து சென்றேன். எம் பெருந்தகையான நீ அந்த அக்கினிப் பொறிகளை வேறிடத்துக்கு அகற்றி விட்டதால் இங்குத் திரும்பி வந்தேன்" என்று சிவபெருமானிடம் தெரிவித்தாள், பார்வதி. பார்வதி இவ்வாறு கூறியதும், சிவபெருமான் அவளிடம் கருணை கொண்டு, தனது இடப்பாகத்தில் இருத்திக் கொண்டான். அவ்வாறு இருந்த பார்வதி முன்பு பயந்து ஓடிய போது சிதறி விழுந்த சிலம்பின் பரல்களான மணிகள் யாவும், என்னை அடிமையாகக கொண்ட அப்பெருமானது முன்னிலையில் இருந்தன. சிவபெருமான், அளவிடமுடியாத நவரததினங்களில் தோன்றிய உமாதேவியின் நிழல் உருவங்கள் அனைத்தையும் கண்ணினால் பார்த்தான்; அவற்றிடம் கருணை கொண்டு, 'வெளியே வாருங்கள்' என்று கூறினான்; உடனே ஒரு வகை ரத்தினத்துக்கு ஒரு 'சக்தி' வீதம் ஒன்பது வகை ரத்தினங்களுக்கு ஒனபது சக்திகள், தேவர்கள் செய்த நல்ல தவத்தினால் தோன்றினார்கள். இமயமலை அரசனின் திருமகளான பார்வதியைப் போன்ற அந்த ஒன்பது சக்திகளும், சிவபெருமானின் சிறந்த திருவடிகளை வணங்கி, அவனிடம் தம் மனத்தால் காதல் கொண்டனர். அவர்கள், சிவனது பிட்சாடனவடிவத்தைக் கண்ட தாருக வனத்து முனிவர் தம் மனைவிகளைப் போல உடனே கருப்பம எய்தினர். இந்நிகழ்ச்சிகள் அனைத்தையும் உமையவள் கண்டாள்.

இநத உலகஙகளைப பெறறெடுதத உமையவள அசசகதிகளிடம மிகுநத கோபமகொணடாள, அதனால கூடடமாகிய நீஙகள ஒனபது பேரும எமககுப பகையாகிய காரணததால, சுமையாகிய இநதக கருபபதேோடு பல காலம இருபபீரகளாக' எனறு சாபம தநதாள அபபொழுது அஙகே நினற ஒனபது சகதிகளும பயநது உடல வியாததாாகள, அநத வியாவைத துளிகளிலிருநது ஒழியாத வலிமை உடைய இலடசம வீராகள தேவாதி தேவனாகிய சிவபெருமானது அருளினால சூரியாகள கூடடம போல வநது அவதரிததாாகள

அநத இலடசம வீராகள அனைவரும சிறநதவையாகிய சிவனுடைய திருபபெயாகளை அனபு கொணடு கூறி அலஙகரிககபபடட வலிய திருவடிகளை வணஙகிப பெருமான முனபு நினறனா உடனே தூயமை பொருநதிய நாயகனான சிவபெருமான, அவவீராகளைப பாாததுப புதலவாகளே! நான கூறுவதைக கேளுஙகள, நீஙகள அனைவரும, உஙகள வலிமையினால இநதிரன முதலிய தேவாகளுடைய பகைவாகளான அசுராகளைக கொலவதறகு எமமுடைய புதலவனான கநதவேளுககுப படை வீராகளாக விளஙகுவீராக!' எனறு கூறி அருளசெயதான

நவரததினஙகளிலிருநது உதிதத சகதிகளின வயிறறில உளள கருவில புகுநத நநதி கணததவாகள, சிவபெருமானைத தியானிததுச செயயும யோக சாதனையோடு இருபபதால கருபபம தாஙக முடியாத சுமையாகி, நாளுககு நாள பாரம மிகுநதது நவசகதிகள கருபபததைப பெறறெடுகக அருள புரியுமபடி உமையமமையோடு சிவனை வணஙகினாாகள 'உமையவளே! உனது சிவநத திருவடியில பொருநதிய சிலமபிலிருநது உதிதத இசசகதிகள, நீ கொடுதத சாபததால கருபபததை மிகபபல நாள சுமநது மிகவும தளாநதாாகள எனவே இனிச சிறுவாகளைப பெறுமாறு அருள புரிக" எனறு சிவபெருமான கடடளை இடடதும உமையமமை 'நலலது' எனறு சமமதிதது, கோபம நீஙகிப புனனகை செயதாள நவசகதிகளைப பாாதது, 'இனி நீஙகள வீராகளைப பெறறெடுஙகள எனறு கூறினாள தேவியின திருவடிச சிலமபிலிருநது உருவெடுதத அநத நவசகதிகள உமையவளின சொறகளைக கேடடுத தம துயரததை நீககினா, மேனமை மிகுநதவரான சிவ-பாாவதியின திருவடிகளை வணஙகிப போறறி விரைவாக விடைபெறறுக கொணடனா, பினபு அஙகிருநது நீஙகி, வேறொரு பககம சென்று புதலவரைப பெறறனா

சுந்தரரும், ரிஷப முகத்தை உடைய நந்திதேவரும எம் தந்தையாராகிய சிவபெருமான் அருளிய அதே பெயர்களைக் கொண்டு முன்பு மண்ணுலகத்தில் அவதரித்தனர். அதைப் போலவே நந்தி கணத்தின் தலைவராகிய ஒன்பது பேரும், முன்பு தமக்கிருந்த அதே பெயர்களுடன், இதுவரை இருந்த தடை நீங்கப் பிறந்தார்கள். பெரிய எலியினை வாகனமாக உடைய விநாயகனின் தம்பியாகிய முருகனது திருவருளால், சூரபன்மனால் ஏற்படும் துன்பத்தைத் தேவர்கள் பெறாமல் அழிபபதற்காக, அழகு நன்கு பொருந்திய மாணிக்க வல்லியிடம் உலகத்தார் அனைவரும் வியப்படைய, வீரவாகு வந்து பிறந்தான். தன்னைப் பிணிக்கும் விலங்கை அணியாமல் நீக்கும் வலிமை பொருந்திய யானையின் முகத்தை உடைய தாரகாசுரனும், சூரபன்மனும், சிங்கமுகாசுரனும் ஆகிய இவர்களது பெரிய படையாகிய கரிய வலிய இருளைப் போக்கும்படி தோன்றிய சந்திரனைப் போல, திரட்சியைப் பெற்ற சூதாடு கருவியை நிகர்த்த-ஆபரணங்களை அணிந்த கொங்கைகளை உடைய, தெய்வத் தன்மை பெற்ற முத்துவல்லியிடம் வீரகேசரி தோன்றினான்.

மானிடர்க்கும் தேவர்க்கும் பெருந்துன்பம் தரும் வலிமை வாய்ந்த அசுரர் நிறைந்துள்ள வீரமா மகேந்திரத்தில் உள்ள சிறந்த வளங்கள் அழியும்படி, சிவந்த நிறத்தை உடைய சிலம்பிலிருந்து வெளிப்பட்ட புட்பராக வல்லியிடமிருந்து, சிறப்பால் தகுதிபெற்ற வீரமாமகேந்திரன் வந்து அவதரித்தான்.

சூரியன் என்னும் ஒப்பற்ற கடவுளும், வடவா முகாக்கினியும், குளிர்ச்சி பொருந்திய புதிய சந்திரனும் நாணம் கொள்ளும்படி ஒளிவீசுகின்ற கோமேதக மணியில் தோன்றிய கோமேதகவல்லியிடம், தேவர்கள் செய்த பெரிய தவத்தினாலே வீரமாமகேச்சுரன் வந்து பிறந்தான். பெரிய சொர்க்கலோகத்தில் உள்ள தேவர்கள் மகிழ்ச்சி அடையுவும், அசுரர்களாகிய அனைவரும் அழியவும், தருமம் தழைத்தோங்கவும், ஒளி பொருந்திய வயிடூரிய மணியில் தோன்றிய வயிடூரிய வல்லியிடம், வீரக்கழலை அணிந்த காலை உடைய, சிறப்புப் பொருந்திய வீரமாபுரந்தரன் என்பவன் தோன்றினான்.

சூரபன்மனின் வளமும் அவனுடைய தம்பியரின் வளமும், அவர்களைச் சூழ்ந்து வாழும் வீரர்களின் வளமும், தேவர்களின் துயரமும் அழியும்படி, ஆத்திமலர்-பாம்பு-மணம வீசும் கொன்றை மலர் ஆகியவற்றை அணிந்த

சடையை உடைய சிவபெருமானது கருணையினாலே, வயிரவல்லியிடம் வீரராக்கதன் வந்து பிறந்தான். ஒரு பெரிய மேரு மலையைத் தூக்கி ஒரு கண நேரத்தில் திரிபுரத்தின் அழிவை உண்டாக்கியவனான சிவபெருமானது திருவருளினாலே கடலிலிருந்து வடவாமுகாக்கினி விரைவோடு மேலெழுதலபோல, மரகதவல்லியிடம் வீரமார்த்தாண்டன் அவதரித்தான.

மதமயக்கம் கொண்ட பெரிய யானைப்படை,தாவிச் செல்லும குதிரைப்படை, செறிந்த மணிகளை அணிந்த தேர்ப்படை, கொடிய அசுரர்கள் குழுமிய காலாட் படை ஆகிய நாற்படைத் தொகுதியையும் கண் இமைக்கும் நேரத்தில் அழிப்பதற்காக போரில் ஆரவாரித்துக் கொல்லுகின்ற வீரனாகிய வலிமை கொண்ட வீராந்தகன், பவளவல்லியிடம் அவதரித்தான்.

சங்கு போன்ற கழுததை உடைய இந்திர நீலவல்லியிடம், தூணில் தோன்றிய பெரிய நரசிங்க மூர்த்தியையும், கடலிலே முற்காலத்தில் தோன்றிய ஆலகாலத்தையும், வடிவாமுகாக்கனியையும் போல, வீரதீரன் என்னும் பெயரை உடைய வலிமை மிக்கவன் வந்து பிறந்தான.

சிவபெருமான் கூறியதைக் கேட்டு உமாதேவி ஒன்பது வீரர்களுக்கும் அருள்புரிந்தாள்; சிவபெருமான், அவர்கள் அனைவருக்கும், ஒளி பொருந்திய வாள்கள் வேறு வேறாகக் கொடுத்தான்; பின்பு "நவசக்திகளின் வியர்வையில் தோன்றிய ஓர் இலட்சம் புதல்வர்களோடு நீங்களும் மனம் ஒன்றி, உங்களுக்குத் தலைவனாகிய முருகனைப் பிரியாமல் அவன் இடுகின்ற வேலைகளைச் செய்து வாழ்வீராக" என்று கூறிட, நவ வீரர்களும் சிவபெருமானை வணங்கி பணிந்தனர்.

## *12. சரவணப் பொய்கை*

**அ**டைதற்கரிய சிறப்பினை உடைய கயிலை மலையில் வீற்றிருப்பவனும், ஆணவம் மிகுநதவர்களால காண முடியாதவனுமான பரம் பொருளாகிய சிவபெருமான், சுமை மிகுநத கருப்பத்தை அடையாமலே எல்லா உயிர்களையும பெற்றெடுத்த கன்னிகையாகிய பார்வதியிடம, "துன்பத்தை அனுபவிக்கும் பிரமன முதலிய தேவர்களது சோகம் தீருமாறு, முன்பு நமது நெற்றிக் கண்ணில தோன்றி, சிவந்த தாமரை மலர்கள் நிறைந்த பெரிய சரவணப் பொய்கையில் இருக்கும் உன் மகனான முருகனை இநத மலைக்கு அழைத்து வருவதற்காகச் செல்வோம், வருக" என்று உரைத்தான.

சிவபெருமான் கூறியதைக் கேட்டதும் உமாதேவி, ஆனந்தமும் அன்பும் கொண்டு எழுந்தாள்; 'என்னுடைய சிறந்த தலைவனே! நம்முடைய சிறந்த குழந்தையை நாம் அழைத்துக் கொண்டு வருவோம், புறப்படுக' என்று கூறினாள்.

சிவபெருமான் காளையின் பிடரி மீது உமையோடு எழுந்தருளியதும், சொர்க்க லோகத்தில் உள்ள தேவர்கள், 'நம் தீய வினைகளின் தொகுதி முழுவதும் அழிந்தது' என்று கூறி , நந்தி கணத்தவர்களோடு வந்து நின்று பெருமானை வணங்க சிவபெருமான் உமாதேவியும் தானுமாகத் தனது திருக்கோயிலை விட்டு, கயிலை மலையை விட்டு நீங்கி, பொன்னாலாகிய நீண்ட இமயமாகிய பெரிய மலையின் பக்கத்தே சென்று, அன்னப் பறவைகள் விளையாடும் சரவணப் பொய்கையை அடைந்தான்.

தாமரை பூத்த அச் சரவணப் பொய்கையில் ஆறு திருவுருவங்களை மேற்கொண்டு உலாவித் திகழ்ந்திடும் ஒப்பற்ற சிறந்த முருகன், தேவர்களின் தலைவனான சிவபெருமானுடன் உலகங்களைப் பெற்றெடுத்த உமாதேவியைக் கண்டு தன் சிறந்த முகங்கள் மலர்ந்தவனாகி மனம் மகிழ்ந்தான். சிவபெருமான் உமையை நோக்கி, "இங்கிருக்கும் உன் மகனை அழைத்து வா" என்று கூறிய உடனே, உமாதேவி அழகு மிகுந்த காளையிலிருந்து விரைவாக இறங்கி, மனத்திலே பொருந்திய பேரன்போடு, மகனை நோக்கிச் சென்றாள். உலகங்களைப் பெற்றெடுத்த உமாதேவி சரவணப் பொய்கையில் இருந்த தன் புதல்வனின் ஆறு உருவங்களையும் தன் இரண்டு கரங்களால் அன்புடன் எடுத்து அணைத்தாள்; அணைத்ததும், ஆறு திரு முகங்களும் பன்னிரண்டு திருக்கரங்களும் அமைந்து ஓர் உருவமானது. எலலா உயிர்களும் ஒடுங்குகின்ற ஊழிக்காலத்தில் எம்பெருமானுடைய சக்திகள் யாவும் முன்னே இருந்தபடி ஒன்றாகச் சேர்ந்த தன்மை போல, முடிவில்லாத ஆறு திருவடிவங்களும் ஒரு வடிவமாகி விட, உமாதேவியின் புதல்வனான முருகன், கந்தன் என்னும் பெயரைப் பெற்றான் (ஸ்கந்தன் என்ற வடமொழிச் சொல்லுக்கு ஒன்றாக்கப்பட்டவன் என்று பொருள்). உமாதேவி, திருமுருகனை சிவபெருமானது முன்னிலைக்கு அழைத்துச் சென்று, அவன் பெருமானை வணங்குமாறு செய்தாள். வணங்கிய புதல்வனைச் சிவன் தனது அழகிய கையினால் எடுத்து, மார்பின் மேல் சேர்த்து அணைத்து, மிகுந்த திருவருளின் சிறப்பால் தன் பக்கத்தே இருக்குமாறு செய்தான். கார்த்திகை பெண்கள் சிவபெருமானது முன்னிலையில் பணிந்து

எழுந்தனர். பெருமான அவர்களுக்கு அருள புரிந்தான். "கந்தனை நீங்கள் பாலூட்டி வளாத்த முறையினால், இவன் உஙகள் மகன் என்று உணரும்படி கார்த்திகேயன் எனனும பெயரைப் பெறுவானாக! உங்கள் நாளான கார்த்திகைத் தினத்தில் உவகையோடு இம்முருகனுடைய வலிய பாதங்களைப் பூசிப்பவர்கள் எததகையவரானாலும், நாம் அவர்களுடைய குறைகளைத தீர்த்து முக்தியைத தருவோம்" என்று சிவபெருமான் உரை செய்தான்.

'நலலது, அவ்வாறே செய்கிறோம்' என்று அந்த முனி மைந்தர்கள் கூறிச் சிவபெருமானிடம் விடைபெற்றுச் சென்றார்கள். பின்பு, அழகிய சடை முடியினை உடைய சிவபெருமான், கார்த்திகைப் பெண்களுக்கும், திருமால் பிரமன் முதலாக நினற தேவர்களுக்கும் அருள் புரிந்து, அவர்கள் தத்தம் இருப்பிடங்களுக்குச் செல்லுமாறு விடை கொடுத்து அனுப்பி விட்டு, வெள்ளி மலையாகிய கயிலை மலைக்குச் சென்றான். பகைவாகளின் முப்புரங்களை எரித்து அழித்த சிவபெருமான், கயிலைக்குச் சென்று, காளை வாகனத்திலிருந்து ஒப்பற்ற வலிமை பெற்ற முருகனோடும் பார்வதியோடும் இறங்கி நடந்து, பொன் மயமான பெரிய கோயிலின் அவையிலே இருந்து சிங்காதனத்தின் மேல் அருள்புரிந்தவாறு வீற்றிருந்தான்.

உமாதேவியின் காற்சிலம்பிலிருந்து தோன்றிய ஒன்பது சக்திகள் பெற்றெடுத்த புத்திரர் ஒன்பது பேரும், மற்றுமுள்ள தூய்மையான இலட்சம் வீரர்களும் முதல்வனாகிய முருகனை வணங்கி, பூக்களைச் சொரிந்து போற்றினார்கள்; அவர்கள் அம் முருகனைத் தமது உயிராகக் கொண்டு அவனருகே இருந்து பணிவிடை செய்தார்கள். தேவி, மருகனின் திருவிளையாடல்களைக் கண்டு அதிசய முற்று, அழிவில்லாதபடி இருக்கும் முதல்வனாகிய சிவபெருமானுடைய இரு திருவடிகளை வணங்கி, "எம் பெருமானே! ஆறுவடிவங்களும் ஒன்றாகக் கூடிய நம்முடைய மகன் இச்சிறிய பருவத்திலேயே நிகழ்த்தும் திருவிளையாடல்கள் எனக்கு வியபபைத் தருகின்றன. ஆராய்ந்து பார்த்தால் மாயச் செயல்கள் செய்வதில அவனைப் போன்றவர் எவரும் இல்லை. அதில் அவன் உம்மை போன்றவன் அதனால் அவன் பெருமை அடைந்த முறையைச் சொல்லுக" என்று பெருமானிடம் உமாதேவி வேண்டிட, சிவபெருமான், எம்முடைய நெற்றிக்கண்ணிலிருந்து இங்கே தோன்றிய குமரனைக் கங்காதேவி சுமந்து சென்று சரவணப் பொய்கையில் சேர்த்த காரணத்தால, அவன் காங்கேயன் என்னும் பெயரைப்

பெற்றான். அழகிய தாமரை மலர்கள் நிறைந்த சரவணப பொய்கையில் வளர்ந்ததால், அவன் சரவணபவன் என்னும் பெயரைப பெற்றான்.

"கார்த்திகைப் பெண்கள் தாயாக வந்து தம் மார்பகத்தின் பாலை ஊட்டியதால், பொருந்துவதாகிய கார்த்திகேயன் எனனும் ஒரு பழமையான பெயரைப் பெற்றான். நீ அந்தப் புதல்வனின் ஆறு வடிவங்களையும் சேர்த்து ஒரு வடிவமாக்கினாய்; அதனால் அவன் கந்தன என்னும் ஒரு பெயரைப் பெறறான். "எமக்கு நல்ல முகங்கள் ஆறு உளளன அல்லவா? அவையே முருகனுடைய ஆறு முகங்களாக அமைந்தன. பிரணவம் ஓர் எழுத்தாக முதலில் சேர்த்து உச்சரிக்கப்படும பஞ்சாட்சரமந்திரத்தின் ஆறு எழுத்துகளும் ஒன்றாகச் சேர்ந்து உன் மகனது பெயரில் ஆறு எழுத்துகளாக அமைந்தன. (சிவனின் ஐந்து முகங்களுடன் உமையின் ஒரு முகம் சேர்ந்து ஆறு முகங்களாயின. சிவனின் ஆறு எழுத்து - ஓம் நமசிவாய. முருகனின் ஆறு எழுத்துகள்; சரவணபவ). தேவர்கள் மேருமலையின் உச்சியைச் சேர்ந்தபோது, அங்கே, சிறந்த ஆறுமுகங்களுடன் திகழ்கின்ற இறைவன் முருகன் செய்த திருவிளையாடல்களைக் கண்டு, அம்முருகனின் உருவத்தைக் காணாமல் துன்புறும் மனத்தோடு இருந்த இந்திரனைக் கண்டார்கள். அத் தேவர்கள் யாவரும் இந்திரன் முன்னே சென்று அவனுடைய திருவடிகளை வணங்கி அங்கே நின்றார்கள். அவர்கள், "பரந்த கடலில் சூழப்பட்ட வையகத்திலும் வானகத்திலும் அமைந்த பழைய நிலைமைகள் எல்லாம் மாறும்படி செய்தவர் யாரோ? அவரை யாம் அறியவில்லை. அசுரர்கள் இச் செயல்களைச் செய்ய மாட்டார்கள். நிகழ்ந்த இச் செயல்கள் எப்படி ஏற்பட்டன?" என்று கேட்டார்கள்.

தேவர்களுக்கு அரசனான இந்திரன், அவர்கள் கூறியதைக் கேட்டு, "நானும் இதே விஷயத்தை ஆராய்ந்து கொண்டிருந்தேன். இதன் உண்மையைச் சிறிதளவும் அறிய முடியவில்லை. இதை அறிய வேண்டுமானால் அனைவரும் சென்று, அழகிய பொன் போன்ற திருமேனியை உடைய பிரமனைக் கேட்போம். புறப்படுங்கள்" என்று கூறினான்.

இந்திரன் 'புறப்படுங்கள்' என்று கூறியவுடன் அந்த இந்திரன் முதலிய தேவர்கள் உண்மையான தவத்தைச் செய்துள்ளமையால், அழிவு ஏற்படாதவாறு உலகங்களில் திருவிளையாடல் செய்து கொண்டிருந்த ஆறுமுகன், அவர்கள் கண்ணில் தெரியுமாறு, ஒரு முகத்துடன் சிறு குழந்தை போல் அந்த மேரு மலையில் காட்சியளித்தான்.

"இவனை வலிமை இலலாத குழந்தை என்று நினைக்க மாட்டோம். இவனது வலிமையை ஆராய்ந்தால், கொடுமையான அசுரர் கூடடத்தாரைவிடக் கொடியவன். எவரும் அடையாத மாய வித்தைகளைப் பெற்றவன். இவனுடன் இங்கே போர் செய்து வெற்றி கொள்வோம்" என்று அத் தேவர்கள் முடிவு செயது ஒன்று திரண்டார்கள்.

இந்திரன் ஐராவதம் என்னும் யானையின் பிடரி மேலே அமர்ந்தான்; வலிமை பொருந்திய வச்சிராயுதம், அழகிய ஒளி பொருந்திய வாள், வேல், வில் ஆகிய படைக் கருவிகளைக் கையில் எடுத்துக் கொண்டு, வலிய கொடிய போர்க் கோலத்தை மேற் கொண்டு முருகனைத் தன் படையுடன் சூழ்ந்து கொண்டான். குளிர்ச்சி பொருந்திய செந்தாமரையிலும் வெண்டாமரையிலும் வாழ்கின்ற திருமகளையும் கலை மகளையும் தன்னுடைய இரண்டு கண்களாகக் கொண்டவள், உமாதேவி. அந்த உமை பெற்றெடுத்த கந்தன், தேவர்கள் பகைவர்கள் போலத் தன்னைச் சூழ்ந்து நிற்பதைக் கண்டு சிரித்தான். அதைப் பற்றிக் கவலை கொள்ளாமல் அவன் தனது திருவிளையாடலைச் செய்தான்; அப்பொழுது வேள்வியின் வேந்தனாகிய இந்திரன், வில், வாள், வேல் முதலிய பதினெட்டு ஆயுதங்களை முருகன் மீது செலுத்தினான். அவை யாவும் தேன் நிறைந்த மலர்களைப் போல் அவன் மீது பட்டு வீழ்ந்தன. அதனால் இந்திரன், வச்சிராயுதத்தை அவன் மீது செலுத்தி ஆரவாரம் செய்தான்.

வச்சிராயுதம் என்னும் ஒப்பற்ற கொடிய ஆயுதம், கந்தனது மார்பில் பட்டு, நுண்மணல் போலப் பொடியாகிப் போனது. தேவேந்திரன் அதைக் கண்டு துன்புற்று வருந்தினான். அவனுடைய பழைய ஐராவத யானை அதனால் கோபம் கொண்டு பிளிறி, முருகேசன் முன்பு சென்றது. உமா தேவியின் புதல்வனான முருகன், தன்னை நோக்கி வரும் யானையைக் கண்டான்; உடனே ஒரு வில்லையும் பல அம்புகளையும் மனத்தினால் விரைவாக உண்டாக்கிக் கொண்டான் அந்த உயர்ந்த வில்லை வளைத்து, 'ஒல்' என்னும் ஒலியுண்டாக நாணின் ஒலியை எழுப்பினான்; பின்பு ஒளி பொருந்திய ஓர் அம்பை அந்த யானையின் நெற்றியினுள்ளே புகும்படி செலுத்தினான்.

முருகவேள் செலுத்திய அம்பு, தேவர்களில் உயர்ந்தவனான இந்திரனது ஐராவத யானையின் நெற்றியின் உள்ளே விரைவாகச் சென்று, அதன் உயிரைக்

கவர்ந்து கொண்டு வெளியே சென்றது. அதனால் அந்த யானை கரிய மேகமும் கலங்கும்படி அலறி விழுந்து இறந்தது.

தனது ஒப்பற்ற ஐராவதம் இறந்து போனதும், விண்ணுலகத்தின் வேந்தனான இந்திரன் 'ஐயோ' என்று அலறி அதன் அருகே சென்று நின்றான். மிகுந்த கோபத்தோடு மின்னலைப் போன்ற தனது வில்லை வளைத்தான். முன்னோனாகிய சிவபெருமானின் புதல்வன் உடனே இந்திரனின் தோளை நோக்கி ஓர் அம்பைச் செலுத்தினான். குமரவேள், தேவர்க்கு அரசனான இந்திரன் மீது ஓர் அம்பைச் செலுத்தி, அதைக் கண்டு மயங்கிய மனத்தை உடையவனாகிய இந்திரன், வலிமை இழந்து, வருத்தம் அடைந்து, காற்று போல் அம்பைச் செலுத்தும் வில் தொழிலைக் கை விட்டான். அதற்குப் பதில் கையிலிருந்த வேல் ஒன்றை, குகனாகிய முருகன் மீது எறிந்தான். சக்கராயுதத்தைப் பெற விரும்பி, 'சிவனே! சங்கரனே!' என்று திருமாலால் போற்றப்பட்டவன், சிவபெருமான். அந்தப் பெருமானின் புதல்வனான முருகன் இந்திரனின் கொடியை ஓர் அம்பால் தூளாக்கினான்; அந்த இந்திரனே மூர்ச்சையாகும்படி ஏழு அம்புகளைச் செலுத்தினான்.

ஆணவம் மிகுந்த இந்திரன், தீமை பயப்பனவாகிய ஒப்பற்ற ஏழு அம்புகளும் தனது மார்பில் அழுந்த, மூர்ச்சித்து விழுந்தான். மற்றத் தேவர்கள் அங்கே நடக்கும் நிகழ்ச்சியின் உண்மையை உணராதவர்களாய், பழைய பிரணவப் பொருளாக விளங்கும் குமரனைப் பக்கங்களில் சுற்றிச் சூழ்ந்து கொண்டு அவனுடன் போரிட்டார்கள். இந்த முறையில் தேவர்கள் போரிட்ட பொழுது, சிவபெருமானுடைய திருமகனான முருகன் தன் கையில் இருந்த நீண்ட வில்லை வளைத்தான்; அதில் நான்கு அம்புகளை இணைத்துச் செலுத்தி, கடல்களுக்கு உண்மையான அரசனாகிய வருணனை அழித்தான்; மேலும் ஐந்து அம்புகளினாலே எமனது வலிமையை அடக்கி விட்டான். குற்றமற்ற குமரவேள், ஓர் அம்பினால் சந்திரனை அழித்தான்; கூர்மையான மூன்று அம்புகளினால் சூரியனை அழித்தான்; பொருந்திய மூன்று அம்புகளால், வீர வுரை நிகழ்த்திய அக்கினியை அழித்து, வெற்றிவீரனாக நின்றான். தேவர்கள் சிலர் பகைவர்களைப் போலப் போரிட்டு இறந்து விழுந்தார்கள்; தேவர்கள் சிலர் எதிர்த்து நின்று போரிடாமல் சிதறி ஓடினார்கள், ஒப்பற்ற வில் வீரனாகத் தனியே நிறை விசாக நாளில் பிறந்த முருகன், பிற்காலத்தில் எல்லோரையும் அழித்து விட்டுத் தனியே உலாவும் சிவபெருமானைப் போலத் திகழ்ந்தான். உமையவள் புதல்வனான முருகன், தேவர்கள் அனைவரும்

அழியும்படி வெற்றி பெற்றுத் தான் ஒருவனாக நின்ற பொழுது, நாரத முனிவன் கண்டான்; உடனே கருணை கொண்டு தேவகுருவான வியாழனிடம் சென்று, நிகழ்ந்த செயல்களைக கூறினான்.

எல்லாவற்றையும அறிந்தவனும் நிறைந்த ஒளியை உடைய பொன்னின் நிறத்தைப பெற்றவனுமான வியாழமுனிவன், ஓவியததில் தீட்ட முடியாத அழகின் சிறப்புப் பொருந்தியவனும், ஒரு குழநதையின் வடிவத்தை மேற்கொண்டவனுமான குமரக கடவுளை தொழுது, துதித்து, "யானை முகத்தைப் 'பெற்ற தாரகாசுரன், சிங்கமுகன், சூரபன்மன் என்று கூறப்படுகின்ற அசுரர்கள் துன்புறுத்தியதால், இந்திரன் நாள தோறும் துன்பத்தை அனுபவித்தான். அதனால தனது நகரமான அமராவதியை விட்டு நீங்கி, இநதப பெரிய மேருமலைககு வந்து மறைந்திருந்தான் "அந்த இந்திரன் உனது திருவடியை அடைக்கலமாகக் கொண்டு, உன்னைக் கொண்டே சூரபன்மன் முதலிய பகைவர்களின் உயிரை அழித்து, முன்போலத் தனது அரசைப் பெறுவதற்கும், பெற்று அரசனாகத் திகழ்வதற்கும் நினைத்தான். இவற்றைத் தவிர அவன் வேறு எதையும் எண்ணவில்லை. "இறைவனே! இந்திரன் பல நாட்கள் அரிய தவத்தைச் செய்து வருந்தினான். பின்பு சரவணப் பொய்கையில் எழுந்தருளிய உனது அவதாரத்தைப் பார்த்து, எல்லாத் துன்பங்களையும் துறந்தவன் போல மகிழ்சசியடைந்தான். "காந்தள மலரையும் கடப்பம் மலரையும் குரவம் மலரையும அணிந்த குமரவேளே! உனக்குத் தொண்டு செய்வதற்கான நேரத்தை எதிர் நோக்கிக் காத்திருந்த இந்திரன், நீ இவ்வாறு திருவிளையாடல்கள் புரிவதை அறியமாட்டான்."என்றான். பொன் நிறத்தைப் பெற்றவனான வியாழ முனிவன் இச்சொற்களைக் கூறி வேண்டிக் கொள்ள, முதல்வனுக்கும் முதல்வனாகிய முருகன் குறுநகை செய்தான்; உடனே, தேவ லோகத்து அரசனான இந்திரன் - முதலான தேவர்களும், மதமயக்கத்தை உடைய ஐராவத யானையோடு அப்பொழுதே உயிர் பெற்று எழும்படி திருவருள் புரிந்தான். செலவ் வானத்தின் நிறத்தை உடைய திரு மேனியைப் பெற்ற குகன் அவர்களை எழுப்ப, இந்திரனும் திக்குப் பாலகர்களும் மற்றத் தேவர்களும் ஆகிய அனைவரும் உயிர் பெற்று எழுந்தனர். அவர்கள் மனத்திலே நல்லறிவு தோன்றியதும தாம் முன்பு நிகழ்த்திய தவறான செயலை உணாந்து, "நாங்கள் கந்தனோடா போரிட்டோம்?" என்ற நினைத்துவருந்தினா.

"முற்காலத்தில் சிவபெருமானைப் பழித்த தக்கன் யாகத்தில் கொடுத்த அவிப் பாகத்தை நாங்கள் உண்ட பாவம் இன்னும் நீங்கவில்லை". அதுவே அல்லாமல், உன்னை எதிர்த்துப் போரிட்டுப் பகைத்துக் கொண்டோம். அதனால் அளவற்ற பாவங்கள் செய்து விட்டோம். குமரேசனே! நீ உன் திருவுள்ளத்தில் உள்ள குளிர்ச்சி பொருந்திய கருணையினால் எங்களை முறைப்படி தண்டித்து நாங்கள் செய்த பாவங்களைத் தீர்த்து விட்டாய். எவ்வாறானாலும், தெளிந்த அறிவற்ற மூடர்களாகிய நாங்கள் செய்த குற்றங்களை எல்லாம் மனத்தில் கொள்ளாமல் மன்னிக்க வேண்டும்" என்று அத்தேவர்கள் வேண்டினார்கள். குமரவேள் அவற்றை அறிந்து, "நீங்கள் நம்மை ஒரு குழந்தையாக நினைத்து முன்பு போரிட்டீர்கள்; நம்முடைய வலிமையும் மகிமையும் இன்னும் நன்றாக நீங்கள் அறியும்படி காட்டுவோம்" என்று கூறி, ஒரு வடிவம் கொண்டு நின்றான்.

எட்டுத் திக்குகளும், பதினான்கு உலகங்களும், எட்டு மலைகளும், ஏழு கடல்களும் தெளிவான அலைகளை உடைய புறக் கடலும் சக்கரவாளகிரியும், பிற பொருள்களும், வெவ்வேறான மாறுபாடுகள் அமைந்துள்ள சிறந்த அண்ட வரிசைகளும் எல்லா உயர்திணைப் பொருள்களும், எல்லா அஃறிணைப் பொருள்களும் தனக்குள்ளே உள்ளனவாக விளங்குவதும், திருமாலும் பிரமனும் சிவபெருமானும் அமைந்திருப்பதுவுமான ஒரு திருவுருவத்தை அந்த குமரவேள் மேற்கொண்டான்.

குமரவேள் கொண்ட அந்தப் பெரிய வடிவத்துக்கு மண்ணுலகம், பாதாள உலகம் முதலிய கீழ் உலகங்கள் எல்லாம் திருவடிகள்; திக்குகளின் எல்லைகள், சிறந்த தோள்கள்; விண்ணுலகத்தின் எல்லை அனைத்தும் முடிகள்; பெரிய சுடர்கள், அதன் விழிகள்; மண்ணுக்கும் விண்ணுக்கும் இடையே உள்ள வெளி முழுதும் அதன் உடல்; இசை பொருந்திய வேதம், அழகிய திருவாய்; அறிவு முழுவதும் காதுகள்; பிரமனும் திருமாலும் அதன் வலமும் இடமும் ஆகிய இரு பக்கங்கள்; உமாதேவி, சிந்திக்கும் திறம் வாய்ந்த மனம்; ஐந்து தொழில்களைச் செய்கின்ற சிவனே நல்ல உயிர் ஆகும்.

குமரேசன் இத் தன்மைத்தான விசுவரூபம் எனப்படும் ஒரு பெரிய திருவுருவம் மேற்கொண்டு நிற்க, தேவர்கள் தலைவனான இந்திரனும் மற்றைய தேவர்களும் 'அதிசயம்! அதிசயம்!' என்று கூறிக் கைகூப்பி வணங்கினார்கள். அத்தேவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து, வானத்தின்

மேலே பார்த்து, குமரவேளின் சத்தியவடிவம் முழுவதையும், அதன் அழகு முழுவதையும் பார்க்க முடியாதவர்களாகி, முழங்கால் வரையிலுமே பார்த்துப் புகழ்ந்தார்கள். ஆகாயம் வரையில் பரவி நிற்கும் சோதியை உடைய ஞான வடிவான முதல்வனே! நீ பேரழகு பொருந்த எங்களுக்கு முன்னே மேற்கொண்ட மிகப் பெரிய வடிவத்தை முழுவதும் பார்க்கும் ஆற்றல் அற்றவர்கள்; அதை நாங்கள் காணும்படி காட்டியருள வேண்டும்" என்று கோரினார்கள். நெடிய சிறந்த வடிவத்தை மேற்கொண்டு நின்ற திருமுருகன் அவர்தம் கோரிக்கையைக் கேட்டு செவ்வேளான முருகவேள் அவர்களிடம் கருணை கொண்டு, எல்லையற்ற தூரத்தையும் பார்க்க வல்ல ஒளி மிகுந்த கண்களைக் கொடுத்து, செந்நிறம் அமைந்த பல கோடிச் சூரியர்கள் ஒன்று சேர்ந்ததைப் போன்ற இளங்கதிர் பரப்பி நின்ற தனது வடிவம் முழுதையும் காட்டினான். அதனை, மேருமலையில் நின்ற இந்திரன் முதலிய தேவர்கள் தரிசித்தார்கள்.

ஆறுமுகனின் திருவுருவம் முழுவதையும், திருவடி முதல் திருமுடி வரையில் அம் முருகனின் திருவருளால் விரைவாகப் பார்த்து, அளவிடமுடியாத அண்டங்கள் அனைத்தும், அளவிட முடியாத உயிர்கள் அனைத்தும், மும்மூர்த்திகளும், தேவர்கள் அனைவரும் அத் திருவடிவததில் அமைந்திருப்பதைக் கண்டு வணங்கிய அத் தேவர்கள் அவனைத் துதித்து "எம் முருகவேளே! இந்த உலகம் முதலிய பல வகைப்பட்ட பெரிய அண்டங்களும், அந்தந்த அண்டங்களில் வாழ்கின்ற தேவர்களும, உயிர் உள்ள எலலாப் பொருள்களும், உயிர் இல்லாத எல்லாப் பொருள்களும், திருமாலும், செந்தாமரையில் வாழும், பிரமனும், சிவபெருமானும் உன் வடிவத்தில் அமைந்திருப்பதைப் பார்த்தோம். அதனால் எல்லா இடங்களிலும் உள்ள யாவும் உனது திருவுருவமே ஆகும்.

"ஆகையால் எம்முடைய முருகவேளே! நீ அருவமாகவும், உருவமாகவும், அருஉருவாகவும் நின்ற முதற் கடவுள் ஆவாய். சூரபன்மனாகிய அசுரர் முதல்வனைக் கொன்று, எங்கள் துன்பங்களைத் தொலைத்து எங்களைச் சொர்க்க லோகத்தில் குடியேற்றுவதற்காக ஒரு குழந்தையைப்போல, நாங்கள் செய்த பெரிய தவத்தால் அவதரித்துள்ளாய்.

"முருகவேளே! எல்லா உருவங்களுக்கும் ஓர் உறைவிடமாகத் திகழும் உனது சிறந்த - செம்மையான திருவுருவத்தைத் தரிசித்துச் சிறப்படைந்தோம். அதனால் புண்ணியம் - பாவம் என்னும் வடிவங்களின்

அனுபவத்திலிருந்து நீங்கினோம். இனிமேல் நாங்கள் கொடிய பிறவியில் புகமாட்டோம். முக்திப் பேற்றை அடைவோம்"

இந்திரன் முதலாக உள்ள தேவர்கள் பொருந்திய குமாரக் கடவுளது பெரிய திருவுருவத்தைப் பார்த்து, சூரியனது பேரொளியைக் கண்ட அற்ப உணர்ச்சிகளை உடைய உயிர்களைப் போல மனம் மிகப் பயப்பட, விழிகள் சுழல மயங்கி, "எம் தந்தையாகிய முருகவேளே! உனது வடிவம் அளவற்ற ஒளியை உடையது. அதனால் அதனை மேலும் பார்க்க முடியாது. எங்கள் கண்கள் இப்போதே ஒளி இழந்து துன்புற்றன. இதைத் தவிர, உனது விசுவரூபத்தைப் பார்த்துப் பயப்படுகிறோம். உன் அடியவர்களாகிய நாங்கள் உய்தி பெறும்படி பழைய வடிவத்தை மேற்கொண்டு காட்சியளித்து எம்மைக் காப்பாயாக" என்று அத்தேவர்கள் வேண்டினர்.

தேவர்கள் இப்படி வேண்டியமையால் இறைவனாகிய முருகவேள், கருணையோடு, வானத்தைக் கடந்து சென்று நின்ற தனது விசுபரூபத்தை விடுத்து, ஆறு திருமுகங்களை உடையவனாகி, காட்சியளித்தான், மலைகளின் சிறகுகளை வெட்டியவனான இந்திரன் அம் முருகனை வணங்கித் துதித்து "எம் தந்தையே! பழைய நிலையில் குறைவில்லாமல் வாழும் சூரபன்மன் நானும் உன் பக்கத்தில் நிற்கும் சொர்க்க லோகத்தை அடைந்து, எனது அரசாட்சியை நடத்தி வீற்றிருப்பாயாக, எனது வேண்டுகோள் இதுவே" என்று சொன்னான். முருகன் அரசு தருவதாய்ச் சொன்ன இந்திரனைப் பார்த்துப் புன்னகை புரிந்தான். "இந்திரனே! நீ நமக்குக் கொடுத்த பழைய சிறப்புள்ள அரசினை உனக்கு நாம் திருப்பித் தந்தோம். நீங்கள் படைகளாக அமைய, நாமே அப்படைகளுக்குத் தலைவனாக விளங்கி, அசுரர் கூட்டம் முழுவதையும் அழிப்போம். அதனால் தளர்ச்சி அடையாதே." என்றதும். தேவர்தம் அரசனான இந்திரன் ஆறுமுகக் கடவுளைப் பார்த்து, "இந்த அண்டத்தில் அமைந்த மலைகள், கடல்கள், உலகங்கள், உயிர்கள், மற்றுள்ள பொருள்கள் ஆகியவை, இன்று உன் திருவிளையாடலால் முறை மாறி உள்ளன. அவை அனைத்தையும் முன் போல நிலை நிறுத்தி அருள்வாயாக" என்று வேண்டிக்கொள்ள, முருகப்பெருமானும் "இந்த அண்டத்தில் எம் செயல்களால் வேறுபாடு அடைந்த எல்லாப் பொருள்களும்முன்பிருந்த நிலையினைப்பெறுவாயாக" என்று கட்டளையிட உடனே முறை மாறி இருந்த பொருள்கள் யாவும் முன்பு இருந்த நிலையினைப் பெற்றன. அந்த நிகழ்ச்சியைக் கண்டு அனைவரும் அதிசய மடைந்து "பகவானே! வேதங்கள் என்னும் உண்மை நூல்களை ஆபரணமாகத் தரித்துள்ள உன் திருவடிகளைப்

பெருமகிழ்வு கொண்டு தம்பியருடன் கை குவித்து வணங்கி நின்றான். தம் முன்பு நின்று வணங்கும் சூரபன்மனின் முகத்தைப் பார்த்து, "எம்மை நினைத்துப் பல ஆயிரம் ஆண்டுக் காலமாக மிக்க வலிமையுடைய வேள்வியைச் செய்து இளைத்தாய்; ஆதலால், உமக்கு வேண்டியது யாது? கூறுவாயாக!" என்று கூறியருள, பொன்னிறமாக விளங்கும் தாமரைமலரில் வீற்றிருக்கின்ற நான்முகன் முதலிய தேவர்கள் எல்லாரும் இதுவரை யாம் பெற்றிருந்த தலைமை முழுதும் இத்தினத்தில் எம்மைவிட்டுப் போயின என்று வருந்த, சூரபன்மன், "பெருமையுடைய பூமியின் சார்பாகப் பல வுலகங்களைக் கொண்டுள்ள அண்டக் கூட்டங்கள் எல்லா வற்றுக்கும் நான் மன்னன் ஆக வேண்டும்; நினைப்பதற்கு முன் அந்த அண்டங்களில் எல்லாம் சென்று வருவதற்கு ஊர்திகளையும் தருதல் வேண்டும்; எப்போதும் அழியாமல் இருக்கின்ற வச்சிர யாக்கையும் எனக்கு அளித்தல் வேண்டும்; அலைகளையுடைய பாற்கடலில் அறிதுயில் கொள்கின்ற திருமால் முதலான தேவர்கள் போர் செய்தாலும் தோல்வி அடையாது அவர்களை வெல்லத்தக்க பெருவன்மையையும் பல படைக்கலங்களையும் அளிக்க வேண்டும்; அழியாமல் எக்காலத்தும் இருக்கவும் வேண்டும்!." என்று சூரபன்மன் வேண்டிக் கொண்டான். கலைகளையுடைய சந்திரனை அணிந்த சடையையுடைய சிவபெருமான் அவ்வாறே ஆக அருள் செய்யலானார். எந்நாளும் எண்ணப்படுகின்ற பல புவனங்களையுடைய அண்டக் கூட்டங்களைக் காக்கும்படி, திருமாலின் சக்கரத்தைவிட வலிமையான ஓர் ஆணைச் சக்கரத்தை விரைவில் தந்து, பெருமையுடைய சினத்தை உடைய தேவர்கள் எல்லாருக்கும் அன்று முதல் தலைவன் ஆகின்ற முதன்மையையும் அளித்தார்.

மேல் உலகத்தில் வாழ்கின்ற தேவர்களையும் அவுணர்களையும் மற்றவரையும் வெற்றி கொள்ளத் தக்க வீரத்தையும், பெருவன்மையையும், சிறந்த சிவக்கணை (பாசு பதாத்திரம்) முதலான தெய்வக் கணைகள் எல்லாவற்றையும், எக்காலத்திலும் அழியாத பெருமை மிகுந்திருக்கும் அழகான வச்சிரவுடலையும் சிவபெருமான் சூரபன்மனுக்கு தந்தார். பின்பு.கங்கையாற்றை விண்ணுலகத்துக்கு அனுப்பி, அந்தக் கங்கையாற்றைவிடப் புகழ்பெற்ற பெரிய வேள்வியில் அமைத்த தீயைவிடச்சிறந்து விளங்குமாறு, பெருமையுடைய கடலை போல் பத்தாயிரக் கோடி வெள்ளம் என்ற தொகையுடைய அங்குசம் செலுத்துகின்றயானையும்,

வலிய தேரும், வெற்றி பொருந்திய குதிரையும், அசுரரும் எனக் கூறப்படுகின்ற நான்கு வகையான படைகளையும் பொருந்துகின்ற பெரும் புகழுயுடைய சூரபன்மனுக்குச் சிவபெருமான் இத்தகைய அருளைச் செய்தார். அப்போது, அச் சூரபன்மனின் தம்பியர் வந்த அவனை வணங்கி எழுந்து நின்றனர். தமக்கு நிகரில்லாத சிவபெருமான் அப்போது சொல்லலானார்.

"சூரன் என்ற உம் தமையனின் இரு தோள்களைப் போல வீரம் பெற்று விளங்கி நூற்று எட்டுச் சதுர்யுகங்கள் வரை சிறப்புடன் வாழ்வீராக!. திருமால் முதலான தேவர்களையெல்லாம் வென்று பின்னடையச் செய்வீராக! அழிவற்ற தேவர்களையும் தம் திருப்பெயரால் வழங்கப்படுவதாகிய தெய்வத்தன்மை உடைய படைக்கலங்களையும் அளித்து, வெவ்வேறாக மிக்க அருளைச் செய்து, கங்கையாற்றை அணிந்த சிவபெருமான் மறைந்தருளினார்.

## *28. சுக்கிரன் உபதேசம்*

**அ**த்தகைய சமயத்தில் முன்னே மதிற்பக்கத்தில் ஒரு மதிலைப்போலச் சூழ்ந்து கொண்டு நிற்கும் அவுணர்கள், 'தம் மன்னன் அழியாத சிறப்பைப் பெற்றான்' என்று அறிந்து, மிக்க வன்மை உற்றவராய் 'ஒல்' என்ற ஓசையுண்டாக ஆரவாரம் செய்து மகிழ்ந்தனர். அந்த அசுரர்கள் சூரபன்மனைப் பார்த்து ஆரவாரம் செய்து, அவனுடைய அடிகளில் விழுந்து வணங்கினர்; மணம் கமழும் மதுவை உண்டவரைப் போல் கை குவித்தனர்; குதித்தனர்; அடங்காத மகிழ்ச்சியை பெற்றனர்; முன்னால் பெற்ற துன்பம் எல்லாம் நீங்க பெற்றனர். கொடிய சூரபன்மனின் பக்கத்தில் நெருங்கினர். மன்னனான சூரபன்மன்,தன் முன் அவுணர் சிலரைப் பார்த்து, " இன்றிலிருந்து நீங்கள் வலிமையுடையவர் ஆவீர்" என்று உபசார வார்த்தை சொல்லி நல்ல அருளைச் செய்தான். சூரபன்மன் அவ்வாறு யாக சாலையினின்று நீங்கிச் சென்று, பெருந்தவத்தைச் செய்யும் தந்தையான காசிப முனிவரின் பக்கத்தில் போய் அவரைப் பணிந்து, தாம் பெருமானால் பெற்றுக் கொண்ட வரங்களினுடைய இயல்புகளையெல்லாம் எடுத்துச் சொல்லி, "இனி நாங்கள் செய்யக் கூடியது யாது?" என்று வினவ, நல்ல அறிவையுடைய காசிப முனிவர் உள்ளத்தில் இங்ஙனம் எண்ணித் தம்மிடம் தோன்றிய மைந்தர்களைப் பார்த்து, "மைந்தரே! பழைய உங்கள் குலத்தின் குரு சுக்கிராசாரியாரே ஆவார், அவரிடத்துச் செல்லுங்கள்," காசிப முனிவர் இவ்வாறு கூறியதும் அக்கொடிய சூரபன்மன் அவரிடம் விடைபெற்று, அளவில்லாத வெற்றியுடைய படையுடன் போய்த் தன்னிடம் அன்புடைய சுக்கிரசாரியாரை அணுகினான். அவர்

அந்நிகழ்ச்சிகளைக் கேட்டறிந்தார். அவனது வருகையில் மகிழ்ந்து, விரைவாகத் தம் மாணவர் கூட்டத்துடன் எதிர் கொள்ள வந்தார்.

தாங்கள் சிறந்த வேள்வியைக் குறைவில்லாமல் செய்ததையும், அப்போது சிவபெருமான் எழுந்தருளி பெறுவதற்கரிய செல்வத்தை அருளிய தன்மையையும், பின் காசிப முனிவரிடம் சென்ற தன்மையையும் கூறிப்பின்பு, தன் தந்தை காசிபர் உரைத்ததையும் முழுமையாக எடுத்துச் சொல்லி, "இனி நாங்கள் செய்யும் முயற்சி யாது? தாங்கள் சொல்லுக" என்று சூரபன்மன் வினவ, தீமை மிக்க மனம் உடைய சுக்கிராசாரியார் சொல்லலானார்.

"அறியாதவர், பாசம் எனவும் பசு எனவும் பதி எனவும் பொருள்களை மூன்றாகச் சொல்வர். அவற்றுள் பாசம் என்ற ஒரு பொருள் இருப்பதாகச் சொல்வது பொய். ஆன்மாவும் ஒளியுடைய சிவனும் ஒன்றே ஆகும். வேறு அன்று. செய்யப்படும் வினைகள் தீவினையும் நல்வினையும் என்று பிரிவுபட்டு இரண்டு என்று சொல்வர். அந்த வினைகள் காரணமாக உயிர்கள் பிறவியை அடையும் என்பர். இன்பமான கடலில் முழுகும் என்பர். துன்பத்தை அனுபவிக்கும் என்பர். உயிர்கள் யாவும் ஒரு பிறப்பில் மட்டுமின்றி ஊழ் என்று சொல்லப்படுகின்ற முறையைப் பொருத்தி இரு பிறப்பிலும் அனுபவிக்கும் என்பர். அவ்வாறு அனுபவிக்கும் காலத்தில் பின்வரும் பிறவிக்குக் காரணமாக அரிய பழைய வினைகளை ஈட்டும் என்பர். அவ்வாறு ஈட்டுகின்ற இருவினைகளின் வலிமையால் பின்னும் பின்னும் விரைவிலே பிறக்கும்; இறக்கும்; அறிவதற்கரிதான சிவபெருமான் அவற்றின் இயல்புகளை உணர்ந்து அவ்வுயிர்களுடன் சேர்ப்பிப்பார்" என்பர்.

"சொல்லப்பட்ட பதியும் குற்றம் பொருந்திய பெரிய பாசத்தையுடைய உயிரும் ஒன்றன்று; ஒன்று எனச் சொன்னால் அந்தப் பதிப்பொருளுக்குக் குற்றம் உண்டாகும் என்று சொல்வர். அதற்குரிய வரலாற்றை நீ கேட்பாயாக."

"ஆதியும் அந்தமும் இல்லாமல் நிர்மலமான சோதி வடிவமாக உள்ள பழைய சிவபெருமான், திருவிளையாட்டில் விருப்பம் கொண்டவராய், நினைவு மட்டுமுள்ள தம் மாயையால், ஐந்து பூதங்களையும் மற்றவற்றையும் படைப்பார். தம்மிடம் உள்ள நினைவான மாயையால் உடல்கள் எல்லாவற்றையும் படைத்து, அவற்றில் தாம் குடத்தில் தோன்றும் வானம் போல் அமைந்து நின்று, அந்த உடல் அழியும் காலத்தில், முன் போல் நிலை பெற்றிருப்பார். இங்ஙனம் எந்தக் காலத்தும் கணிப்பதற்கு வரையறைப்படாத

சிவபெருமான் திருவிளையாடலைச் செய்வார். ஆதலால் நல்வினை தீவினை இரண்டும் பொய்யே; வீடுபேறும், அதை அடைய முயற்சி செய்வதும் பொய்யே ஆகும்".

"ஐந்து புலன்களும் ஐம்பொறிகளும் பொய் என்றால் அவற்றால் காணப்படுகின்ற சிறந்த பொருள்கள் உண்மையாகுமா? குற்றம் இல்லாத அறிவும் சொல்லும் உருவமும், செய்யுமாறு நின்ற தொழில்களும் அப்படியே பொய் ஆகும். அவையெல்லாம் பொய் என்றால் பின்பு அவை காரணமாக உண்டாகின்ற சுகம் துக்கம் என்ற இரண்டும் உண்மையாகுமா? முன் சொன்ன படி அவையும் பொய்யே! பொய்யை மெய் என்று கொண்டாலும் அவ்வியல்பினவான துன்பமும் இன்பமும் நித்யரான சிவபெருமானை அடையுமோ? அடையாது. தசை தோல் முதலானவற்றால் மூடப்பட்ட இந்தவுடலுக்கே ஆகும். பிறப்பதும், விரைவாக இறப்பதும், முயன்று செய்கின்ற வினைகள் எல்லாவற்றையும் செய்தலும், எங்கும் நிறைந்துள்ள சிவபெருமானுக்கு இல்லை. அதை மனத்தால் ஆராயுமிடத்து அது உடலுக்குப் பொருந்திய இயல்பே என்பதும் புரியும்". "போவதும் வருவதும் பொலிவுடன் தோன்றுவதும் பின் அழிவதும் செய்கின்ற தொழில் வகைகள் ஆகிய எல்லாம் அளவில்லாத குடங்கள் தோறும் பொருந்தும் வானத்துக்கும் ஆகுமா?" அங்ஙனம், எல்லா இடங்களிலும் ஏக ஆன்மாவாக விளங்குகின்றசிவபெருமான் யாதொரு வேற்றுமையும் இல்லாதவராக எக்காலத்திலும் ஒரே தன்மையாக இருப்பார்; அது உண்மை என்று நீ அறிவாயாக. ஆதரவாகத் தக்க அறம் நல்லது என்று உள்ளத்தில் நினைத்த அதைச் செய்வதும்'மிகுகின்ற பெரும் பாவமானது தீயது' என்று அதைச் செய்ய அஞ்சுவதும், அறியாமையே ஆகும். எது வந்து தன்னைச் சேர்ந்ததோ, அதைத் தீயது எனவும் 'நல்லது' எனவும் எண்ணாது அவை கடவுளின் மாயை, என்று எண்ணி அவற்றைச் செய்தல் நீதியான நெறியாகும். ஒளிரும் வேலையுடைய சூரபன்மனே! இப்பிறவியில் செய்யும் இருவினைகளின் பலன், மறு பிறப்பு உண்டானால் அன்றோ சார்வது? மறு பிறப்பு என்பது பொய்யே! ஒரு பொய்யில் தோன்றுவது மெய்யாகுமோ? முறையான இவைஎல்லாவற்றையும் வேறு எவரேனும் அறிவாரானால் அப்போதே நாம் அடைந்திருக்கும் தகுதிகள் எல்லாவற்றையும் அடைவர். நான் கூறியவை எல்லாம் மனத் திடம் உண்டானால் உண்மையாகும்.

"தேவர்களை விடவும் திருமால் முதலான எல்லாத் தேவர்களை விடவும் உயர்ந்த தலைமையும் வெற்றியும் ஆணையிடும் இயல்பும் குறையாத வளமும் உன்னை வந்து அடைந்துள்ளன. உனக்கு வந்த சிறப்பை எண்ணி நீ உன்னையே பிரமம் என்று சந்தேகத்துக்கு இடம் இல்லாது உணர்வாயாக! மற்ற நான்முகன் முதலியவர்களிடம் அன்பு கொள்ளாதே! அவர்களை உன்னைவிட உயர்ந்தவர் என எண்ணி வணங்காதே! தேவர்கள் உங்களுக்குப் பகைவர்கள். ஆதலால் அவர்களையும் செல்வத்தையும் விரைவாக அழிப்பாயாக".

"இந்திரன் என்பவன் தேவர்க்கு மன்னன்; அவன் தான் முற்காலத்தில் அளவில்லாத அசுரர்களின் உயிரைக் கவர்ந்தான். அவன் தப்பி ஓடி விடாதபடி விரைவாகப் பிடித்து வலிமையான விலங்கைப் பூட்டிக் கடுஞ் சிறையில் வைப்பாயாக. அந்த இந்திரனைச் சிறையிலே வைத்து, மற்றும் பல தீமைகளையும் செய்து, வேதங்களை ஓதுகின்ற முனிவர்களையும் நாள்தோறும் ஏவல் கொள்வாயாக! அவர்களுக்கு இருக்கும் பதவிகளை யெல்லாம் அசுரர்க்கு அளிப்பாயாக! கொலை, களவு, காமம், நினைத்துச் செய்யும் சூது ஆகிய இவற்றையெல்லாம் நிலையானவை என்று கருதிச்செய்வாயாக! இவற்றால் உனக்குப் பின்வரும் தீங்குயாதும் இல்லை. இவற்றைச் செய்யாவிட்டால் நீவிரும்பிய பொருள்கள் எல்லாம் இவ்வுலகில் ஒருங்கே கிடைக்காது. உனக்கு அஞ்சும் இயல்பினர் யாவர் உளர்? ஒருவருமில்லை. வளமையான துளசி மாலையைச் சூடிய திருமாலை, காளை ஊர்தியையுடைய சிவபெருமான் உனக்கு அளித்த ஆயிரத்தெட்டு அண்டங்களிலும் படைகளுடனே இப்போதே சென்று பார்த்துப் பார்த்து அங்கு நீ செய்யக் கூடிய அரசியலைச் செய்து எட்டுத்திக்குகளிலும் உள்ளவர் புகழத் திரும்ப வந்து இந்த இடத்தில் இரு" என்று சுக்கிராசாரியார் உபதேசித்தார்.

## *29. அண்ட கோசம்*

**சு**க்கிராசாரியார் இப்படி சொல்லக் கேட்டுச் சூரபன்மன் அந்தச் சுக்கிராசாரியாரைப் பார்த்து, "தாங்கள் கூறிய இது நன்று! தாங்கள் கட்டளையிட்டபடி நடப்பேன்! இது நிற்க, சிவபெருமான் எனக்குத் தந்த ஆயிரத்தெட்டு அண்டங்கள் எல்லாவற்றின் இயல்புகளையும் தாங்கள்எனக்கு கூறுதல் வேண்டும் என்று வேண்டினான்; சுக்கிராசாரியார் அண்டங்கள் ஆயிரத்தெட்டின் இயல்புகளைச் சொல்லத் தொடங்கினார்.

முந்தியுள்ள பொருளகளும் அவற்றின் தோற்றங்களும் நிற்க மூலப்பிரகிருதியினின்று புத்தி தத்துவம் தோன்றும்; அந்தப் புத்தித்

தத்துவத்தினின்றும் தோன்றும் அகங்காரத் தத்துவம் ஒன்றிலே, ஐந்து வகையான புலன்களும் தோன்றும். அந்தப் புலன்கள் ஐந்திலும் தூய்மையான வானம் முதலான பெரிய பூமி வரையுள்ள ஐந்து பூதங்களும் முறையாகத் தோன்றின. அந்தப் பெரிய பூமிக்கு ஓர் ஆயிரம் கோடி என்ற எண்ணுடைய அண்டங்கள் ஒப்பில்லாதவை என்ற சொல்லும்படி உள்ளன. அவை ஒன்றக்கு ஒன்று மேலாய் சொல்லப் படும் நிலையுடையவை அல்ல; ஆராயுங்கால், பரந்திருக்கும் நிலைமையுடையன என்று கூறத்தகும். அவை செம்பொன் நிறம் உடையவை. இடம் அகன்ற பெரிய உலகத்தின் கூறான அண்டங்கள் ஆயிரம் கோடியுள், இங்கு நின் அரசுக்குரியவாகப் பெற்றுக் கொண்ட ஆயிரத்தெட்டு அண்டத்துள்ளும் மேன்மையான ஓர் அண்டத்தின் இயல்பைச் சொல்வேன். சிவந்த உள்ளங்கையில் உள்ள நெல்லிக்கனியைப் போல உன் உள்ளத்தில் தெளிவாக உணர்வாயாக! சூரிய ஒளியில் காணப்படும் துகள் இருபத்து நான்கு உடையது; 'கசாக்கிரம்' (மயிர்நுனி) எனப்படும். இதன் தொகை எட்டுக் கொண்டது ஓர் இலீக்கை (ஈர்); அந்த இலீக்கை எட்டுச் சேர்வதால் யூகை (பேன்)என்ற அளவு தோன்றும்; அந்த யூகை எட்டுக் கொண்டது யவை (நெல்) என்பர். அந்த யவை இருபத்து எட்டுக் கொண்டது ஓர் அங்குலத்தின் அளவாகும். மேலே சொல்லப்பட்ட அங்குலங்கள் நான்கு கூடினால் அது 'முழம்' எனப்படும்; தனு இரண்டு கொண்டது ஒரு 'தண்டம்' (கோல்) ஆகும். இங்குச் சொன்ன தண்டங்கள் இரண்டாயிரம் கொண்டது ஒரு குரோசத்தின் அளவாகும்; குற்றம் இல்லாத நான்கு உடையது 'யோசனை' என்பதாகும். வேற் படையுடையவனே! முன் சொன்ன யோசனையின் அளவு நூறு கோடி கொண்டது இந்த அண்டத்துக்கு மிகப் பெரிய அகலமும் சிறந்த உயரமுமாகும். மற்ற அண்டங்களும் இதைப் போன்ற அளவை உடையன என்று எண்ணுவாயாக! சிறந்த இந்தப் பூமிக்குக் கீழ்உள்ள யோசனை ஐம்பது கோடியாகும்; வலிய இந்தப் பூமிக்கு மேல் உள்ள அளவும் ஐம்பது கோடி யோசனையான அதே தொகையாகும். பூமியில் உள்ளவரால் புகழப்படும் மேருமலையினின்று எட்டுத்திக்குகளும் அண்டச்சுவர் வரையும் மதிக்கப்படுகின்ற ஐம்பது கோடி யோசனை நீண்டிருக்கும். அண்டகடாகம் (அண்டத்தின் ஓடு) ஒருகோடி யோசனை உடையது. அந்த அண்டகடாகத்தின் மீது மிக்க வன்மையுடைய காலாக்கினி ருத்திரரது செம்பொன் மயமான கோயில் ஒரு கோடி யோசனை உயரம். அந்த உருத்திரரின் தீச்சுவாலை பரவும் இடம் பத்துக்கோடி யோசனை; மேலே கிளம்பி எழும் புகையின் எல்லை அளவிட்டால் ஐந்து கோடி யோசனை. அந்த உருத்திரர் பதத்தில்

அரியணையின் உயரம் ஆயிரம் யோசனை உடையதாகும். அகலமும் அதற்கு இரண்டு மடங்கு யோசனை. (இரண்டாயிரம் யோசனை). பரந்த சிவந்த காலாக்கினியான உருத்திரரின் அக்கினி வடிவான மேனி பத்தாயிரம் யோசனை நீளம் அகும். அந்தஉருத்திரர் அழகு மிக்க பரிசை, வாள், வில், செவ்விய அம்பு என்ற இவற்றை உடையவராக விளங்குவார். அங்குச் சிறந்த காலாக்கினி ருத்திரரைப் போன்றவராய்ப்பத்துருத்திரர் இருப்பர். அவரதுபணியைச் செய்து கொண்டு பக்கத்தே பத்துக்கோடி பரிவாரங்கள் இருக்கும். அவர்களின் தாமரை மலர் போன்ற அடிகளை வணங்கி கொண்டு ஆதி கூர்மமானது அந்தப் புவனத்தில் இருக்கும். பெருமை பொருந்திய பாதலங்கள் யாவற்றுக்கும் தலைவராக இருந்து பாதுகாப்பவர் ஆடகேசுரர் ஆவர்; நாகர்களும் அசுரர்களும் வாளையுடைய அரக்கர்களும் அவருடைய அடிகளை வணங்கும் அடித் தொண்டு செய்யும் பரிவாரங்களாம்; கீழ் அண்டகடாகம் முதல் பூமி வரையாக ஐம்பது கோடி யோசனையாகும். இதைக் கணக்கிட்டு நீ அறிந்து கொள் . பல வகையான பாதலங்களுக்கெல்லாம்மேலாக இருக்கின்ற பழைய பூவுலகத்தின் அகலத்தையும் அங்கு இருப்பனவற்றையும் நான் சொல்வேன், கேட்பாயாக! விளங்கும் சம்புத்தீவு, சாகத்தீவு , குசைத் தீவு, கிரவுஞ்சத்தீவு, குற்றம் இல்லாத சால் மலித்தீவு, கோமேதகத்தீவு, புட்பரத்தீவு ஆகிய இவைகள் ஏழு தீவுகளாகும். பரந்த இந்தவுலகத்தில் உப்புநீர்க் கடல், பாற்கடல், தயிர்க்கடல், நெய்க்கடல், கருப்பஞ் சாற்றுக் கடல், சிறந்த தேன் கடல், நன்னீர்க்கடல் என்னும் ஏழு கடல்களும் முன் சொல்லப்பட்ட ஏழு தீவுகளையும் வரிசையால் சூழ்ந்து நிற்கும்; நன்னீர்க் கடலுக்கு அப்பால் உள்ளது பொன் நிலம்; அதனைச் சூழ்ந்து சக்கரவாளமலை உள்ளது. அந்தச் சக்கரவாள மலைக்கு அப்பால் கடல்களில் சிறந்த புறக்கடல் உள்ளது. அதற்கு அப்பால் பெரிய இருள் மிக்க பூமி உள்ளது. அதற்கும் அப்பால் வன்மை உடைய அண்ட ஓடு உள்ளது. பொருந்திய இவை யெல்லாம் வளைந்து கொண்டிருக்கும்! சூரபன்ம மன்னனே, இதனை அறிவாய். (சக்கரவாள மலை கதிரவன் ஒளியை அப்பால் செல்லவிடாது தடுத்து நிற்கும், ஆதலால் அப்பால் உள்ள நிலம் இருள் உடையது என்றார்.)

அளவிட முடியாத முதலில் கூறப்பட்ட சம்புத் தீவானது ஓர் இலட்சம் யோசனை பரப்புடையது; அதைச் சூழ்ந்துள்ள கடலும் இலட்சம் யோசனை பரப்புக் கொண்டது; மற்ற ஆறு தீவுகளும், ஆறு கடல்களும் முந்தியதைவிடப் பிந்தியது இரண்டு மடங்கு பரப்புடையது எனக் கூறியுள்ளனர். அவற்றின் கூடிய தொகை இரண்டு கோடியே ஐம்பத்து நான்கு இலட்சம். எனவே இதனால்

சொல்லப்பட்டது சம்புத்தீவு 100000 இலட்சம் யோசனை; அதைச் சார்ந்த உவர்க்கடல் 100000 யோசனை. சாகத்தீவு 200000 யோசனை. அதைச் சார்ந்த பாற்கடல் 200000 யோசனை, குசைத் தீவு 400000 யோசனை; அதைச் சார்ந்த தயிர்க்கடல் 400000 யோசனை. கிரவுஞ்சத் தீவு 800000 யோசனை. அதைச் சார்ந்த நெய்க்கடல் 800000 யோசனை. சால் மலித் தீவு 1600000 யோசனை. கோமேதகத்தீவு 3200000 யோசனை. அதனைச் சார்ந்த தேன் கடல் 3200000 யோசனை. அதனைச் சார்ந்தபுட்கரத் தீவு 6400000 யோசனை. அதனைச் சார்ந்த நன்னீர்க் கடல் 6400000 யோசனை.

அடுத்துள்ள பொன்னிலம் பத்துக் கோடி யோசனை பரப்புடையதாகும். அதனைச் சூழ்ந்துள்ள சக்கரவாள மலை பத்தாயிரம் யோசனை பரப்புஉடையதாகும். அதனைச் சூழ்ந்துள்ள புறக்கடல் ஒரு கோடியே இருபத்தேழு இலட்சம் யோசனையாகும். கரிய இருள் சேர்ந்த நிலத்தின் அளவை இனிமேல் சொல்வேன்.

இருள் நிலம் முப்பத்தைந்து கோடியே பத்தொன்பது இலட்சத்து நாற்பதினாயிரம் யோசனை. பெரிய இருள்பூமியை சூழ்ந்துள்ள அண்டச்சுவரின் கனம் ஒன்பது கோடி யோசனை. இப்பூவுலகத்தின் பரப்பை ஆராயுமிடத்துப் பாதித் தொகை ஐம்பது கோடி யோசனை. பழைய நூல்களின் வழியே நாம் சொன்ன கணக்கை உடையது ஒரு திக்கே ஆகும். இங்ஙனமே மற்றத் திக்குகளையும் வைத்துக் கொண்டால், வடக்குத் தெற்கும், கிழக்கு மேற்கும், மற்றுமுள்ள அனைத்துக் கோணங்களும் சொல்லப் புகுந்தால் தனித்தனியே நூறு கோடி யோசனை அளவாகும்.

முள்ளுடன் கூடிய தாளையுடைய தாமரையில் வீற்றிருக்கும் நான்முகனின் வலத்தோளில் தோன்றிய சுவாயம்பு! மனுவின் மகன் (பிரிய விரதன்) கூர்மையான இலை வடிவமான வேலையுடைய திருக்கையுடைய ஆறுமுகப் பெருமானிடத்தில் அன்புடைய நோன்பையுடையவன். அவன் பூவுலகம் முழுவதையும் தன் ஒரு குடைக்கீழ் வைத்து ஆண்டு வந்தான். அந்தப் பிரிய விரதனின் மைந்தர்கள், அங்கிதீரன், மேதாதி உயர்ந்த வபுட்டு சோதிட்டு , துதிமான் பழையசிறப்புடைய அவ்வியன் ,சிறந்த சவனன்என்ற ஏழுபேரும் ஏழு தீவுகளைப் படுத்துப் பாதுகாத்து ஆட்சி செய்து வந்தனர்.

சிறந்த சம்புத்தீவை ஆண்டு வந்த அங்கிதீரன் என்பவன் பெற்ற மைந்தர்களாவார், பரதன், கிம்புருடன், அரி, கேது, மாலன், பத்திராசுவன்

நல்ல இளாவிருதன் என்பவன், அழகையுடைய இரமியன், நல்ல இரணியன், தகுதியுடைய குரு என்ற ஒன்பது பேராகும். இந்த ஒன்பது பேரின் பெயர்களை முறையே சூட்டித் தனித்தனியே ஒவ்வொருவருக்கும் சம்புத்தீவை ஒன்பது கண்டங்களாக்கி அளித்தான்.

வானை அளாவி உயர்ந்த சம்புத்தீவின் நடுவில் உள்ள மேருமலையானது செந்தாமரை பொகுட்டைப் போல் விளங்கும். அதன் உயரம் எண்பத்து நாலாயிரம் யோசனை பூமியில் ஆழ்ந்திருப்பது பத்தாயிரம் யோசனை முடியின் அகலம் முப்பத்து இரண்டாயிரம் யோசனை; பருத்த அடியின் அகலம் அதில் பாதி (பதினாறாயிரம்); நிறம் மிகுந்த மேகலைகள் மூன்று. அம்மூன்றுள் மேல் மேகலையில் பல சிகரங்கள் இருக்கும்.

மேருமலையினது நடுவில் நான்முகனின் பழைய நகரம் இருக்கின்றது. அந்த நகரத்தின் பெயர் மனோவதி என்பதாகும். அதன் மேற்குத் திக்கில் திருமாலின் வைகுண்டம் உள்ளது. வடகிழக்குத் திக்கில் சிவபெருமான் வீற்றிருக்கின்ற சோதி கட்கம் என்ற நகரம் உள்ளது. எட்டுத் திக்குகளிலும் சிறந்த இந்திரன் முதலான எட்டுத் திசை பாலகர்களின் நகரங்கள் உள்ளன. தெற்குத் திசை முதல் வட திசை வரை நேர்மையான தேசம் உள்ளது. நன்றாகப் போகின்ற நெடிய குகை ஒன்று அதன் பக்கத்திலே உள்ளது; இதை நீ அறிந்து கொள்க.

மேருமலையின் கிழக்கில் மந்தரமலை உள்ளது. அது வெண்ணிறம் கொண்டது. அதன் தென்கிழக்கில் கந்தமாதன மலை உள்ளது. அது பொன்னிறம் கொண்டது. மேற்குத் திக்கில் அழகுடைய விபுல மலை உள்ளது. அம் மலை நீலநிறம் கொண்டது. வடக்கில் சுபார்சுவ மலை உள்ளது. அம்மலை மாதுளம் பூவின் நிறம் கொண்டது. கடப்ப மரமும் நாவல் மரமும் வளர்ந்துள்ள அரச மரமும் ஆலமரமும் கிழக்கு முதலான நான்கு திக்குகளிலும் உள்ள நான்கு மலைகளின் மேல் முறையே நிற்கும். நாவல் மரம் இரண்டாயிரம் யோசனை உயரம் உள்ளதாகும். மற்ற மூன்று மரங்களும் இதில் பாதி உயரம் (ஆயிரம் யோசனை) உள்ளனவாகும்.

அத்தகைய இயல்புகொண்ட கிழக்குத்திக்கில் அருணமும், மேற்குத்திசையில் அசிதோதமும் தெற்கில் மானதமும் அவையல்லாத வடக்கில் மகா மடுவும் நீர் நிலைகளாக மேவும்; சோலைகளாவன: சைத்திரத வனம் கிழக்குத் திக்கில் இருக்கும்; வைக்கப்பட்ட பெரிய சோலை தெற்கில்

இருக்கும் வைப்பிரச வனம் மேற்கில் இருக்கும். சிறந்த திருதி என்ற பெயர் கொண்ட வனம் வடக்கில் இருக்கும், இப்படி இவைகள் யாவும் மேருமலையின் சாரலில் இருக்கும்.

மணம் கமழும் ஒரு நாவல்மரம் தெற்குத் திசையிலே உள்ள காரணத்தாலே அந்தத் தீவிலே உள்ள கண்டம் ஒன்பதும் அகன்ற சம்புத்தீவு என்ற பெயரைப் பெற்றது. அந்த நாவல் மரத்தின் இனிய சாறு ஆறாகி, அகன்ற மேருமலையைப் பக்கத்தில் சூழ்ந்து வடக்கத்திசை நோக்கி பாய்ந்து சாம்புநதம் என்னும் பெயர் பெறும்; அந்த நீரைக் குடித்தவர் உடல் முழுதும் பொன்னிறமாய்ப் பதின் மூவாயிரம் ஆண்டுகள் வரை அங்கே இருப்பர். நான்கு திசைகளிலும் உள்ள மலைகளின் அகலமும் உயரமும் கூறுமிடத்து மேருமலையில் பாதி யோசனையாம். அதற்குக் கிழக்கில் நீக்குதற்கரிய மாலிய வானும், மேற்கில் கந்த மாதனமும், தெற்கில் நிடதமும், ஏமகூடமும், தகுந்த இமயமும, வடக்குப்பக்கத்தில் நீலமும், சுவேதமும், இயல்புடைய சிருங்கமும் என்று மலைகள் எட்டும் இவையேயாம். நீலமும், சிறந்து விளங்கும் பொன்னும், பதுமராகமணியும், பொன்னும், பனியும் நீலமும், வெண்மையும் சந்திரகாந்தமும் என்ற இவை அந்த மலைகளின் நிறங்கள் ஆகும்.

நிடதமலை, ஏமகூடமலை, இமயமலை ஆகியவை நெடிய கிழக்கு மேற்குக் கடல்கள் இரண்டையும் கூடி உயர்ந்திருக்கும். வடக்கில் உள்ள நீலம் முதலிய மலைகள் அப்படியே அந்த இரு கடல்களையும் கூடி உயரும். வன்மையுடைய அந்த எட்டு மலைகளும் இரண்டாயிரம் யோசனை உயரம் இருக்கும். குற்றம் இல்லாத கந்த மாதனம், மாலியவான் என்ற பெரிய மலைகளின் அகலம் பத்தாயிரம் யோசனை; மற்ற மலைகள் ஆறும் இரண்டாயிரம் இரண்டாயிரம் யோசனை உயரம். இந்தத் தீவில் உள்ள ஒன்பது கண்டங்களின் இயல்பை இனிக் கூறுவேன்.

குற்றம் இல்லாத வடகடல் முதலாகச் சிருங்க மலை வரையும் குரு வருடம் ; சிருங்கம் முதல் சுவேதம் வரை இரணிய வருடம். நெடிய வேதகிரிக்கும் நீலகிரிக்கும் நடு இடம் 'இரமிய வருடம்; கந்த மாதனத்துக்கும் மேற்குக் கடலுக்கும் நடுவில் உள்ள இடம் கேதுமால்வருடம். மாலியவான் மலை முதலாகக கிழக்குக் கடல் வரையும் பத்திராசுவ வருட மாகும். அழகான இந்த உலகத்தில் நிடதமலை முதல் ஏமகூட மலை வரையும் அரிவருடம் ஏமகூடமலை முதல் இமயமலைக்கு இடையில் உள்ள நாடு கிம்புரட வருடம். தெற்குக் கடலுக்கும் இமயமலைக்கும் இடையில் உள்ளது பாரத வருடம்

கேது மால வருடமும் இந்த உலகத்தவரால் புகழப்படும் பத்திராசுவ வருடமும் முப்பத்து நான்காயிரம் யோசனை அகலமும், மற்றவை ஒன்பதினாயிரம் யோசனை அகலமும் உடையவை. பரதம் என்ற கண்டம் அல்லாத மற்றக் கண்டங்கள் எட்டும் தம்மிடம் இருப்பவர்க்கு அவை தேவர் உலகத்தைப் போன்றவை.

குரு வருடத்தில் வாழ்பவர் ஒரே காலத்தில் தாய்வயிற்றினின்று ஆணும் பெண்ணுமாகப் பிறந்து தாம் விருப்புடன் சேர்வர். அவர்களுக்குக் கற்பக மரங்கள் மலர்களைத் தரும்; கனிகளும் காய்களும் அவர்களுக்கு உணவாகும், அவர்களின் நிறம், பச்சை; வயது, பதின்மூவாயிரம்; அந்த வருடத்துக்கு வடக்கில் முனிவர்களும் சாரணர்களும் சித்தர்களும் வாழ்வர். அவர்க்கு வயது, பதின்மூவாயிரம். அவரது நிறம், பளிங்கின் நிறமாகும். பரந்துள்ள பத்திராசுவ வருடத்தில் வாழ்பவர் கனிகளையும் காய்களையும் உண்பவர். அவர்கள் பதின்மூவாயிரம் ஆண்டுகளை வாழ்நாட்களாகக் கொண்டவர்; செந்நிறம் உடையவர்; இரமிய வருடத்தில் வாழ்பவர் கனிகளை உண்பவர்கள். சந்திரனைப் போன்ற வெண்மையான நிறம் கொண்டவர்கள். பன்னிரண்டாயிரத்து ஐந்நூறு வயது உடையவர்கள். ஒப்பில்லாத இரணிய வருடத்தில் உள்ளவர் ஆலமரத்தின் சிறுகனிகளை உண்பவர். செங்குவளை போன்ற நிறம் கொண்டவர். அவர்களுக்கு ஆயுள் பன்னிரண்டாயிரம் என்று பழைய நூல்கள் உரைத்தன.

பொருந்திய இளாவிருத கண்டத்தில் உள்ளவர் வெண்மையான மேனியை உடையவர். அவர்கள் உண்பது இனிமையான கருப்பஞ்சாறு. அவர்களின் வயது பன்னிரண்டாயிரம். கேதுமாலம் என்ற வருடத்தில் உள்ளவர் செங்குவளை நிறம் உடையவர். அவர்கள் நன்றாக உண்பது பருத்த அடியை உடைய தாழைமரத்தின் பழம்; அவர்க்கு வயது பத்தாயிரம்; அரிவருடத்தில் வாழ்பவர்க்கு வாழ்நாள் பத்தாயிரம் ஆண்டு. அவர்களின் உணவு கனிகளும் காய்களும் ஆகும். அவர்களுடைய நிறம் வெண்மை.

புகழப்படும் கிம்புருட வருடத்தில் வாழ்பவர் சித்தி என்ற மரத்தின் இனிய சிறிய பழங்களை உண்பர். அவர்களின் நிறம் பொன்நிறம். வயது பத்தாயிரம். ஏமகூட மலையின் தென்திசையில் இமயமலைக்கு வடக்கில் உயர்வுமிக்க திருக்கயிலாய மலை இருக்கும். அந்த மலையின்மீது இமைக்காத மூன்று விழிகளையுடைய சிவபெருமான் உமையம்மையோடு வீற்றிருப்பார். அந்த

மலை யுகமுடிவு காலத்தில் அண்ட கடாகம் வரையும் மேலேயும் கீழேயும் நீளும்.

மேற்சொல்லப்பட்ட எட்டுக் கண்டங்களிலும் வசிப்பவர், துன்பம், நோய், திரை, முதுமை என்ற இவை சற்றேனும் பொருந்தப் பெறமாட்டார். முதல் யுகம் போலவே மற்ற மூன்று யுகங்களிலும் வன்மை, நிறை, அறிவு, சரீரம், முயற்சி, வயது, அளவிடுதற்கரிய சிறப்பு என்னும் இவை முதலான எல்லாவற்றையும் ஒரே தன்மையாகப் பெறுவர், இவர்கள் முன் பரதகண்டத்தில் பிறந்திருந்து செய்த நன்மை தீமை என்ற இருவினைகளின் பயனை அனுபவிப்பர் என்று சொல்வர். அங்கு வானத்தில் உள்ள மேகம் சென்று மழை பெய்யாது.

பாரத வருடத்தில் உள்ளவர்கள் பூமி முழுவதையும், மற்றும் பல தொழில்களைச் செய்தும் புண்ணியம், பாவம், என்பவற்றைத் தேடி நிறைவான அருளையும், ஆதி, பௌதிகம், முதலான மூன்றாலும் வரும் பயன்களையும் அடைந்து வாழ்வர் எனச் சொல்வர்; பெருமை, வன்னை, சிறப்பு, அறிவு, நிறை, ஆயுள், வடிவம், உணவு, தொழில் என்ற இவற்றை யுகங்களுக்கு ஏற்ற முறையாகவே பெறுவர். மலை, நெல் முதலான பல பயிர்களால் விளைந்த உணவுகளையும் தூய பழங்களையும் காய் கிழங்கு முதலியவற்றையும் உண்பர்.

கவிஞர்களால் பாராட்டப்படும் பரதன் என்பவனும் இந்திரன், கசேருகன், தாமிரபன்னன், கபர்த்தி, நாகன், சவுமியன், கந்தருவன், வருணன் என்ற எட்டு மைந்தருடன் குமரி என்ற பெண்ணையும் மகிழ்வுடன் பெற்றெடுத்து, அவர்களின் பெயரால் ஒவ்வொன்றுக்கு ஒவ்வோராயிரம் யோசனையாய்ப் பூமியில் உள்ளவரால் புகழப்படுகின்ற பரத கண்டத்தை ஒன்பது கண்டமாகச் செய்து அந்த ஒன்பதின்மருக்குத் தந்தான்.

ஒன்பது கண்டங்களில் ஒன்றான குமரிக் கண்டத்தில் கங்கை, கவுதமி, யமுனை, கவுரி, வானி, காவேரி, நருமதை, பாலி, கம்பை, பம்பை, துங்கபத்திரை, குசை, கோமதி, பாஞ்சாலி, சூரி, சிகி, பாபகரை, தூதபாபை, சங்க வாகினி, சிகை, பாரத்துவாசி, சார்வரி, சந்திரயாகை, சரயு, வேணி, பிங்கலை, குண்டலை, பொன்முகலி, தாமிரபரணி, வேகவதி, பெண்ணை, முதலான பல ஆறுகள் பெருகிப் பாயும்.

நிலைபெற்ற மகேந்திரம், பொதியம், சையம், சத்திமான், இருட்சம், பாரியாத்திரம், விந்தம் என்னும் ஏழு மலைகளும், ஆயிரத்தெட்டுத் தலங்களும்

ஓதப்படுகின்ற சிறந்த வேதத்துக்குரியவர்களான அந்தணர் வாழும் நாடுகள் மிகப் பலவும் வைதிக முறையான ஒழுக்கம் அமைத்து உண்மையான முறையைப் பொருந்துவது குமரிக் கண்டம் ஒன்று மட்டும் ஆகும். மற்ற எட்டுப் பிரிவுகளும் மிலேச்ச கண்டங்களாகும். ஆதலால் அவை பெருமை இல்லாதவை.

மேல் சொல்லப்பட்டவை சம்புத்தீவில் உள்ள இடங்கள் ஆகும். குளிர்ந்த பெரிய பாற்கடலால் சூழப்பட்ட சாகத்தீவில் உள்ள கோமேதாதி என்பவனுக்கு மைந்தர் சாந்தவயன், சிசிரன் கோநயன், அனந்தன், உயர்ந்த சிவன் கேமகன், சிறப்புடைய துருவன என்பவர் ஆவார், அந்தத் தீவை இம்மைந்தர் பெயர் அமைய ஏழு கண்டமாக்கி அவர்களுக்கு அளித்தான். அத்தீவுக்குக் கடவுள் வாயு. அந்தத் தீவில் வாழ்பவர் ஆரியரும், விந்தகரும், குகரரும் ஆவார்.

சோமகம், சமனம், சந்திரம், துந்துபி, வப்பிராசனம், நாரதீயம், பழைய புகழ் உடைய கோமதம் என்று ஏழு மலைகளும், சிவை, விபாவை, குளிர்ந்த அமிர்தை, சுகிர்தை, மனு, தத்தை, சித்தி, அழகு பொருந்திய கிரமை என்னும் ஏழு ஆறுகளும் அந்தத் தீவில் அமைந்திருக்கும்; தயிர்க்கடல் சூழ நிற்கின்றபொன் நிறம் உடைய குசத்தீவில் வபுட்டு என்னும் மன்னனுக்கும் ஏழு மைந்தர் பிறந்தனர்.

சுப்பிரதன், உரோகிதன், தீரன், மூகன், சுவேதகன், சித்திபன், வைத்திதன் என்று சொல்லப்படுகின்ற இந்த ஏழு புதல்வரின் பெயர்களை வைத்து ஏழு வருடங்களாகப் பிரித்துத் தந்தான். உன்னதம், குமுதம், குமாரம், மேகம், சந்தகம், மகிடம், துரோணம் என்ற ஏழுமலைகளும் சோனை, வெள்ளி, மதி, தோமை, நிகரில்லாத நேத்திரை, விமோசனை, விருத்தி என்ற ஏழு ஆறுகளும் உள்ளன. இந்தத் தீவுக்குக் கடவுள் வாயு.

அந்த தீவில் வாழும் மக்கள் தர்ப்பகர், கபிலர், சாரணர், நீலர், தண்டகர்,விதண்டர், ஆவார், அதற்கு அப்பால் நெயக்கடலும் கிரவுஞ்சத் தீவும் உள்ளன. அந்தத் தீவின் மன்னன் சோதிட்டு என்பவனாவான். அவனுடைய மைந்தரான மெய்ம்மை பொருந்திய சாரணனும் கபிலனும், கிருதியும் வேணுமானும், இலம்பகனும் உற்பிதனும் என்று சொல்லப்படும் எழுவரின் பெயர்களுடன் ஏழு பிரிவுகள் ஆக்கிச் சிறப்புடன் அவர்கள் அரசு செய்யுமாறு தந்தான்.

நிலைபெறற குசேசயம அரியும விதது௫மமும புடபாவருததமும இமமம துதிமானும எனற மலைகள ஏழும. சிவையும விதூதபாபையும, இமையும புனிதையும பூரணையும, அகிலபபையும தமபையும எனனும ஏழு ஆறுகளும பொருநதப பெறறுளளன அநதத தீவில வாழபவா தபதா, சடாவகா மநதேகா,எனப பேசபபடும புகழையுடைய பலரும ஆகும அநதத தீவுககுரிய கடவுள பிரமாவே ஆவாா

அநதக கிரவுஞசத தீவுககு அபபால கருபபஞசாறறால சூழபபடடுளள தீவு சானமலித தீவாகும அநதத தீவுககு மனனன துதிமானன ஆவான அவனுடைய மைநதா குசலன வெயயவன, தேவன முனி அநதகாரன சோாவிலலாத மனோரதன துநதுபியும ஆவா அவாகளககு அநதத தீவை மனனன ஏழுபகுதியாயப பிரிததுத தநதான சொலலபபடும கிமிரம சுரபி வாமனம விருததம, துநதுபி, சமமியததம, புணடரீகம எனற ஏழு மலைகளும அஙகு உளளன பாயநதோடும குமுதமும கவரியும ஆதியும யாமையும புணடரிசையும மனோபமையும சநதியையும எனறு பேசபபடுகினற குளிாநத ஏழுநதிகளும, புடலதாதரும சிறநத புடகரரும தனியமும சசிரரும எனறு சொலலபபடுபவா குறறமினறி அஙகே வாழும மககள ஆகும அநதத தீவுககுத தெயவம சிவபெருமான இநதத தீவுககு அபபால தேனகடலால சூழபபடடுளள தீவு கோமேதக மாகும அவவியன எனபவன அததீவை முனநாளில ஆணடவன அவனுககு ஏழு மைநதா தோனறினா

தூய விமோசனன மேகன சகலன, சோமன சுகுமாரன, குமாரன, மரீசகன எனற மைநதருககு ஏழு பிரிவாககித தநதான அவவியன எனற மைநதன சிஙகம, அநதம, உதயம, சலகம, கிரவுஞசம, ஆமபிகேயம, இரமியம எனறவை அஙகுளள ஏழு மலைகள அயாதி, தேனு, கபததி, சுகுமாரி, குமாரி இககு, மாயை எனனும ஏழு நதிகள அததீவில உளளன மநதகா, ஆமஙகா, மாகதா மானசா அஙகு வாழும மககளாவாா அவாகளககுத தெயவம சநதிரன தூயநீாக கடலால சூழபபட ட தீவு புடகரம ஆகும அதன மனனன சவனன எனபவன அமமனனன தன மைநதரான வனமையுடைய தாதகி மாபீதன எனபவாகளுககு அநதத தீவை இரணடு பாகமாகப பிரிததுததநதான, இடபம, மகேநதிரம, வருணம, வராகம, நீலம, இநதிரம இநதிரியம எனபவை அஙகுளள ஏழுமலைகள, குடிலை, சிவை உமை, தரணி சமமை, சிஙகை குமரி எனனும ஏழு நதிகளை அததீவு பெறறிருநதது

மேனமையுடைய நகரா, நாகா எனபவா அதநீவில வாழபவா கதிரவனே அவாககுக கடவுள அநதப புடகரத தீவின ஐமபதாயிரம யோசனை அகலமாக ஏழு 'மலை மான சோததரம' எனற பெயருடன வணடியின உருளையைப போல வடடமான உருவமாக இருககும அநத மலையிலே இந-ரனககம மறறத திககு பாலகா ஏழுபோககும கிழககு முதலான எடடுத திககுகளிலும பதவிகள அமைநதிருககினறன

எழுகினற அலைகளையுடைய ஏழகடலகளின முடிவுகளில எலலாம பககததிலே சூழநது ஒவவொரு மலை இருககும இநதப பூமியில உளளனவான சாகம முதலான தீவுகளில எலலாம உளளவாகளுககு நரை, திரை, மூபபு, துனபம எனபவை இலலை அவாகள எலலாம கலியுகததிலும, கிமபுருடரின தனமையை அடைவா அவாகள பததாயிரம ஆணடுகள வாழவாாகள அதறகு அபபால உளளது 'பொன பூமி' அதைச சூழநது பெரிய சககரவாளமலை உளளது

அநதச சககரவாள மலைககு இபபககம கதிரவனின ஒளியுணடு அநத மலைககு அபபால இருள படலம ஆகும அநதச சககரவாளமலை மாணிகக மணியின நிறததையுடையது அஙகுளள தலைவாகள சிறபபுடைய இயககாகள ஆவாாகள அரககாகளும கொடிய பேயக கூடடஙகளும அநத இடததில இருபபாாகள திககுபபாலகாகளும மேருமலையில இருபபாாகள அதறகு அபபால சிறபபுப பொருநதிய புறககடல உளளது அதறகு அபபால இருள நிலமாகும அதறகும அபபுறம அணடசசுவா உளளது

"ஊழவினையின வனமையாலே தமதம உயிாகளைத தாஙகளாகவே மாயததுக கொணடவாகளும, தெளிவான அறிவு இலலாதவாகளும சககரவாள மலையின வெளியே சூழநதிருபபாாகள அதறகு அபபால உளள இருடபூமியின எலலையில அனாதி இறைவரான சிவபெருமான வீறறிருககினற ஒரு கயிலாய மலை உளளது அநத அணடததின பககததில பூதகணஙகள நிறைநதிருககும பழைய அறிஞா சூழநதிருககினற சமபுததீவு முதலாக அணடசசுவா வரையிலும பூமி எனறு சொலவா இநத வுலகததிறகு மேல தேவகஙகையாறு பாயகினற இடம உளளது அதறகு மேல கதிரவன மணடலம இருககினறது, அது பூவுலகததினினறும ஓா இலடசம யோசனை தொலைவில உளளது அநத மணடலததில முபபதது முககோடி தேவாகள கதிரவனுடன உலவுவா அதன மேல சநதிர மணடலம ஓா இலடசம யோசனை தொலைவில உளளது அதனமேல நெருஙகிய விணமீனகளின மணடலம

இலட்சம் யோசனை தொலையில் உள்ளது. அதன் மேல் மிக்க ஒளியுடைய புதனது மண்டலம் இரண்டு இலட்சம் யோசனை தொலைவில் உள்ளது. அதன்மேல் சுக்கிரன் உலகம் இரண்டு இலட்சம் யோசனை தொலைவில் உள்ளது. அதற்கு அப்பாலான மேல் உள்ள இடத்தில் செவ்வாய் மண்டலம் இரண்டு இலட்சம் யோசனை. அதற்கு மேல் சனி மண்டலம் இரண்டு இலட்சம் யோசனை. அதற்கு மேல் ஏழு முனிவர் இருக்கும் மண்டலம் இலட்சம் யோசனை. புலர் லோகத்தின் நன்மை படைத்த தொகை பதினைந்து இலட்சம் தொலைவு. இந்தவுலகத்தின் மேல் உள்ள இடம் ஏழுவகைப்பட்ட வாயுக்கள் பொருந்தியுள்ள இடமாகும். தொகுதியான இந்தப் பதங்களின் மேல் சுவர் லோகம் எண்பத்தைந்து இலட்சம் யோசனை. அந்தவுலகத்தில் அடைக்கலமாயிருந்து தேவர்களும் மற்றவர்களும் துதிக்க இந்திரன் ஆட்சி செய்வான். அதன் மேல் மகலோகம் இரண்டு கோடி யோசனை. மார்க்கண்டர் முதலான முனிவர்கள் பலர் இங்கே இருப்பர். அதன் மேல் இவ்வுலகத்தவரால் துதிக்கபபடும் சன உலகம் உள்ளது. அதன் தொலைவு எட்டுக் கோடி யோசனை; அங்கே பிதிர் தேவர்கள் இருப்பர். அதன் மீது தவ உலகம் உண்டு. அதன் உயரம பன்னிரண்டு கோடி யோசனை. சனகர் முதலிய முனிவர் அங்கு இருப்பர். அதற்குமேல் சத்திய உலகம் உள்ளது. அது பதினாறு கோடி யோசனை அது நான்முகனின் இன்ப இடமும் உலகங்களைப் படைக்கும் இடமுமாகும் அதன் மேல் குற்றம் இல்லாத பிரம லோகம் மூன்று கோடி யோசனை தொலைவில் உள்ளது. திருமால் வாழும் சிறந்த உலகம் மூன்று கோடி யோசனை தொலைவு; அதன்மேல் சிவ உலகம் நான்கு கோடி யோசனை தொலைவு; அந்த வுலகத்தின் மேல் விளங்கும் அண்ட கோளகையும் கோடி யோசனை தொலைவு ஆகும். வேதங்களும், சைவ ஆகமங்களும், அவ்விருவகையின் சார்பு நூல்களும், மிருதிகளும், மற்ற நூல்களும், ஒன்றுடன் மற்றொன்று மாறு படக் கூறும் அண்டத்தின் தன்மை மாறுபடாவோ என்றால், உண்மையை ஆராயும் போது படைப்பும் அளவில்லாத பேதமாகும். ஆதலால் அறிய வேண்டியவற்றை அறிந்த உனக்கு, இப்போது, உண்மையையே உரைத்தோம்; குற்றம் இல்லாத அண்டத்தில் நூறறெட்டுப் புவனங்கள் உள்ளன. அவை சிவபெருமானின் அருளைப் பெற்ற உருத்திரர்களின் இருப்பிடமாகும். மகனே! சூரபன்மனே! முன்பு சிவபெருமான் உனக்கு அரசாளத் தந்த ஆயிரத்தெட்டு அண்டங்களும் இந்த அண்டத்தின் தன்மையைக் கொண்டவை; இத்தன்மையை நீ காண்பாய், என்று வகுத்துச் சுக்கிரா சாரியார் கூறச் சூரபன்மன் அதுகேட்டு அளவில்லாத மகிழ்ச்சி அடைந்தான்.

## 30. திக்கு விசயம்

வெற்றித் திரு பொருந்தப் பெற்ற வன்மையுடைய சூரபன்மன் பல நல்லனவற்றையெல்லாம் எடுத்துக் கூறிய சுக்கிராசாரியரின் அடிகளை வணங்கிச் சிங்க முகனுடன் அவரிடம் அனுமதி பெற்றுக் கொண்டு அசுரப் படை வெள்ளத்தில் விரைந்து வந்து சேர்ந்த போது தாயாகிய மாயை என்பவள், தன் மைந்தர்மூவரும் செக்கர் வானம் போன்ற சிவந்த சடையையும் நெற்றிக் கண்ணையும் உடைய சிவபெருமானின் அருளால் பெற்றுக் கொண்ட பழைய வரங்களையும் வலிமையையும் உள்ளத்துள் நினைத்து அன்புடன் வானத்தே வந்து தோன்றி வேள்வியில் நிகழ்ந்தவற்றையும் அதற்குச் சிவபெருமான் அருளிய வரங்களையும் கேட்டு இங்கு உங்களை அன்புடன் காண்பதற்காக வந்தேன்; நீங்கள் இந்திரன் முதலான தேவர்களை உங்கள் வலிமையால் வெல்லுங்கள்! என்று சொல்லி பிரிந்து சென்றாள். இனி விரைவில் போவதே செய்யக் கூடியது என்று அப்போது சொன்னாள்.

இத்தகைய தன்மையில் படைகளுடன் சூரபன்மன் குபேரனின் பெரிய நகரத்தைச் சூழ்ந்தான். அவ்வாறு அவன் சூழ்ந்து கொண்டதை ஒற்றர்கள் அறிந்து விரைந்து ஓடிப் போய், இயக்கரின் மன்னனான குபேரன் உள்ள பொன்னால் ஆன சிறந்த அரண்மனையை அடைந்தனர். விரைவாகச் சென்ற ஒற்றர்கள் தம்மன்னன் குபேரனின் அடித் தாமரைகளை வணங்கி, "வலியஆற்றலையுடைய சூரபன்மன் நம் நகரத்தை முற்றுகையிட்டுள்ளான், இன்று இந்நகரமானது அழிந்து விடுவது போல் இருக்கின்றது. ஆதலால், இங்கு நீ வாளா இருப்பது நல்லது அன்று; தீங்காய் முடியும்; படையுடனே அவனை எதிர்த்துப் போருக்குச் செல்வீர்" என்று மொழிந்தனர். அளகாபுரியின் மன்னனான குபேரன் புட்பக விமானத்தில் ஏறித்தூய இயக்கருடன் சென்று, சூரபன்மனை வணங்கித துதித்துத் தக்க வாழ்த்தினைச் சொல்லி, 'நான் உமக்கு அடியவன்' எனச் சொல்ல அசுரர் தன்னை வணங்க, அவனைச் சூரபன்மன் அனுப்பி வைத்தான். வழியில் மறித்துப் பொருள்களைப் பறிக்கின்ற கள்வரைப் போல அசுரர்கள் எல்லாரும் கொள்ளை செய்து அந்த நகரத்தை வறியதாக்கி விட்டுப் போக, அதனால் துன்பம் அடைந்த குபேரன், உள்ளத்தில் வெட்கம் அடைந்து செல்வத்தை இழந்துவிட்ட தன் அளகாபுரிக்குத் திரும்பிப் போனான். அந்தச் சிறந்த நகரத்தை விட்டுச் சூரபன்மன், விரைந்து செல்லும் தன் படையோடும் சினம் கொண்டவனாய்க் கிழக்குத் திசையில் உள்ள இந்திரனின் அமராவதி நகரத்துக்குப் போக. மிக்க துன்பத்தை உடைய தேவரின்

தலைவனான இந்திரன் இதையறிந்து சுவர்க்க லோகத்துக்குச் சென்றான். இந்திரன் சொர்க்கவுலகத்துக்கச் சென்றதைச் சூரபன்மன் அறிந்து, அந்த நகர் முழுவதையும் சுடும்தீ கவருமாறு விரைவில் அழித்து, அந்த இடத்திலிருந்து படைகளுடன் நீங்கி, கொடிய சிவந்த அக்கினி தேவன் உள்ள நகரத்துக்குச் சென்றான்.

அங்ஙனம் அவன் செல்லவும், அக்கினி தேவன் அதை அறிந்து எல்லையில்லாத கொடிய சினத்தை அடைந்து, இலட்சம் கோடி படைகள் சூழ்ந்து வர, எதிர்வந்து போர் செய்தான். எதிர்க்கவும், அக்கினி தேவனின் பெரும் படையும், வந்து எதிர்க்கின்ற அவுணர் படையும் நெருங்கி ஒருவருடன் ஒருவர் எதிர்த்துப் போர் செய்த போது, அச்சம் பொருந்திய அக்கினி தேவனின் படையானது தோற்றது. அக்கினிதேவன் நாணம் கொண்டு தன் நகரத்துக்குப் போனான். அப்போது தாரகன் அவ்விடம் விட்டு நீங்கினான். சூரபன்மன அவற்றையெல்லாம் கண்டு தன் தேரோட்டியைப் பார்த்து எமன் இருக்கின்ற பழைய நகரத்திற்குக் கடிவாளத்தையுடைய குதிரை பூட்டிய தேரைச் செலுத்துவாயாக! என்று சொன்னான்."எனக்கு முன்னால் குபேரனும் அக்கினி தேவனும் சூரபன்மனை எதிர்கொண்டு துதித்துச் சென்றனர். ஆதலால் அச்செயலைச் செய்வதே சிறந்ததாம்" என எமனும் அறிவின் மேனமையால் நினைத்தான். கூற்றுவன் மனத் தெளிவுடன் எழுந்துதன் எருமைக் கடாவில் ஏறிப் பொருமையில்லாத படை வீரர்கள் நெருங்கிவரச் சென்று, இமைப் பொழுதில் சூரபன்மனை அடைந்து, சொல்லுகின்ற வாழ்த்துகளையுடையவனாய், வணங்கித் துதித்தான். சிறந்த எமனது செயலைப் பார்த்து விருப்புடன் மனம் மகிழும் சூரபன்மன், அந்தஎமனைப் பார்த்து "எம் ஆணையைச் சிரமேற் கொண்டு இங்கு உம் பரிவாரங்களுடனே இருப்பாயாக" என்று கட்டளையிட்டு அனுப்பி அப்பாற் போனான்.

வருணனும், வாயுதேவனும் அஞ்சிக் கடலிலும் இருள் உலகத்திலுமாக விரைந்து சென்றனர். அங்ஙனம் அந்த இருவரும் மறைந்து விட, அந்த இருவரின் நகரங்களைக் கொள்ளையிட்டு அழிவைச் செய்து, ஏழு வகையான பாதலங்களுக்கும் சென்று, அங்குள்ள அசுரர் முதலியவர் துதிக்க சூரபனமன் அவர்களுக்கு அருள் செய்து சென்றான். பினபு சூரபன்மன் ஆதிசேடன் இருக்கும் உலகத்தை அடைந்தான். அவன் சினத்துடன் போர் செய்ய, படைகளால் வெற்றி பெற்று, பின்பு அந்தப் பாம்பரசன் துதிக்க அவனது இருப்பிடத்தே ஒரு நாள் தங்கியிருந்தான் பின் சூரபன்மன் பூவுலகத்தில் வநது

ஒரு கடலைக் கடந்து அப்பால் உள்ள சாகத் தீவையும் கடந்து, பெரிய படை வெள்ளம் தன்னைச் சூழ்ந்து வரச் சக்கரப் படையையுடைய திருமால், இலக்குமியும் பூமி தேவியும் துதிக்க பாம்பணையில் அறிதுயில் கொள்கின்ற பாற்கடலில் விரைந்து சென்றான். சென்ற சமயத்தில் அவனது போர்க்குரிய அசுரப்படை வீரர் எல்லாரும் கரிய கடல் போன்ற கருநிறம் கொண்ட திருமால் இந்த இடத்தில் இருப்பார் என்று சொல்லி, முன் காலத்தில் தேவர்கள் கடைந்தது போல், மிக்க ஆரவாரத்துடன் அ ந்தப் பாற்கடலை விரைந்து கலக்கத் தொடங்கினான்.

செந்தாமரை மலரில் இருக்கும் இலக்குமியும், பூமிதேவியும், அசுரர்கள் ஆரவாரம் செய்யும் ஒலியைக் கேட்டனர். உடல் வியர்த்து நடுக்கம் கொண்டனர். அஞ்சி நடுங்கிக் கரிய மேனியையுடைய திருமாலின் மார்பைத் தழுவிக் கொள்ள, திருமால், பாம்பணையினின்று எழுந்து உலகங்களை அழிக்கின்ற வெம்மையுடைய வடவைத் தீயும் அஞ்சுமாறு சினந்து, "கொடிய அசுரர் என்னுடன் போரிடவும் வந்துவிட்டனர். அவர்களின் வன்மையைக் காண்பேன்" என்று சொல்லித் தன் பெரிய கைகளை ஒன்றுடன் ஒன்றைத் தாக்கி நகைத்தார்.

மிக்க ஆற்றலையுடைய கருடன் வரவேண்டும் என்று திருமால் நினைப்பதற்கு முன்னம் அத்திருமாலுக்கு முன் வந்தான். அந்தக் கருடனின் அழகான தோள் மீது ஆண் சிங்கம் போல் அமர்ந்து, சந்திரனைப் போன்ற வெண்மையான சங்கும், சக்கரமும், தண்டும், வாளும், வில்லும் என்ற ஐம்படைகளைக் கைகளில் கொண்டு அசுரப் படையின் முன் சென்றார். மேகம் போன்ற கரிய நிறம் உடைய திருமால் சிறந்த கருட வாகனத்துடன், பூமியைச் சூழந்து நிற்கும் கடல் போல், அசுரரை வளைந்து, சூழ்ந்து, எண் இல்லாத உருவங்களைக் காட்டி எவரும் தப்பிப் பிழைத்துப் போகாதவாறு பெருமையிற் சிறந்த, தாவிச் செல்கின்ற அம்புகளை எய்து, தேவர் ஆரவாரம் செய்யப் போர் செய்தார். கொடிய தாரகன் விண் உலகத்தை அளந்த தாமரை மலர் போன்ற திருவடிகளையுடைய திருமாலுக்கு முன்னால், எதிரே சென்று, தன் பெரிய வில்லை வளைத்துக் கடலில் மேகம் விடா மழை பெய்வதைப் போல் சிறந்த அம்புகளைத் திருமாலின் மீது தாக்குமாறு விரைவாக எய்து ஆரவாரம் செய்தான்.

## 31. திருமாலும் தோற்றல்

“**சி**வபெருமான் மகிழ்ச்சி அடைய அக்கினியுடன் கூடிய வேள்வியைப் பலகாலம் செய்து உங்களைப் போல வலிமை பெற்றிருப்பவர் அசுரர்களுள் ஒருவரும் இல்லை. இந்த வுலகத்தில் உங்களை வெல்லும் வன்மையுடையவர் யார்? எவரும் இல்லை. எங்கட்கு நீங்கள் உறவினரே” எனக் கூறி மங்கலமரபுடன் எல்லையில்லாத வாழ்த்துக்களைச் சொல்லித் திருமால் திரும்பிச் சென்றார். பரவிய இருள் போன்ற உடலையும் நீரில் தோன்றும் அலை போன்ற சிவந்த கைகளையுடைய அசுரக் கூட்டத்தவர், அவற்றையெல்லாம் பார்த்தனர். ஆரவாரம் செய்தனர். தேவர்கள் எல்லாம் அஞ்சி ஓடி உடல் வியர்க்கப் பெற்றுத் துக்கத்தில் ஆழ்ந்தவராய், இறந்தவர்களைப் போல் தளர்ந்தனர்.

திருமாலானவர் சென்றபோது மகரந்தம் சிந்தும் வெற்றி மாலையை அணிந்த தாரகன் வேறு ஒரு தேரில் ஏறித் தம் தமையன் சூரமபன்மனுக்கு முன்னம் போக அந்தச் சூரபன்மனும் இங்கு நிகழ்ந்தவற்றைக் கேட்டறிந்து, தழுவி, அன்பும் உவகையும் பெற்றுப் படைகளுடன் அப்புறம் அகன்று சென்றான்

அந்தச் சூரபன்மன் சக்கரவாள மலை வரை, பூவுலகத்தின் எல்லை எங்கும் சுற்றி அங்குள்ள அதிசயங்களைப் பார்த்துப் போய்ப் பழைய பெரிய வான் உலகத்தில் சென்று கீழ் உள்ள நிலைகளில் உலவும் கதிரவன் முதலான கோள்கள் எல்லாம் ‘வாழ்ந்திருப்பாயாக’ என்று வாழ்த்துச் சொல்ல, வானில் உயர்ந்துள்ள சுவர்க்க உலகத்தை அடைந்தான். இவ்வாறு சூரபன்மன் சொர்க்கத்துக்குச் செல்லவும் சிறப்பான செய்திகளைத் தெரிவிக்குமாறு முன் அனுப்பப்பட்ட ஒற்றர்களுள் சிலர் ஓடிப்போய், ‘சூரபன்மன் வந்து விட்டான்’ என்று சுவர்க்கத்துத் தலைவனான இந்திரன் கேட்கும்படி சொன்னார்கள். இந்திரன் ஒற்றர் உரைத்ததைக் கேட்டு அஞ்சிப் பெருமூச்சு விட்டு வாடி அழுது, கண்டவர் ‘இவன் இறந்தான், அதில் ஐயமில்லை’ எனக் கூறுமாறு அறிவு மயங்கி வன்மை இழந்து, தன் மனத்தில் பின்வரும் இவற்றை எண்ணலானான்.“ நாணத்தையும் பகைவரின் நகைப்பையும் நான் பொருட்படுத்த மாட்டேன். தூண் போன்ற தோள்களையுடைய சூரபன்மனை யான் காணினும், சினம் உடைய உள்ளம் உடையவனாய் என்னை வலிய விலங்குக்குள் மாட்டுவான்” என்று இவ்வாறு அந்த இந்திரன் நினைத்தான். “இவ்வாறாக இந்திரன் நினைத்து எழுந்து விரைவாகத் தன் மனைவி

இந்திராணியும் ஒரு குயிலின் வடிவத்தை எடுத்துக் கொண்டு, மிகுகின்ற துன்பத்தைக் கொண்டவனாய் வானத்தில்சென்றான். பகைவரான அசுரர் இந்திரனைத் தேடுவதை குறித்து, 'இந்திரனின் செல்வமும் அழியும் போலும்! இனிச் செய்யத்தக்கது யாது? என்று வருத்தம் அடைந்து சொர்க்க லோகம் முழுதும் பொலிவு குன்றியது. அசுரர் அங்குள்ள தேவர்களைப் பிடித்தனர்; வருந்துமாறு அடித்தனர்; இடி ததனர்; அவர்களின் தோள்களில் அணிந்த ஆடைகளால் உரத்த தோள்களைத் தம் கைகளால் முரித்ததுபோல விரைவில் கட்டினர். அசுரர்கள் இந்திரனின செல்வத்தையெல்லாம கவர்ந்து வந்த போது காசிப முனிவர் பெற்ற முதல்மகனான சூரபன்மன், சொல்வதற்கறிய மகிழ்ச்சி அடைந்தான்; தம்பியர் பக்கத்தில் வரச் சிறந்த ஒலியையுடைய வேதங்கள் முழங்குகின்ற உயர்ந்த 'மக உலகத்தை' அடைந்தான். கற்றறிந்த நூல் உணர்சசியையுடைய மார்க்கண்டேயர் முதலான முனிவர் உள்ள பதமான பழைய பெரிய மக உலகம் முதலான மூன்று உலகங்களிலும் போய் அங்குள்ளவர் போற்ற,அப்பாற் போய்த், தாமரை மலரில் வீற்றிருக்கின்ற நான்முகனின் சத்திய வுலகத்துக்குச் சென்ற போது, நான்முகன் அதை அறிந்து நடுக்கம் கொண்டார். குற்றம் இல்லாத தவத்தையுடைய மெஞ்ஞானியர் இசை பொருந்திய வேதத்தை இயம்பிய்வாறு சூழ்ந்து வர, விருப்பத்துடன் நான்முகங்களையுடைய நான்முகன் அசுரர்க்கு மன்னனான சூரபன்மனை அணுகினார். ''இலக்குமியைச் சேர்கின்ற அழகிய மார்பையுடைய திருமாலையும், தேவர்களையும் இன்று உன் தம்பி தாரகனைக் கொண்டு வெற்றி கண்டாய். ஆதலால், உலகத்தில் உன்னை போன்றவர் யார் இருக்கின்றார்? ஒருவரும் இல்லையே!" என்று பலவகையான சொற்களைச் சொல்லி பின் அவனுடைய தம்பியரையும் பார்த்து, அழிவில்லாத அழகான வில்லையும் வலிய தேரையும் சிறந்த தன்படைக்கலத்தையும் அளித்தார். தேவர்கள் அஞ்சும்படி வெவ்வேறாக அவற்றை அந்த இருவருக்கும் அளித்தார். யாவராலும் வணங்கப்படுகின்ற சூரபன்மன் அதைப் பார்த்துப் பெருங்களிப்புக் கொண்டவன் ஆனான். மாயை என்பவள் முன்னம் பெற்ற மகனான சூரபன்மன் உள்ளம் மகிழ்ந்து நான்முகனை அந்த இடத்தில் இருக்குமாறு கட்டளை இட்டு, மணம் பொருந்திய துளசி மாலையைச் சூடிய திருமால் வீற்றிருக்கின்ற சிறந்த வைகுண்டத்திற்குப் போனான். அச்சமயத்தில் அந்த இடத்தில் இருந்த திருமால் எதிர் கொண்டு வந்து சூரபன்மனை அடைந்து 'குறைவற்ற வாழ்நாட்களுடன் வாழ்க!' என்று வாழ்த்தி அளவில்லாத வாழ்த்துக்களைச் சொன்னார். அங்ஙனம் அவன் பார்த்த பின்பு, பாம்பின் மீது

அறிதுயில் கொள்கின்ற திருமால் அந்தப் பதவியில் வீற்றிருக்குமாறு அனுமதி தந்து, சூரபன்மன், கரிய நிறத்துடன் விளங்கும் திருக்கழுத்தினையும் மூன்று திருக் கண்களையும் உடைய சிவபெருமான் வீற்றிருக்கின்ற சிவவுலகை அடைந்து திருமால், நான்முகன் முதலிய தேவர்கள் எல்லாருக்கும் அவரவர்க்குரிய அதிகாரங்களையெல்லாம் குறைவு இல்லாமல் தந்து வீற்றிருக்கின்ற சிவபெருமானின் உலகத்தை அடைந்து, பரிவாரங்களையெல்லாம் பிரிந்து தேவர்களால் புகழப்படும் தம்பியருடன் சென்று, சிவபெருமான் வீற்றிருக்கும் திருக்கோயிலின் முதற்கடை வாயிலில் நின்று, தன் வரவை உணர்ந்த திருநந்தி தேவர் சிவபெருமானின் கட்டளைப்படி அனுப்ப, உள்ளே சென்று, கார்த்திகை மலரைப் போன்ற சிவந்த கையையுடைய உமையம்மையாரோடு வீற்றிருக்கின்ற மூன்று கண்களையுடைய சிவபெருமானின் திருமுன் சென்று பக்தியுடன் வணங்கி நின்றான். திருக்கழுத்தில் நஞ்சை அணிந்திருக்கின்ற சிவபெருமான் அவனுக்குக் கருணை செய்து, "இனி நீ மற்ற அண்டங்களையும் போய்ப் பார்த்து, என் ஆணையினால், உலகங்கள் எல்லாவற்றையும் எட்டுத் திக்கில் உள்ளவரும் துதிக்கமாறு அரசு செய்வாயாக" என்று வாழ்த்திக் கூறினார். சூரபன்மன் தாமரை மலர் போன்ற அப்பெருமானின் திருவடிகளை வணங்கி விடை பெற்றுக் கொண்டு வெளியில் வந்தான். வெளியே வந்த சூரபன்மன் முதல் கடைவாயிலில் வந்து, விரைவாகத் தன் படையை அடைந்து, சிறந்த அண்டகோளகையை அடைந்தான். வன்மை வாய்ந்த நாய் வாகனத்தின் மேல் உள்ள வைரவர்களும், அளவில்லாத உருத்திரர்களும் அங்கே இருந்தனர். அவர்கள் எல்லாரும் சிவபெருமானின் அருளைச் சிந்தித்தனர். அந்தக் காவல் தேவர்கள் பக்கத்தில் இருந்த அண்டங்களுக்குச் செல்லும் வண்ணம் வாயிலைக் காட்டி அனுப்பினர். சூரபன்மன் சிறந்த படைகளோடும் மற்ற அண்டங்களிலே விரைவாகப் போய் அந்த அண்டத்திலும் இந்த அண்டத்தில் இருப்பதைப் போலவே எல்லாம் அமைத்துள்ளதைப் பார்த்து, அங்கே இருப்பவர் எல்லாரையும் வெற்றி கண்டு அப்பால் போனான். மற்ற அண்டங்களில் எங்கும் எங்கள் தலைவரான சிவபெருமானின் கணங்களாக உள்ளவரின் கருணையினால் போய் அங்குள்ள எல்லாவற்றையும் பார்த்து, அத்தேவர்களை வெற்றிகண்டு, அவர்களின் செல்வங்கள்யாவற்றையும் கவர்ந்து, தன்னிடம் உள்ள பல அசுரர்களை அங்குத் தன் அரசை நடத்தும்படி நியமித்தான்.

## 32. வரவேற்பு

மிகுந்த வலிமையுடைய மாயை என்பவளின் மகனான சூரபன்மன், இவ்வாறு சுவர்க்க உலகத்தில் வந்த போது, முன்காலத்தில் தேவர்களால் வருந்திய அசுரர்கள் அதை அறிந்து மகிழ்ந்து மகிழ்ச்சியில் ஆழ்ந்தனர். ஒற்றா போய் அந்தச் சூரபன்மன் திக்குவிசயமாக வருவதை அசுரேந்திரனுக்குக் கூறினர். அந்த அசுரேந்திரன் தூய நல்ல அமிழ்தத்தை அடைந்து விரைவாக உண்டவனைப் போல் மகிழ்ச்சியில் முழுகினான். அவன் சுக்கிராசாரியரை அடைந்து, "எங்கள் குலத்துக்குத் தலைவனான சூரபன்மனை அடையுமாறு விரைவில் செல்வேன். எனவே, தாங்கள் முன்னால் சென்று எங்கள முறையையும் செயலையும் சொல்வீராக" என்று சொல்லி அவரை முன்னால செல்லச் செய்தான். ஒளியுடன் கூடிய விமானத்தின் மீது சுக்கிராசாரியாா சூரபன்மனிடம் விரைவாகச் செல்லும் அளவில், காசிப முனிவன் பெற்றெடுத்த மைந்தனான சூரபன்மன் பார்த்து வானில் சிவபெருமானைச் சந்தித்தது போல எதிர் கொண்டு வந்தான்.

அவ்வாறு சென்ற சூரபன்மன் கைகூப்பிவணங்கினான். அப்போது சுக்கிராசாரியார் மன மகிழ்வுடனேநின்று, 'செல்வத்திருவும் வெற்றிததிருவும் பெருகுக' என்று குறைவில்லாத வாழ்த்துக்களைக் கூறினார். அப்போது, அவரது பக்கத்தில் நின்ற சிங்கமுகனும் யானை முகமுடைய தாரகனும என்ன இருவீரர்களும் தம் தேவருடன் சென்று தூய சுக்கிராசாரியாரின் அடிகளைக் கை கூப்பி வணங்கினர். அவ்வாறு வணங்கிய அந்த இருவருக்கும் தக்கவாறு மேன்மை மிக்க வாழ்த்துக்களைச் சுக்கிராசாரியார் சொல்லி, பின்பு சூரபன்மனைப் பார்த்து, "உனக்கு நாம் கூறவேண்டிய ஒரு சொல் உள்ளது; அதைக் கூறுகின்றோம்! கேள்! குற்றம் இல்லாத காசிப முனிவனின் மனைவியான உம் தாயைப் பெற்றவன்; நுட்பமான கேள்வி அறிவையுடையவன்; அளவில்லாதவாகளாக இருந்த அசுரர்களைப் பாதுகாத்தவன்; எங்களுக்கு ஒரு துணை எனறு சொல்லப்படுபவன்."

"முற்காலத்தில் நீ தவ நியமத்துடன் வேள்வி செய்த தன்மையையும அதற்குச் சிவபெருமான் அருளிய வரங்களையும் பார்த்தவர் உரைக்க கேட்டு மகிழ்ந்து துன்பம் நீங்கியிருந்தான், அப்போது அவனது நெடிய தோள்கள் வளர்ந்தன. பகைவரின் மூன்று புரங்களையும அழித்த சிவபெருமான் அருளிப பெற்றுக் கொண்ட வரஙகளுடன் சென்று, எல்லாரையும் வெற்றி கண்டு இங்கு

வரும சிறபபைக கேட்டு உனனை எதிாகொளள வருகினறான" மிகக வனமை கொணட அசுரேநதிரன வரும தனமையைக காட்டி, இழிநத தொழிலில அவனை உடபடுததிய சுககிராசாரியாா உரைககவும, ஒலிககினற வீரககழலை அணிநத சூரபனமன மகிழசசி மிகக உளளம உடையவனாய நினறான

நிறைநத சுறறததுடன அவுணரின மனனனான அசுரேநதிரன, சூரபனமனைச சிவநத கைகளால தொழுது கொணடு, பிரிநதுபோன உடலானது தனனிடமிருநது பிரிநத ஆனமாவை வநது பொருநதும தனமை போல வநது சோநதான 'தீயவனான சூரபனமன நிலவுலகததில வநதான' எனற சொலலைக கேடட, தாமரை மலரில வீறறிருககும நானமுகனும, இநதிரனும, மறறத தேவாகளும பெருமை மிகக முனிவாகள அனைவரும, விரைநது வநது திருமால அறிதுயில கொளகினற பாறகடலில சென்றனா

துளசி மாலையைச சூடிய முடியைச கொணட அழகரான திருமாலைஅடைநது, தொழுது வணங்கித தாங்கள, ஒலிககும வீரககழல அணிநத சூரபனமனால அடைநத துனபம எலலாவறறையும சொலலி, 'இனி நாங்கள செயததககது யாது? எம இறைவ, சொலலுக!' "என வேணடி அபபோது அவாகள உரைதத சொறகளைத திருமால கேடடு, "புனமையான தொழிலையுடைய தககன செயத வேளவியில புகுநது கலநது கொணட தீமையால இனறு இவையெலலாம உணடாயின! எவா இதை விலகக வலலவா! எனறாலும இனிச செயயததகக ஒனறைக கூறுவேன! கேளுங்கள' எனறு சொலலத தொடஙகினாா கொடியஅநதச சூரபனமன, முன காலததில மூனறு புரஙகளையும எரிதத சிவபெருமான தநதருளிய வரஙகளைப பெறறுளளான அவன எலலா அணடஙகளையும வெறறி கொணடான எனவே நமமால வெறறி கொளளததககவன அலலன நாம அவனைக கணடு வருவோம! இதுவே செயயத தககது! " எனறு கூறி செநதாமரையில வீறறிருககும நானமுகன முதலியவரும மறற முனிவாகளும 'இதுவே செயயததகக செயல' எனறு மனம இசைநது நிறக, திருமால உயாவுடைய பழைய சிறபபுமிகக சூரபனமனைக் காணுமாறு, பாமபணையினினறு நீங்கி அவாகளுடன போனாா

## 33. புதியதாய் ஒரு நகர்

ஒலிககும வீரககழலை அணிந்த சூரபனமன அதன்பினபு அங்கு நினற தேவ தசசனைப பாாதது, "தச்சனே! நாஙகள இருபபதறகேற்ற அழகுடைய

## 6. குமார:

*சதுர்புஜம் ச ஏகவக்த்ரம் கரண்ட மகுடாந்விதம்*

*சக்திம் ச அபயதம் தக்ஷே சவ்யே வரத வஜ்ரகே*

*பத்ம புஷ்பம் தரம் கண்டே தேவம் பாலஸ்வரூபகம்*

*(ரக்தவர்ணம்)*

*ஒரு திருமுகம், அழகிய பூக்கூடை போன்ற கிரீடம், நான்கு திருக்கரங்களில் இடது பக்கத்தில் சக்திவேல், அபயம், வலது கரங்களில் வரதம், வஜ்ரம்; கழுத்தில் தாமரைப்பூ மாலை, குழந்தை உருவம்.*

நதரததை விரைவாக நீபடைபபாயாக!" எனறு சொனனான அவன குறறம இலலாத கடலின நடுவில எணபதினாயிரம யோசனை பரபபுச சூரபனமன இருககும நகரமாக ஆகுமபடி எலலைசெயது பூமியில உளள மலைகளால கடலைத துாாதது மிகக பாசறையால செபபம செயதாறபோல நிறைநத நிலததைச சமமாகச செயதான அதனபின இருளைப போககும சூரிய சநதிராகள காஞசி புரததில கமபை ஆறறின கரையிலே உளள மாமரததின கீழ வீறறிருககும காமாடசியமமையின திருககோயிலைப போல நாளதோரும சூழநது செலலுமபடி செமபொனனால மதிலை அமைததான நானகு வாயிலகளை உணடாககி மதில உறுபபுகளையும வகுதது அமைததான தேவதசசன நானகு பெரிய வாயிலகளிலும மேருமலையே பொருநதியது எனறு பாாததவா சொலலுமபடி மிகப பெரிய கோபுரஙகளை மணிகள ஒலியைப பரபபுமாறு இயறறினான சிறபநூல விதிகளை ஆராயநது அதறகு ஏறப ஒவவொனறு நூறு யோசனை அளவாகப பககஙகளில பொருநதப பெறற மாளிகைகளையுடைய பலபபல தெருககளை அமைததான தேவதசசன முன காலததில அசுராவாழவதறகு இடமான மூனறு புரஙகளும ஒனறாயக கூடியிருநதது போல மேற சொனன தெருககளில மூனறு மதிலகளை அமைததான அநத மதிலகளுககிடையே ஒபபிலலாத சிறபபுடைய தெருககளை அளவிலலாதவையாகச செயது, குபேரனின அளகாபுரியைப போல செமபொன மயமான அளவிலலாத மாளிகைகளை அமைததான கணிகையா விதிககிசைநத நடனததைச செயயத தகக பெரிய மணடபஙகள பலவறறையும அமைததான தேவதசசன, அநதத தெருககளில அமைககபபடட மாளிகைகள ஒவவொனறிலும திணணைகளையும மணடபஙகளையும, அழகான முறறங களையும அமைததான சிஙகஙகள விளஙகும அழகான கோபுரஙகளையும, செயகுனறுகளையும செமபொன மயமான மாளிகைகளையும, சபைகளை யும, மனறஙகளையும விளஙகும மேல வீடுகளையும தூய சாளரஙகளையும சோலைகளையும பொயகைகளையும தனிததனியே இயறறினான

அநத இடததின நடுவில, பததாயிரம யோசனை தொலைப பரபபு உளபட பரநத பெரிய ஒரு மதில பொருநத அமைதது, மாயை எனபவளின முதல மைநதனான சூரபனமன இருககுமாறு அநத எலலைககுள ஓா அரணமனையை அழகு பொருநத அவன அமைததான

யானைகளும செறிநத தோகளும குதிரைகளும போககுவரவு செயயத தகக தோரணம தொஙகவிடப படட வாயிலகளும தொடாசசியான

திண்ணைகளும சிறந்த பொன்மயமான உச்சியுடைய கோபுரங்களும் வான மண்டலத்தைப் பொருந்திய அழகான செயகுன்றுகளும், அழகான மாளிகைகளும், யானைகள் கட்டுவதறகுரிய இடங்களும், குதிரை நிற்பதறகான இடங்களும, காலாட்படைகள் இருத்தற்கான இடங்களும், தோகள நிற்பதறகுரிய இடஙகளும் , அசுரர்களும தலைவாகளும தங்குவதற்கேறற இடங்களும, அவர்கள அலலாத அரக்கர்கள் இருத்தற்குரிய இடஙகளும, விரும்புவதற்குரிய சுவாக்கஉலகத்தில் உளள அரம்பையர் அனைவரும் நடனம் செய்வதற்குரிய நடனமண்டபங்களும், பாடலின் முறைமையானது பொருநதப் பெற்ற பசும் பொன் மண்டபஙகளும், முறுக்காணியுடைய யாழை வாசிபபதற்கேற்ற வயிரமணி மண்டபங்களும், மயில, புறா, அன்னம், அழகிய மென்கிளி, குயில் முதலிய பறவைகள் உலவும் மண்டபமும், சிறந்த குரஙகுகளும, மான்களும், கலைமான்களும், ஆட்டுக் கடாககளும, பழக்கத்தையுடைய கோழிகளும் நிறைந்துளள மண்டபஙகளும், எப்போதும் வேத ஒலி இசைக்கப் பெறுவதற்கான மண்டபமும், அமைச்சுத் தொழில் நடத்துவோர் இருக்கத்தக்க மண்டபமும் அமைத்தான்.

செல்வம் மிக்க அவுணர் தலைவனானசூரபன்மன், தேவர்கள் துதிக்க அரசு செலுத்துவதற்கு ஏற்ற கொலு மண்டபமும், சிறந்த செல்வங்களாக உள்ளவையெல்லாம் நிறைந்துள்ள பண்டக சாலைகளும், சிவபெருமான் தநதருளிய தெய்வப்படைக்கலம் வைத்தற்குறிய படைக்கலச்சாலையும், வானவர் உண்ணும் அமிழ்தம் போன்ற உணவைச் சுவைக்கத்தக்க அட்டில் சாலையும், கத்தூரி, பச்சைக் கறபூரம், மணம் கமழும் சந்தனம், அகில், பெரியபாக்கு வெற்றிலை ஆகியவையும் இவை போன்ற பிற பொருள்களும் மிகுந்துள்ள பெரிய அழகுடைய மண்டபமும், மான் விழி போன்ற விழிகளையுடைய பெண்கள் தங்கியிருக்கும் மண்டபமும், ஊஞ்சல் ஆடுதலைச் செய்தற்கு ஏற்ற மண்டபமும், வெண்மையான ஒளியை வீசுகின்ற பளிங்கு மண்டபமும், வானை அளாவிய உயர்ந்த சந்திர காந்த மண்டபமும், மாணிக்க மணிகள் ஒளிரும் வசந்த மண்டபமும் சிறந்த பவளங்களால் செயயப்பட்ட அழகையுடைய மண்டபமும், சிறந்த மரகத மணியால் செய்யப்பட்ட மண்டபமும், தாமரையில் தோன்றிய முத்துக்களால் ஆன மண்டபமும், அரசியல் முறையுடையவரின் தகுதிக்கு ஏற்ற மற்றப் பொருள்களும் ஆகிய எல்லாவற்றையும் கொண்டு, இந்த எல்லைக்குள்ளே பெருமை பொருந்திய சூரபன்மனும் அவனுடைய பட்டத்துத் தேவியும் இருக்குமாறு ஓர் அந்தப் புரததைச செய்து, அந்த மனையைச் சூழ அளவில்லாத

எலலாவறறையும மீளவதறகு அரிதாகக கணணும மனமும பொருநத, நரசிமமம போனற உககிரததையுடைய சிறநத வீரவாகு தேவா பாாததாா மாளிகையின அழகு முதலியவறறைப பாாதத வீரவாகுதேவா, கொடுமையும வலிமையும மிகக சூரபனமன சிஙகத தலைகளால சுமககபபடுகினற இருககை மீது அமாநது செமபொன மணடபததில அரசு விறறிருநததைப பாாததாா ஆயிரம யோசனை அளவையுடையதாகக கொளளப பட்ட இடமுடைய பெரிய அவை மணடபததில, நீககுவதறகரிய மககள நிறைநது எள விழவும வெறறிடம இலலாமல நெருஙகி நிறக வயிர மணிகளால உடலும, வயிடூரிய மணிகளால பறகளும, ஒளி பொருநதிய தலையின மீது முததுககளால ஆன பிடரியும அசசம தரும கணகளும அமைநதுளள சிஙகததின தலையால சுமககபபடுகினற அரியணையில கரிய நிறம கொணட இரு பாமபுகள வளைநது மேலே சென்று முறுககப பட்ட வாலுடனே எதிரில இருநதது போலத தொஙகும குணடலஙகள காதில ஆடவும நெறறியில தூய சிவச சினனமாகிய வெணணீறாகிய திருநீறு பொலிய விளஙகிய சூரபனமனைப பாாதது வீரவாகுத தேவா எணணுவாா உடமபும உறுபபுகளும இளைககுமாறு தவததைச செயபவாகளுள சூரபனமனைப போல வைராககியததுடன தவம செயது உயிரை விட்டு இறநதவா எவரும இலலை மூனறு கணகளையுடைய எம சிவபெருமானும இவனுககு வரம அளிததது போல வேறு எவாககும வரம அளிததது இலலை பெருமையுடைய வேளவிகளைச செயது தீயிலேயே விழுநதும பினபு எழுநது உயாவு பொருநதிய இததகைய வரஙகளைப் பெறறிருநதும, இந்த சூரபனமன நீணட காலம வாழநதிருககும தனமையை நினைககவிலலையே' இவன உயிருககு இவனே எமனாக விதி இவனை இயககுகிறது போலும' எனறு பலவாறு எணணிய வீரவாகுததேவா சூரபனமனை நேருககு நோ காண எணணி மலையினினறு இறஙகுகினற சூரியனைப போலக குளிகைக கோபுரததினினறு இறஙகிக குமரக கடவுளான முருகப பெருமானின திருப பொறபாதஙகளை உளளததில தியானிததுக கொணடு அசுர மனனன சூரபனமன வீறறிருககினற அழகுடைய அததாணி மணடபததிறகுச சென்றாா அளவிலலாத மிகுநத செலவஙகள விளஙகும கொலுமணடபததில அமாநதிருநத வீரககழலை அணிநத சூரபனமன வீறறிருககும இடததின அருகில சென்று, பகையினால வெலவதறகு அரிய வீரவாகுத தேவா அநத அவையில உளளவா எலலாரும காணுமபடி தன பழைய வடிவததை வெளிபபடுததிக காட்டினாா "மேருவை

வில்லாகக் கொண்ட ஒப்பில்லாத பரம் பொருளான சிவபெருமான் பெற்ற மகனான வெற்றியுடைய வேலையுடைய ஆறுமுகப பெருமானின் தூதன் நான்'' என்று வீரவாகுதேவர் சொல்லி இன்று இப்போது இந்த அசுரரின் மன்னனான சூரபன்மனின் இருக்கையின் கீழ் எளியவனாக நிற்பது எம் முருகப் பெருமானின் பெருமைக்கு இழுக்காகும்! என்று எண்ணினார். மாயை என்பவள் பெற்றெடுத்த சூரபன்மன் பொருந்தி இருக்கின்ற மிக உயரமான அரியணையின் கீழ் ஒரு பக்கத்தில், விரைவாகச் சென்று இருப்பது சிறப்பான செயல் ஆகாது அவ்வாறு செய்வது பணி மக்களின் செயல். அதுவே அல்லாமலும் பாவமும் ஆகும்' என்று வீரவாகு தேவர் தம் உள்ளத்துக்குள் எண்ணினார் இவ்வாறு எண்ணி ஆறுமுகப் பெருமானின் இரு பொற்பாதங்களை எண்ணித் தியானித்த சமயத்தில், அப்போது, அந்த இறைவனின் திருவருளால், இரவிலே ஆயிரம் கோடி கதிரவர்கள் ஒன்று சேர்ந்தாற்போல் பொன்மணி என்பவை கொண்டு இழைக்கப்பட்டுள்ள ஆசனம் ஒன்று மிக விரைவாக வந்தது அப்போது அங்கே: முத்தால் ஆகிய பந்தலும், முத்துச் சிவிகையும், முத்தமிழில் வல்ல ஞானசம்பந்தருக்குச் சிவபெருமான் அளித்ததைப் போல், முருகப்பெருமான் வீரவாகு தேவர்க்கு அளிக்க அவ்விடத்திற்கு வந்தது ஓர் சிங்காதனம். பன்னிரண்டு கோடி கதிரவர்கள் எல்லாம் சூழ்ந்து வரப் பொன்னால் ஆன மேருமலை அலைகளைக் கொண்ட கடலை அடைந்ததைப் போல, ஒளி பொருந்திய பொன்னும் மணியும் இட்டுச் செய்யப்பட்டுள்ள அரியணை சூரபன்மனின் அவைக்கு நடுவே வந்தது.

அத்தகைய சிறந்த ஆசனமானது அந்தச் சூரபன்மனின் எதிரில் இருக்கவும், அதைப் பார்த்து வீரவாகுத் தேவர், 'இதனை, என் தலைவரான முருகப்பெருமான் அனுப்பினார் போலும்!'' என எண்ணி மகிழ்வுடன் அப்பெருமானின் திருவடிகளைத் துதித்து அவர் இட்ட கட்டளையை எண்ணி அதன் மீது அமர்ந்தருளினார். இவ்வாறாக வீரவாகுத் தேவர் சிறந்த பொன்னும் மணியும் பதித்துச் செய்த இருக்கையின் மீது, உள்ளத்தில் மகிழ்ச்சியும் வீரமும் மேம்பட அமர்ந்து இருந்ததை அந்த அவையில் இருந்த அனைவரும் கண்டனர். ''முன் ஒரு காலத்தில் இந்திரன் முதலானவர் எல்லாம் மயங்குமாறு சிறப்புப் பொருந்திய வித்தியாதர உருவத்துடன் வந்து, குற்றமில்லாத ஒரு துரும்பை எடுத்து நட்டுத் தனது அதிகார முறைமையைக் காட்டிய சிவபெருமானே இவன்'' என்று சிலர் கூறினார்.

அந்த அவையில் இருந்தவர் இவ்வாறான அளவில்லாத சொற்களைச் சொல்லவும், அங்குள்ள ஒப்பில்லாத அரியணையில் சூரபன்மன் எவ்வளவு உயர்வாக உள்ளானோ அவ்வளவு உயர்வுடன் காணப்பட்டுச், செம்மையான கையில் வேல் ஏந்திய முருகப் பெருமானைப் புகழ்ந்து கொண்டு, வீரவாகுதேவர் இருந்தார். வீரவாகு தேவர் தம் அரியணையில் வீற்றிருக்கவும், அதனை அசுரர் தலைவனான சூரபன்மன் கண்டான்; பல் வரிசைகளைக் கடித்துக் கறுவிச் சினந்து உடலில் வியர்வைத் தோன்றக், கண்களில் தீப்பொறி பறக்க, மூச்சில் புகை தோன்றப் பின்வரும் இவற்றைச் சொல்லலானான். "என்னை மதிக்காமல் என் எதிரிலே வந்திருந்தாய்! இதனால் உறையில் உள்ள வாளை எடுத்து விரைவாக வெட்டித் தலையைத் துண்டாக்கி விழச் செய்வேன். ஆயினும் உன் செயல்கள் முழுவதையும் கேட்டறிந்த பின்பு அச்செயலைச் செய்யலாம் என்று உள்ளம் பொறுத்துக் கொண்டேன்! தீய சூரபன்மன் இத்தகைய சொற்களைக் கூறக் கேட்டதும் ஆற்றல் மிக்க வீரவாகு தேவர் வானத்தில் காணப்படுகின்ற விண்மீன்களைப் போல உடல் மீது வியர்வைத் துளிகள் உண்டாகச் சினம்கொண்டு "மாயைகளைச் செய்து திரிகின்ற சாமானியர்களைப் போல நீ என்னையும் எண்ணிவிட்டாய. அத்தகைய நின் எண்ணத்தை கைவிடு! நான் சொல்லும் இதனைக் கேட்பாயாக" என்று சொல்லலானார்.

"ஆறுமுகப் பெருமானது படைத்தலைவராய் இலட்சத்து ஒன்பது பேர் வந்துள்ளனர். அவ்வாறு வந்துள்ளவர்களுள் நானும் ஒருவன். என் பெயர் பகைவரால் புகழ்ந்து கூறப்படும் வீரவாகு என்பது ஆகும். தாரகாசுரன் என்னும் உனது தம்பியையும் கிரவுஞ்ச மலையையும் ஓர் இமைப் போதுக்குள் கொன்றழித்த வேலையுடைய முருகப் பெருமான், சூரபன்மன் என்ற பெயர் கொண்ட உன்னிடத்தில், தூதனாகத் தன் பெருங் கருணைத் திறத்தால் என்னை அனுப்பியுள்ளார்" என்று உரைத்தார்.

பகைவர்க்குப் புறங்காட்டி ஓடாத இயல்புடைய வீரவாகு தேவர் உரைத்த சொல்லைக் கொடுங்கோல் ஆட்சியை நடத்தும் சூரபன்மன் கேட்டதும் அவன், "உன் தலைவனான முருகன் என்னிடம் உன்னைத் தூதாய் அனுப்பியதற்குக் காரணம் என்ன? சொல்வாயாக!" என்று கேட்க, எம்பெருமானின் தூதனான வீரவாகு பின்வருமாறு சொல்லலானார்.

## 74. தூது வந்த சேதி

"இந்திரனை அவனுடைய மனைவியான இந்திராணியுடன் துரத்திவிட்டு வானத்திலே விளங்கிய சுவர்க்கத்தைத் தீயிட்டுக் கொளுத்தி, அந்த இந்திரனின் மகனான சயந்தனோடு பல தேவர்களைச் சிறையிட்டிருக்கின்றாய் என்று எம் ஆறுமுகக் கடவுள் அறிந்தார். இந்திரன் முதலானவரும் நான்முகன் முதலானவரும் வந்து வேண்டிக் கொள்ளவும், அவர்களது குறையைப் போக்கத் திருவுள்ளம் கொண்டு, பன்னிரண்டு தோள்களையுடைய ஆறுமுகப் பெருமான், பூவுலகத்தில் அளவில்லாத பூதப்படைகளுடன் வந்தருளியுள்ளார். "பூவுலகத்துக்கு வநத உன் தம்பியைக் கிரவுஞ்ச மலையுடனே அழித்து நேற்றே திருச்செந்தூரில் வநது எம் இறைவர் எழுந்தருளியுள்ளார். உன்னையும் விரைந்து கொலல எண்ணியுள்ளார். இன்று உன் மீது கருணை கொண்டு உன்னிடம் சிலவற்றைச் சொல்லிட என்னை அனுப்பியுள்ளார்.

"இவற்றையெலலாம் கிரவுஞ்ச மலையைப் பிளந்தருளிய முருகப் பெருமான் உனக்குச் சொல்லுமாறு எனக்குக் கூறினார். ஆதலால் அங்கு அமரரின் வலிய விலங்குடன் கூடிய சிறையை அகற்றித் தரும் முறையாக இந்தச் செல்வத்தை நன்றாக அனுபவித்துக் கொண்டு நீ வாழ்க!" என்று கூறியருளினார். வீரம் குன்றாத வீரவாகு தேவர் இங்கு இத்தகையவற்றை வகுத்துக் சொல்லும் சொற்களைக் கேட்டதும், சினம் மூளும் உள்ளத்தையும், தீப்பொறிகளைச் சிந்தும் கண்களையும், புகை எழுகின்ற சுவாசத்தையும் ஒன்றுடன் ஒன்று அடிக்கப்படுகின்ற உள்ளங் கைகளையும், அளவு கடநத முறுவலையும் உடையவனாகச், சூரபன்மன் சொல்லலானான். "உயர்ந்த ஆயிரத்து எட்டு அண்டங்களையும் வென்று ஒப்பில்லாத மன்னர் மன்னனாக விளங்கும் எனக்கு, பற்கள் முளைக்கப் பெறாத மழலை பேசும் சிறுவனோ இத்தகைய அறிவுரைகளைச் சொல்பவன்! பலவற்றையும் சொல்வதால் பயன் என்ன? நான் தேவர்களைச் சிறையினின்று விடுவிக்க மாட்டேன். நீ அறிவற்றவன். ஆதலால் ஒன்றும் அறியாத ஒரு குழந்தையின் பேச்சைக் கேட்டுக் கொண்டு தூதனாக வந்தாய். உன் உயிரை உனக்கு நான் தந்தேன். நீ உயிர் உள்ளவனாகப் போவாயாக!" என மொழிந்தான். ஆயிரத்து எட்டு அண்டங்களையும் ஆளும் சூரபன்மன் இவற்றைச் சொல்லவும், வீரவாகு தேவர் சினத் தீ சிந்த, உள்ளம் சுடச் சினம் கொண்டு, தீயும் காற்றும் மூச்சின் வழி வர, மயிர்கள் சிலிர்க்க, சிரிப்புத் தோன்ற, கண்கள் செந்நிறம் அடைய "எல்லாவற்றுக்கும் முதலான பிரணவமும், ஐந்து பொறிகளும், சகல

வேதங்களும, இதுவன்றிச் சொலலப்படுகின்ற கலைகளும், அவறறில சொலலப்படுகின்றவையும் மற்றவையான யாவும குமரக்கடவுளின் திருவுருமமாகும். எங்கும் நின்று திருவருள் செயயும் முருகப் பெருமானுக்கு எங்கும் யாவராலும் வணங்கப்படும் திருமுகங்கள; எலலா இடங்களிலும் திருக்கணகள், எலலா இடங்களிலும திருச்செவிகள், எலலா இடங்களிலும திருக்கைகள, எலலா இடங்களிலும கழலணிநத திருவடிகள், எலலா இடங்களிலும் திருவுருவங்கள். செநதாமரை மலர் போன்ற விழிகளை உடைய திருமால முதலான தேவர்க்கும், இன்பத்தை அளிக்கும் வேதங்களுக்கும், மற்ற எல்லாவறறுக்கும் முதன்மை பெற்று விளங்கும். 'ஓம்' எனக் கூறப்படுகின்ற பிரணவமே, ஒப்பிலலாத முருகப் பெருமானின் அழகிய திருமுகங்களில் ஒன்றாகும். அத்தகைய அப்பெருமானின் இயலபை யாவரே எடுத்துக் கூறவல்லார்? எம் இறைவனின் வேலுக்கு இரையாக இருப்பவனே! நீ இழிவான சொற்களால எம் இறைவனை இகழ்ந்து பேசினாய், விரைவாக உன் நாவை அறுத்து உனது உயிரையும் பறிப்போம். என்னை இங்குத் தூதாக அனுப்பிய முருகனின் ஆணை அதுவன்று, ஆதலால் உன் உயிரை உனக்கு அளித்தேன். இன்று மட்டும் உயிருடன் வாழநது கொண்டிரு! உனக்கு, இன்னும் ஓர் உறுதியைச் சொல்வேன். நீயும் உன் சுற்றத்தவரும் இன்னும் அழியாமல், இருக்க வேண்டுமானால, தேவர்களைச் சிறையினின்று விட்டு விடு! போர் உண்டாவதைத் தவிர்ப்பாயாக! கந்தவேளின் கழல் அணிநத திருவடிகளே அடைக்கலம் என்று எண்ணிக் கொண்டிருப்பாயாக!'' இவ்வாறு வீரவாகு தேவர், நீங்குதல இல்லாத பெரிய மாயையுடைய கிரவுஞ்ச மலையைத் துளைத்த வேலையுடைய முருகப் பெருமானின் குண நலன்களை எடுத்துச் சொலலிடவும், இழிவான தொழிலை உடைய அசுரனான அற்பன் அவற்றையெல்லாம் கேட்டறிந்து சினம் கொண்டு பெருமூச்சு விட்டவனாக இவற்றைக் கூறினான். ''வான் உலகை இடமாகக் கொண்டு வாழ்கின்ற தேவர்களின் சிறைக் காவலை கைவிடக் கனவிலும் எண்ண மாட்டேன். நீ என் எதிரில இருந்து இறுமாப்பான சொற்களைச சொன்னாய். ஓர் இமைப் போதில அனைத்தையும் அழிக்க வலலவன் நான் என்பதை அறிவாய'' என்று கூறிய சூரன் பக்கத்தின் நின்ற அசுரர்களில ஆயிரம் பேரைப் பார்த்து, ''தூதனாக வந்த இவனைக் கொல்லுதல குற்றமாகும். ஆகவே இவனை சிறையில அடையுங்கள்!'' என்று ஆணையிட்டான் சூரபன்மன் இப்படிச் சொன்னதும், அந்த அசுரர் ஆயிரவரும், எதிர்த்துக் கணகள் தீப் பறக்கப

## 9. க்ரெளஞ்சபேத்தா

*சதுார்புஜம் த்ரிநேத்ரம் ச ஸ்திதம் ஸிம்ஹாஸனோபரி*

*வரத அபய ஸம்யுக்த புஷ் பபாண இக்ஷு கார்முகம்*

*மயூர வாகனாருடம் நமஸ்யே ரக்ஷண உன் முகம்*

*க்ரெளஞ்சபேத காத்வந்த்வம் கிரெளஞ்சபேதிச்வரூபகம்*

*நான்கு திருக்கரங்களில் முறையே வரதம், அபயம், மலர்ப் பாணம், கரும்பு வில், மூன்று கண்கள், மயில் வாஹனத்தில் ஸிம்ஹாசனத்தில் வீற்றிருத்தல், ரக்ஷித்தலே நோக்கமாகக் கொண்டதிருமுகம், கிரெளஞ்சத்தைப் பிளந்த இரு கைகள், கிரெளஞ்ச பேதி சொரூபம், ரக்த வர்ணம்.*

பார்த்து. நெருங்கிய தீயைப் புகை சூழ்ந்தது போல், பொன்னால் செய்யப்பட்டு விளங்கும் பீடத்தின் மீது அமர்ந்து இருக்கும் வீரவாகு தேவரைப் பிடிக்கும் பொருட்டுச் சூழ்ந்து கொண்டார்கள். உடனே வீரவாகு தேவர் தாம் இருந்த இருக்கை விட்டு எழுந்து வன்மையுடன் அந்த ஆயிரவர் தலையில் இருந்த முடியைக் கையால் பிடித்து அசுர மன்னனான சூரபன்மன் இருக்கும் பெரிய அவையில தரையிலேயே அடித்து விரைவாக அவர்களின் உயிரை அழித்தார். சிங்கம் போன்ற ஆற்றல கொண்ட வீரவாகு தேவர் இவ்வாறு சொல்லிச் செல்கின்ற சமயத்தில. அவர் அமர்ந்திருந்த அரியணையும் மேலே எழுந்து வானத்தில் சென்று மாயையைப் போல விரைவாக மறைந்தது!

## 75. சதமுகன் வதை

ஒளி பொருந்திய பிறை நிலவைப் போன்ற கோரைப் பற்களையுடைய அசுரர் ஆயிரவரைக் கொன்று வீரவாகு தேவர் சபையை விட்டு செல்வதைக் கண்களில் தீப்பொறி பறக்கச் சூரபன்மன் பார்த்து, தன் அருகிலே நின்று கொண்டிருந்தவர்களைப் பார்த்து, "ஆறுமுகனின் தூதனான வீரவாகு இங்கு ஆயிரம் பேரைக் கொன்று, என் வீரம் முதலானவற்றை முற்றும் இகழந்து வெற்றியுடையார் போல வீர மொழிகளைச் சொலலி, தான் அமர்ந்திருந்த இருக்கையும் வான் வழியாகப் போகத் தானும் செல்கின்றான். வீரவாகு எதிர்த்த நம் வீரர் ஆயிரவரைக் கொன்று விட்டுச் செல்கின்றான். ஆயினும் ஒருவன் அனுப்பிய தூதனைக் கொல்வது பெரும் பழியாகும். ஆகவே அவனது வலிமையை அடக்கிப் பிடித்து விரைவில் இங்குக் கொண்டு வருக!" என்று சொன்னான். சதமுகன், கருக்கொண்ட கரிய மேகத்தைப் போன்ற கருநிறமுடைய சூரபன்மனின் அடிகளை வணங்கித் தக்க ஆணையைப் பெற்று, நான்கு பக்கங்களிலும் சூழ்ந்துள்ள கடல் சூழ்ந்து வந்தாலும் கெடுத்தற்கு முடியாத ஊழிக் காலத்தில் வீசும் பெருங்காற்றை வடவாமுகாக்கினி தொடர்ந்து சென்றாற் போலச் சென்றான். "கள்ள வடிவங்களைக் கொண்டு செல்வதற்கு முடியாமல் எட்டுத் திக்கு எல்லைகளுக்குள் எங்குப் போவதாயினும் நான் உன்னைத் தப்பிச் செல்லும்படி விட்டுவிடுவேனோ!" என்று சொல்லிக்கொண்டு பின்னால் நெருங்கி வரவும், வீரவாகு தேவர் தாம் போதலை நிறுத்தி, அவனுக்கு எதிராகத் திரும்பினார். அப்போது சதமுகனைச் சூழ்ந்து வந்த இலட்சம் வீரரும் எதிர்த்து

நினறு கொடிய அமபுகளை எயதனா வேலகளை வீசினா கல என முழஙகும வணணம சககரஙகளை விடுததனா கை வேலகளைப பாயசசினா மூனறு தலைகளைக கொணட சூலஙகளை விடடனா கோடாரி கொணடு வீசினா அசுரரின பகைவரான வீரவாகு தேவா பிடுஙகி எறிநத சூளிகை மேலே போய வானததே நினறு போா செயயும அசுரா மீது படடு அவாகளின ஏழு தாதுசகளும பொடியாகி உடல எலலாம ஒரே காலததில அழியுமாறு செயது சிறகைப பெறறு பறநது மேலே போய ஊழ முடிவில இறநது கீழே விழும மேருமலையைப போலப பிரவாகமான நீருடன கூடிய மேகஙகளின ஆரவாரததுடனே தரையில விழுநது தூளாகியது கொடிகள செறிநதிருககினற சூளிகையுடனே அசுரா கூடடததினா அணிநதிருநத முடிகளும அழிநதன நாசிசளும நீணட தலைகளும ஆகிய யாவும அழிநதன அழிவறற காதுகளும மறைவான உறுபபுகளும அழிநதன நிறற றகுரிய காலகள அழிநதன முழஙகைகளும அழிநதன உடலகள முறறும அழிநதன இலடசம வீரரையும சூளிகையுடனே இமைப பொழுதில அழிதது நிலததில வீரவாகு தேவா நினறாா அபபோது சதமுகன தன விழிகளால பாாதது உளளததில கலககததை அடைநதான தனனுடன துணையாகப படை வீராகளைக காணாதவனாயக கவலை அடைநதான பினபு ஒருவாறு தெளிவை அடைநதான இருமபு உலககை சூலம வேல சககரம தோமரம முதலிய ஆயுதஙகளை வீரவாகு தேவா மீது வீசலானான அவவாறு அசசதமுகன வீரவாகு தேவா எறிநத கோபுரததை அழிதத பினபு மேலும நூறு அமபுகளை அவரது மாாபுககுக குறிகொணடு எயய முறபடடான அதனைக கணட வீரவாகு தேவா அவனது அருகில போய அவனது கையில இருநத விலலைப பிடுஙகி முறிததாா அபபோது அவரைக பிடிததுக கொளவதறகு அதுவே தகக சமயம எனறு எணணித தன கைகளுள நூறு கைகளை நீடடி வீரவாகு தேவரைப பிடிததான அஙஙனம பிடிததபோது அசசதமுகனை வீரவாகு தேவா தம பெருநதோளகளால தாககித தரையில விழுமபடி தளளினாா அசசதமுகன துடிததுக தரையினினறு எழமுயலவும வீரவாகு தேவா ஒரு காலால உதைததாா இடியேறுணட பாமபைப போல அவன துடிததிட தம மறறொரு காலால அவனது வாயகள வழியாக இரததம ஒழுகுமபடி மிதிததாா எடடுத திசைகளிலும நினறு உலகததைத தாஙகிக கொணடிருககினற இயலபையும மதததையும கொணட திககயஙகளை விட வனமையுடைய வீரவாகு தேவா மினனல போல ஒளிவிடுகினற பறகளையுடைய கொடிய அசுரனான அநதச சதமுகனின மாாபு

பிளவுபடும்படி ஒரு காலில் உதைத்து, மற்றொரு காலினால கீழே தள்ளித், தலைகளை எல்லாம் உதைத்து உருட்டினார். வீரவாகு தேவர் அசசதமுகனின் நூறு தலைகளை ஒருநொடிப் பொழுதுக்குள் அழித்துக் கொன்றார். அவ்வாறு செய்த பின்னும் அவர் எல்லையில்லாத சினம் கொண்டு 'ஆறுமுகப் பெருமானின் உறுதி மொழிகளை இகழ்ந்த சூரபன்மனின் அவை மண்டபத்தை அழித்துப் பின்னர் இந்த நகரத்தையும் அழிப்பேன்' என்று எண்ணினார்.

## 76. காவலாளர் வதை

**ஒ**ளிரும் வேலையுடைய முருகப்பெருமானின் அடிகளைத் தியானித்து அப்பெருமானின் அருளுடனே, வீரவாகு தேவர், உலகத்தை அளந்த திருமாலைப் போல் பேருருவத்தை எடுத்து நின்றார். வீரவாகு தேவர் அந்த அசுரக் காவலர்களை மிதித்தார்; கோபம் கொண்டு தகர்த்தார், துவைத்தார், உருட்டினார்; புரட்டினார்; சிதைத்தார்; இவ்வாறு வேறு வேறாக அசுரப் படைகள் யாவும் சின்னா பின்னமாகி விழுந்து கெடுமாறு உமையம்மையாரின் திருவடிச் சிலம்பினின்றும் தோன்றிய வீரவாகு தேவர் - மிக விரைவாக - முன்பாகவே கொன்றருளினார்

## 77. வச்சிரவாகு வதை

**வீ**ரவாகுவை அடைந்து அரிய போர் செய்தவர் எல்லாம் தம் வலிமை அழிந்து உயிர் ஒழிந்து இறக்கவும், அதனை, வான் வழியே செல்கின்ற தூதுவர் உணர்ந்து தம்மை ஆள்கின்ற அசுரர் தலைவனான சூரபன்மனிடம் ஓடிப்போய் ''அரசே! நின் படை வீரர்களாகிய காயி சதத்திர வாகுகள் சென்று இங்கு வந்த அத்தூதனுடன் சற்று நேரம் போர் செய்தனர். உடனே அத்தூதன் அவர்கள் போர் செய்தலைப் பார்த்து ஒரு மரத்தைப் பிடுங்கி அடித்தான். அடித்ததும், ஆயிரம் நம் வீரர்களும் இறந்து விழுந்தனர். இது நிழந்ததாகும்!'' என்று உரைத்தனர். தூதுவர் கூறியது கேட்டதும் மூன்று உலகத்தவராலும் புகழப்படும் அசுரர் தலைவனான சூரபன்மனின் சினத்தைப் பார்த்து வெற்றி யுடையவனும் வலியவனும் அழகிய வச்சிர உடலும் பத்து தலைகளும் ஆகிய 'வச்சிரவாகு' என்ற மகன் தான் அமர்ந்திருந்த இடத்தினின்று எழுந்து

போய்ச் சூரபன்மனின் அடிகளை வணங்கிச் சொல்லலானான். "தந்தையே அற்பமான ஒரு தூதுவன் பொருட்டாகத் தாங்கள் இங்ஙனம் கூறக் கேட்பது பொருந்தக் கூடியது தானோ? சிறுபொழுது இங்கேயே இருங்கள். நான் சென்று போரில் அவனது பெருவன்மையை அழித்து அவனைச் சிறைப்படுத்தி இங்குக் கொண்டு வருவேன்! அதனைக் காண்பீராக!" என்று வச்சிரவாகு சொன்னான். "முருகனால் விடப்பட்ட தூதனைப் போரில வென்று ஒரு தாம்புக் கயிற்றில் கட்டி இமைப் பொழுதுக்குள் கொணர்வேன். அனைவரும் போர்க்கோலம் பூணுங்கள்!" என்றான் வச்சிரவாகு. பாலனான வச்சிரவாகு இவ்வாறு சொல்லவும், அவனுடன் உள்ள ஊழியரும் வீரர்களுமாகிய இளையரும் முன் குறித்த போரை உத்தேசித்து விரைவாகப் போர்க் கோலம் கொண்டு வச்சிரவாகுவைச் சூழ்ந்து கொண்டனர். மிக்க ஆற்றல் உடைய வச்சிரவாகு கொடிய தன் படையான வெள்ளத்துடன் போய், சிவந்த வேலையுடைய வீரரான முருகப் பெருமானின் ஏவலை மேற்கொண்டு மகேந்திரத்துக்கு வந்துள்ள வீரவாகு தேவர் நின்ற போர்க்களத்தை அடைந்தான், வீரப் போர் புரியத் தொடங்கினான். வீரவாகு தேவர் எட்டுத் திக்குகளையும் சுமந்து கொண்டு அசையமாட்டாமல் வருந்தி நிற்கின்ற கொடிய திக்கு யானைகளுக்கு உணவாகச் சிலரை எடுத்து வீசினார். மற்றும் சிலரைத் தெளிந்த அலைகளையுடைய கடல் நீரைக் குடித்த வறுமையானது நீங்க வடவைத் தீ இருக்கும் இடத்துக்கு எடுத்து வீசினார். சிறந்தவரான வீரவாகு தேவர் இவ்வாறு பல வகையால் அழிக்கவும இமைப் பொழுதுக்குள் சேனைகளும் துணைவரும் இறந்தனர். இறவாமல் எஞ்சி உயிருடன் இருந்தவர்கள் தளர்ச்சி அடைந்து வானத்திலும், கடலிலும், எட்டுத் திசைகளிலும், நடுங்கி, மானத்தையும், வன்மையையும் இகழ்ந்து தளர்ந்து ஓடிவிட்டனர். தம் படைகளின் அழிவான இந்த நிலையைக் கண்டதும் வச்சிரவாகு "நம் பெரும் படைகள் எல்லாம் அழிந்து விட்டனவோ!" என்று இரங்கி மிகவும் சினம் கொண்டு தன் தேரில் இருந்த தேரோட்டியைப் பார்த்து "இந்தத் தேரை நீ அந்த தூதன் முன்னே விரைவாக ஓட்டிச் செல்" என்றான். நிலத்தினை அடைந்த சூரபன்மனின் மகனான வச்சிரவாகு எழுந்து தன் நீண்ட வில்லை வளைத்துப் போர் செய்ய நினைக்கவும், ஆற்றலில் தலைமையுடைய வீரவாகு தேவர் பார்த்து, தம் கையை நீட்டி அந்த வச்சிரவாகு எடுத்த வில்லை வலியப் பிடித்துப் பேரொலி உண்டாகுமாறு ஒடித்தார். தான் கையில் எடுத்த வில்லை தேவர் முறித்திடவும், தீப்போல் ஒளிர்கின்ற கண்களையுடைய வச்சிரவாகு ஒரு

கையில் வாளை எடுத்து எதிர்த்தான். வீரவாகு தேவரும் தம் இடையில் இருந்த வாளை எடுத்து அந்த வச்சிரவாகுவின் எதிரே சென்றார். வச்சிரவாகு எதிரே நடந்து வந்து வெட்டிய வெட்டினை விலக்கி, மாவீரர் வீரவாகு தேவர் பலரைக் கொன்ற போர் ஆற்றல் உடைய தன் வாளால் வச்சிரவாகுவின் வாளுடன் கூடிய பெரிய கையை வெட்டி எறிந்தார். தன் செவ்விய கையானது அறுபட்டதும், கொடியவனான வச்சிரவாகு, வீரவாகு தேவரை மடக்கிக் கொண்டு, தன் மற்றொரு கையில இருந்த தண்டினை அவர் மீது எறிந்தான். அதைப் பார்த்து, வீரவாகு தேவர், அந்த தண்டினைத் துண்டாக வெட்டி எறிந்து, அந்த வச்சிரவாகுவின் பத்துத் தலைகளையும் வாளால் வெட்டி எறிந்தார். முருகப் பெருமானின் தூதரான வீரவாகு தேவர் வீசிய வாளால் வச்சிரவாகுவின் பத்துத் தலைகளும் அறுபட்டு வீழ்ந்தன. விழவும், வலிமை பொருந்திய அவ்வச்சிரவாகு என்னும் கொடிய அசுர மன்னன் மடிந்தான். வெற்றியையுடைய அவுணரின் மன்னனான சூரபன்மனின் மகனான வச்சிரவாகு இறந்த போது, அவனைச் சூழ்ந்து பக்கத்தில் இருந்த அவுண வீரர்கள் அழுது புலம்பி நான்கு திக்குகளிலும் சிதறி ஓடினர்.

## 78. யாளிமுகன் வதை

"**ஆ**ற்றல் பொருந்திய தோள்களையுடைய வீரவாகு தேவர் போகும் போது அவரைக் கண்ட அசுரர்கள் இவன் எமன் ஆவான். இவனுக்கு எதிர் வராதீர்! இவன் உங்களைக் கொல்வான்! கொல்வான்!" என்று கூச்சலிட்டுக் கொண்டு ஓடினர். இறவாது அந்த நகரத்தில் இருந்த அவுணர் இவ்வாறு சொல்லிக் கொண்டு செல்ல, அழகு அழிந்து மூதேவி வாசம் கொண்ட பல வீதிகளையெல்லாம் கடந்து பெரிய மகேந்திர நகரத்தை விட்டு வீரவாகு தேவர் நீங்கினார். மகேந்திர நகரத்தைவிட்டு நீங்கிய பின்பு, காளை போன்ற வன்மை கொண்ட வீரவாகு தேவர், வானத்தில் எழுந்து, முருகப் பெருமானை வணங்கி வடக்குத் திக்கில் உள்ள இலங்கை நகரத்தை அடைந்தார். "என காவலையுடைய இந்த நகரத்தைக் கடந்து இங்கு என் மகனைக் கொன்று எம் மன்னவனின் ஊருக்குச் சென்று திரும்பி வருகின்ற இக்கள்வனை, அவன் இதுவரை அடைந்துள்ள வெற்றியுடன் அழிய என் வன்மையால் கொல்வேன்" என்று சொல்லி யாளிமுகன், மலை போல எழுந்து ஒரு வெற்றியுடைய வாளை எடுத்துக்கொண்டு, அங்கு நின்று கொண்டிருந்த சில படை வீரர்களுடன் வீரவாகு தேவரின் எதிரே போய்

நின்று போராடலானான். சூழ்ந்து கொண்ட படையினர் வீரவாகு தேவர் மீது தம் கைகளில் கொண்டிருந்த பல வகைப்பட்ட கருவிகளை விட்டுச் சினத்துடன் போர் செய்தனர். வீரவாகு தேவர் சினத்துடன் சூறைக் காற்றைப் போல அவர்கள் கூட்டத்துள் வாளுடன் புகுந்தார். மூக்கும், மார்பும், தோளும், காலும், ஒள்ளிய கழுத்தும், தலையும், கையுமான இவை வேறுபட்டு வேறுபட்டு அழியக் கொடிய அசுரரான படைகளை வீரவாகு தேவர் கொன்றார். யாளி முகத்தையுடைய அத் தலைவன் மிகவும் சினம் பொருந்திய உள்ளத்துடன், வீரவாகு தேவரின் பக்கத்தில் சென்று, ஆயிரம் எண் கொண்ட உலகம் அழியும் ஊழிக் காலத்தில் உண்டாகும் இடி ஒலிபோல ஒலியுண்டாக அடித்தான். தம்மை அடித்த யாளி முகனின் ஆயிரம் கைகளையும் வீரவாகு தேவர் ஒரு கையால பிடித்து, வாளால் அக்கைகள் துடித்திட துண்டாக வெட்டினார். இப்படிப் போர் நடக்கும் போது எமனை வலியப் போய் வா என்று அழைப்பதைப் போல் வீரவாகு தேவரைப் பிடிக்கும் பொருட்டாகத் தன்னுடைய துதிக்கைகளையெல்லாம் அந்த யாளிமுகன் நீட்டினான். அந்த யாளிமுகன் தன் துளை பொருந்திய நீண்ட துதிக்கையை நீளமாக நீட்டிய சமயததில், வீரவாகு தேவர் தம் ஒப்பற்ற வாளால் வன்மையிழந்த அவனது ஆயிரம் தலைகளையும் கொத்தாக அறுபட்டு விழுமாறு வெட்டினார்.

## 79. வீரவாகு மீட்சி

**ஒ**ளிர்கின்ற செம்மையான கதிர்களையுடைய மேனியரான வீரவாகு தேவர், யாளி முகன் என்ற அசுரனைக் கொன்றழித்தார். இந்திரச் செல்வத்தைப் பொருந்திய இலங்கையை நீங்கி அழகிய அலைகளையுடைய கடல்களைத் தாண்டி கந்த மாதனம் என்ற மலையை அடுத்துள்ள செந்தில பதியை வீரவாகுத் தேவர் அடைத்தார். வீரவாகு தேவர் வருவதைக் கண்டு அங்குக் கூடியிருக்கும் பூதகணப் படையினர் முழுமதியைக் கண்ட, கரிய கடல் பொங்குவது போல ஆரவாரம் செய்தனர். அளவில்லாத பூத கணத் தலைவரும் தம்முடையவரான தம்பியரும் சூழ்ந்து வர முருகப் பெருமானின் அரசு வீற்றிருக்கின்ற கோயிலை அடைந்தார். திருமாலும், தேவர்களும், நான்முகனும், துறவியரும், மேகத்தை ஊர்ந்து செலலும் இநதிரனும் ஆகியவர் கூடிப் பக்கத்தில் இருக்க, தேவர்களின் தலைவனான முருகப் பெருமான் வீற்றிருக்கும் கோலத்தைப் பார்த்து உள்ளமானது எலும்புடனே

நெக்குருகவும், தூய்மையான நீர் கண்களின்று பெருகவும், விதிர்ப்பு உடலில் ஏற்படவும், விரைவாக உடல் மயிர்கள் புளகங் கொள்ளவும் சூரபன்மனை அழிக்க இருக்கும் முருகப் பெருமானின் சேவடிகளை வீரவாகு தேவர் வணங்கினார்.

தெய்வத் தன்மை பொருந்திய அழகிய குளிர்ந்த சேவடிகளை மூன்று முறை வணங்கி மகிழ்ச்சியும் பக்தியும் மிகத் துதித்து, வீரவாகு தேவர் முருகப் பெருமானின் திருமுன்பு நிற்க, முருகப் பெருமான் வீரவாகு தேவரை நோக்கி, ''வீரவாகுவே! நீ தேவர்களை வருத்தும் சூரபன்மன் முன் சென்று விரைவாக நாம் சொல்லியனுப்பிய தூதுச் சொல்லைச் சொல்ல, அவன் அதற்கு விடையாகச் சொன்னதையும் விரைந்து நீ திரும்பி வந்தவற்றையும் முறைப்படி வரிசையாக இப்போது எடுத்துக் கூறுவாயாக'' என்று மொழிந்தருளினார். ''அழிவில்லாத தேவர் கூட்டத்தைக் கொடிய சிறையினின்று விடுவிக்க மாட்டேன் என்று அந்த சூரபன்மன் சினத்துடன் மொழிந்தான்! அடிகளே! அவன் விடை அதுவானதால் யான் அங்கிருந்து நீங்கி விரைவாக இங்கு வந்தேன்! நிகழந்த செயல் இதுவாகும்!'' என்று உரைத்தார். அங்கு, அப்போது, ஆயிரம் பெயர்களைக் கொண்ட சிவந்த கண்களையுடைய திருமால், நான்முகன், மேகத்தை வாகனமாகக் கொண்ட இந்திரன் ஆகியவர்களைப் பார்த்து முருகப் பெருமான் ''தேவரை அடைத்து வைத்துள்ள சிறையின்று விடுவித்து நீ நன்மை அடைந்து நீண்ட காலம் வாழ்க என்று நாம் சூரனுக்குத் தூதரை அனுப்பிச் சொல்லுமாறு செய்தோம் பாவியான அச்சூரபன்மன் தனக்கு அதுவே நன்மை அளிக்கக்கூடியது என்று ஏற்றுக் கொள்ளவில்லை! அழிவதே அவன் விதியாதலால, குற்றமில்லாத தேவரைச் சிறையினின்று விடுவிக்க மாட்டேன் என்று சொல்லி விட்டான். அவனது மேன்மையைப் போக்க நாளை நாம் அவனுடன் போர் செய்வதற்குப் புறப்படுவோம்!'' என்று அப்பெருமான் மொழிந்தருளினார். ஆறுமுகங்களையுடைய இறைவன் இவ்வாறு சொல்ல, அதனைக் கேடட மற்றத் தேவர், ''கொடிய சூரபன்மன் மீது போர் தொடுத்துச் செல்வோம்'' என்று முருகப் பெருமான் கூறிய சொல் நம் துன்பத்தைப் போக்கியது!'' என்று கூறினார்; மகிழ்ச்சி அடைந்தனர். அப்போது வீரவாகு தேவர் அந்த மகேந்திர நகரத்தில் இந்திரனின் மகனான சயந்தன் சிறையில் இருக்கும் இயல்பையும் மற்றச் செய்கையையும் எடுத்துச் சொல்லித் தேவர்க்கு மன்னரான இந்திரனின் உள்ளத்தைத் தெளிவடையச் செய்தார்.

## 80. சூரன் கவலை

யூகமாக அணிவகுத்து நின்ற பெரும்படை அழிந்திட, வச்சிரவாகு என்ற சூரபன்மனின் மகன் இறந்ததும், வெற்றிமாலை சூடிய தோள்களையுடைய தூதரான வீரவாகு மகேந்திரத்தினின்று திரும்பியதும் ஆகிய இவற்றை யெல்லாம் சூரபன்மனின் ஏவலை மேற்காண்டிருக்கும் அவனுடைய தூதர் வருத்தத்துடன் போய் அவனிடம் கூறினர். பத்துத் தலைகளையுடைய தன் இளைய மகன் வச்சிரவாகு வீரம் அழிந்து இறந்த போன விதத்தைச் சூரபன்மன் கேட்டதும், நடுங்கித் துன்பக் கடலுக்குள் வீழ்ந்தான். குற்றம் அற்ற கற்புடைய சூரபன்மனின் மனைவியான பதுமகோமளை என்பவள் தான் பெற்ற இளைய மகன் போரில் இறந்து விட்டதனை அறிந்து, மலர்களைச் சூடிய கூந்தல அவிழ்ந்து குலைய, மார்பின் மீது அடித்துக் கொண்டு அழுதாள். அச்சமயத்தில், அறத்தை வெறுத்து ஒதுக்கும் தீய நெறியில செல்லும் தருமகோபன் என்ற தீய அமைச்சன், சூரபன்மன் முன்பு வந்து கைகூப்பி வணங்கி, "அரசே! நீ ஆயிரத்தெட்டு அண்டங்களையும் ஆளும் மேன்மையை உடையை! நிகரில்லாத செல்வத்தைப் பெற்றுள்ளாய்! அழிவில்லாத ஆயுளை அடைந்துள்ளாய்! சொல்ல முடியாத வலலமை கொண்டுள்ளாய்! சிறந்த புகழை உடையாய்! இத்தகைய இயல்புடைய நீ வருந்துதல் உனக்குச் சிறந்த இயல்பாகுமா? இங்கு வந்து அழிவு செயதவை பூதக் கணங் படைகள் அல்ல. சிவபெருமான் பெற்ற முருகப் பெருமானும் அலலன். அந்த முருகப் பெருமான் சொல்லி அனுப்பிய ஒரு தூதுவன் செய்த எளிய செயலுக்காகப் பெருமைக்கு எல்லை இல்லாதவனே, பொறுத்துக் கொள்ள முடியாமல வருந்தலாமோ?" என்று ஆறுதல் சொன்னான். மேன்மையாக விளங்கும் அறத்னதக் கோபிப்பவன் என்று பொருள்படும் பெயர் கொண்டவன் (தரும கோபன்) தேறுதல் செய்யவும் அசுரர் தலைவன் சூரபன்மன் தெளிவு பெற்று எழுந்து ஆற்றுவதற்கு அரிய துன்பத்தை அடக்கிக் கொண்டு, தன் பணியாளரை நோக்கி "என் மகனின் உயிரைக் கவர்ந்து சிறந்த இந்த நகர் அழிவை செய்து விட்டு வலிய தூதுவன் அகன்று போனதை நீங்கள் பார்த்தீர்களோ? அல்லது மற்றவர் கூறியதைக் கேட்டீரோ! உண்மையைச் சொல்லுங்கள்!" என்று வினவினான். "வண்மையுடன் இங்கு தூதாக வந்தவன் இந் நகரினை விட்டு அகன்று இலங்கையை நோக்கி அப்பக்கமாகப் போனான். அதனை நாங்கள் பார்த்தோம். இது உண்மையாகும்" என்று உரைத்தனர். தூதர் உரைத்த அந்தச் சொற்களைச் கேட்டதும் அவுணரின் அரசரான சூரபன்மன் தன் பக்கத்தில் நின்ற

பணியாளரைப் பார்த்து "நீங்கள் விரைவாகச் சென்று உலகைப் படைத்துச் செந்நிற தாமரை மலர்மீது இருக்கும் நான்முகனை விரைவாக இங்கு அழைத்துக் கொண்டு வாருங்கள்" என்று ஆணையிட்டான். அதைக் கேட்ட அவர்கள் சொல்லலானார்கள். "எம் அரசே! இப்போது நாங்கள் சொல்லும் இதனைக் கேள்! இப்பழைய உலகங்களை எலலாம் படைக்கும் தேன் மணம் கமழும் தாமரை மலரில் வீற்றிருக்கும் நான்முகன் தேவர்க்கரசரான இந்திரன் முதலானவரோடு கூடி, பூதப் படையுடன் இம்மண்ணுலகில வந்துள்ள ஆறுமுகப் பெருமானிடம் சென்றுள்ளான்" என்று கூறினர். ஏவல் மக்கள் மேற்கண்டவாறு சொலலவும், அதைச் சூரபன்மன் கேட்டு, "நன்றாக உள்ளது, நன்றாக உள்ளது!" என்று வெப்பமாகப் பெருமூசசு விட்டுச் சினந்து தீயுண்டாக நகைத்து, நான்முகனை இங்கு விரைவாகப் பிடித்து வாருங்கள்!" என்று மொழிந்தான். தம் மன்னனான சூரபன்மன இத்தகைய சொற்களைச் சொலலவும், அவனுடைய ஏவலர் கேட்டு, "இதைச் செயவோம்!" என்று ஒன்றுபட்டு விரைந்து சென்று பிற அணடத்தில போய்த் 'தேவருள் மூத்தவனான நான்முகனை தம் மன்னன் சூரபன்மன் பிடித்துக் கொண்டு வருமாறு கூறினான்' என்று சொலலி அழைத்துப் பிடித்துக் கொண்டு வநதனர். ஏவலர், பரிவாரங்கள் பலரும நெருங்கி உலகம் புகழகின்ற சூரபன்மன் என்னும் மன்னன் முன்னம், வேறொர் அண்டத்து நான்முகனைப் பிடித்துக் கொண்டு வந்துவிட்டனர். சூரபன்மன் அநத நான்முகனைப் பார்த்து "மாண்பு இழந்த மகேந்திர நகரத்தினை முன இருநததைப் போலப் படைப்பாயாக!" என்று ஆணையிட்டான் சூரபன்மன் இவ்வாறு சொலல, அவனது ஆணையைத் தலை மேற்கொண்டு, "ஐயனே! ஓர் இமைப் பொழுதுக்குள் முன்பு உன் பழைய இநத நகரத்தை, முன்பிருந்த அழகைப்போல நான் படைக்கிறேன" எனறு அந்த நான்முகன் சொலலித்தான் பெரிய உலகத்தைப் படைக்கின்ற தன்மையை நினைத்துக் கொண்டு அவ்வண்ணம் செய்வானானான். பொன்னால் ஆன மதில், மாளிகைகள், வீதிகள், பொன்னும் மணியும் பொருநதிய சிகரங்கள், மரங்கள், மன்மதனும் விரும்பும் சோலைகள், மண்டபங்கள், வாவிகள், பொய்கைகள், மேகம் தங்கும் உயர்ந்த அரங்கங்கள், மன்றங்கள், திண்ணைகள் முதலியவற்றை யெல்லாம முன்பு போல விளங்கத் தன் கைத் தொழில் வன்மையால் அந்த நான்முகன் படைத்தான். இவ்வாறு மகேந்திர நகர் முழுவதையும் அழகு விளங்கப் படைத்த பின்பு கரியமலை போன்ற மேனி கொண்ட சூரபன்மனின் மிகப் பெரிய அரண்மனையை

நன்றாக முன்பிருந்ததைப் போலச் சிறப்புடன் திருத்தி நான்முகன் படைத்தான். அச்சம் பொருந்திய நகரத்தையும் அழகிய குளிர்ந்த அரண்மனையையும் படைத்ததும், மன்னனான சூரபன்மன், அந்த நான்முகனின் செயலைப் பார்த்து, அன்பு காட்டி மகிழ்ந்து, அசுரர்கள் எல்லாம் பாராட்ட முன்போலச் சிங்கங்களால சுமக்கப்படுகின்ற மணிபதித்த இருக்கை மீது அமர்ந்தான். சூரபன்மன் தன் அரியணையில் அமர்ந்து, பின் அன்னப் பறவையை வாகனமாகக் கொண்ட நான்முகனைப் பார்த்து, ''நீ உன் அண்டத்துக்குச் சென்று படைத்தல் தொழிலைச் செய்து கொண்டிருப்பாயாக!'' என்று சொலலி ஏவவும், அந்த நான்முகன் விடைபெற்றுத் தன் உலகத்தை அடைந்தான்.

## 81. சூரன் ஆலோசனை

சூரபன்மனின் பணியை மேற்கொண்டு முன்னர்ச் சென்ற ஒற்றர், வன்மையுடைய கடலைத் தாண்டிச் சென்று, திருச்செந்தூரில் போய், அங்கிருந்த ஆறுமுகப் பெருமானின் படைகளையும் பிறவற்றையும் ஆராய்ந்து அறிந்து கொண்டு மகேந்திர நகரத்துக்குத் திரும்பித் தம் மன்னனை வணங்கி முருகப் பெருமானிடம் உள்ள கொடிய பூதப் படை இரண்டாயிரம் வெள்ளம், சொல்வதற்கரிய சிறப்புடைய படையின் தலைவர்கள் நூற்று எட்டு பேரும் உயர்ந்து விளங்கும் ஓர் இலட்சத்து ஒன்பது வீரருமாவர். இத்தகைய படையினரோடு பிறவி என்பது இல்லாத சிவபெருமானின் மைந்தரான முருகப் பெருமான் இந்த உலகத்தில் வந்துள்ளான். ''அவுணர்க்கு அரசே! இது உண்மை! நின் தம்பியான தாரகா சுரனையும் எல்லையில்லாத மாயையைத் தன்னிடம் காப்பாற்றி வைத்துக் கொண்டிருந்த அழகான கிரவுஞ்ச மலையையும், இரண்டு பிளவாக வேலால் அம் முருகன் பிளந்து எறிந்தான். அவ்வாறு அவர்க்கு அழிவைச் செய்து அலைகள் உலவும் கடற்கரையிலே அமைந்துள்ள திருச்செந்தூர் என்ற மாநகரத்தில் அவன் வந்துள்ளான். தன்னிடத்தினின்று விலகி அசைகின்ற கதிரையுடைய அம்முருகன் விரைவாக இங்கு வருவதன் பொருட்டாகக் கல் போன்ற தோள்களையுடைய தூதன் ஒருவனை இங்கு அனுப்பினான். அத்தூதன் தன் வழியில் இருந்த இலங்கையை அழித்து இங்கு வந்தான். திரும்பும் போது யாளிமுகனை வலக்கையில் உள்ள வாளால் வெட்டிக் கடலைத் தாண்டி சென்றான். ''சிவந்த கதிர்களையுடைய கூரிய வேல்

படை ஏந்திய அப்பெருமான் தெளிவான அலையையுடைய கடலைத் தாண்டிப் பெருகும் கொடிய பூதகணங்களுடன் போர் வீரர்களோடும் இந்த மகேந்திரத்துக்கு வந்து போரிட எண்ணி இருக்கின்றான். இதை ஐயத்துடன் கூடிய சொல் என எண்ண வேண்டா. நாங்கள் உரைத்தது உண்மையே ஆகும் ஆதலால் இதற்குரிய ஏற்பாடுகளை எண்ணிச் செய்வாயாக'' என்று உரைத்தனர். தம் ஒற்றர் கூறிய சொலலைக் கேட்டுச் சூரபன்மன், தன் ஒப்பில்லாத தம்பியான சிங்கமுகாசுரனையும், குறைவற்ற கேள்வியுடைய தருமகோபன் முதலான அமைச்சர்களையும், பானுகோபன் முதலிய மைந்தரையும் தம்மை அடுத்து உறவினருடன் வாழ்கின்ற புலிமுகன் முதலிய படைத் தலைமையுடையவரையும் இமைப் போதிற்குள் அழைத்து வருமாறு செய்தான். ''படை வகுப்புகளில் படைகளாக நிறுத்தப்படுகின்ற பூதர்களைக் கொன்று பகைத்த வீரர்களையும் அழித்து அச்சிறுவனை வென்று மற்றுமுள்ளவர்களையும் கொன்று ஓர் இமைப் போதில் திரும்பி வரத்தக்க ஆற்றல் கொண்டவன் யானே ஆவேன்'' என்று சூரன் கூறவும், ''அனுபவிக்கின்ற செல்வத்தாலும், வன்மையாலும் சூழ்ச்சியாலும் எவ்வளவு பெரியவரானாலும், பின்னால் சினத்துடன் ஒரு செயலைச் செய்ய எண்ணினால் நம்முடைய மெய்யான துணைவரை முதலில் வினவி அவர் கருத்தை அறிந்து அதன்படி செய்வார். எனவே ஒப்பில்லாத நின் படைத் தலைவருள் ஒருவனை அழைத்துப் படையுடன் இலைவடிவான கூரிய வேலையுடைய முருகன் மீது போர் செய்ய அனுப்புவாயானால், அவன் அச்சிறுவனை வருந்தி விரைந்து வெற்றி பெற்றுத் திரும்பி வருவான். ''நான் கூறிய அதனைச் செய்வாயாக!'' என்று அறத்தைக் கோபிப்பவனான தருமகோபன் சொல்லி முடிக்கும் போது புன்முறுவல் தோன்றக் கல்லைப் போன்ற தோள்களையுடைய 'காலசித்து' என்னும் அச்சத்தை தரும் வேலையுடையவனான மற்றொரு அமைச்சன் ''எனக்கு ஆணையிடு! சிவபெருமானின் மகனையும், பூதகணத்தவரையும் என் கையில் உள்ள கால பாசத்தால் இங்கு உன் முன் கொண்டு வருவேன்!'' என்று காலசித்து என்ற அமைச்சன் கூற அப்போது அங்கிருந்த 'சண்டன்' என்ற அமைச்சன் தான் செல்வதாக கூறக்கேட்ட 'அனலி' என்று அவுணர் படைத் தலைவன் சினத்துடன் புன்முறுவலும் சிறிது தோன்ற அடக்கத்துடன், ''ஒரு வீரன் தன் வலிமையைத் தானே எடுத்துக் சொல்வது வழக்கமன்று (ஆதலால் நான் என் வலிமையை எடுத்துப் பேசமாட்டேன்) எனவே என்னைப் 'போருக்குச் செல்' என்று ஆணையிட்டு அனுப்புவாயாக! நான் படையுடன் போய உன்னை

வெறுக்கின்ற பகைவரை வென்று உலகத்தில அவர்களை உயிர் இலலாமல செய்து இங்கு திரும்பி வருவேன்'' எனறான் இத்தகைய சொற்களைத் தீய நெறியையுடைய அமைச்சரும் ஆராயச்சியுடைய பழைய படைத் தலைவரும் கூறினர். கூறவும், விளங்கும் செம்மையான ஒளியையுடைய கதிரவனுக்குப் பகைவனான 'பானுகோபன்' என்ற சூரபன்மனின் மகன் அவர்களைப் 'பேசியது போதும' எனக் கையமர்த்தி, சூரபன்மனான தநதையை நோக்கி ''தநதையே நீ ஆயிரத்தெட்டு அண்டங்களுக்கும் தலைவன். இத்தகைய நீ, சிவபெருமான் பெற்ற மகனான முருகனுடன் போர் செய்ய எண்ணிப் புறப்படுதல என்பது அழகனறு. எம்பிரானே! என்னை அனுப்பி வெற்றி அடைந்து இங்கு வீறுடன் இருப்பாயாக! அங்கு என்னை அனுப்பினால் போரைத் செய்யவரும் பகைவரது தொகையை எல்லாம் அழித்துத் தேவராய் எதிர்த்தவரையும் இமைப் பொழுதில் வென்று பின் திரும்புவேன்'' என்றான். கதிரவனின் பகைவனான பானுகோபன் இத்தகைய சிலசில சொற்களை உரைத்து முடித்தபோது தளர்ச்சி என்பதை அறியாத வன்மை கொண்ட தன் தந்தை சூரபன்மனின் முகத்தைப் பார்த்து, ஒலிக்கின்ற வீரக்கழலை அணிந்த 'இரணியன்' என்ற மைந்தன் சொல்லலானான். ''வெற்றியளிக்கும் போரைச் செய்து பகைவர் கூட்டத்தை அழித்துத் தேவர் எல்லாரையும் கொன்று வருவேன், இன்று இரவே என்னைப் போருக்கு அனுப்புவாயாக!'' என்று கூறவும், அவனுடைய மற்றொரு தம்பியான 'எரிமுகன்' என்பவன் ''வலிமையுடைய ஒப்பற்ற அழிவிலலாத உடல கவசமும் சிறந்த ஆயுதங்களும் முன்நாளில நான்முகன் தர அவற்றைப் பெற்றுள்ளேன். வாட் படையையுடைய அரக்கரைக் கொன்று புகழ் பெற்றுள்ளேன். நான் சளைத்தவன் அலலன். எனவே அம்முருகன் மீது போர் தொடுக்க என்னை அனுப்புவாயாக!'' என்றான். இத்தகைய சொற்களை எரிமுகன் என்பவன் சொல்ல, அவனைப் 'பேசியது போதும்' எனத் தடுத்து விலக்கி, ஆயிரம் தலைகளையுடைய சிங்கமுகாசுரன் என்ற தம்பி மன்னர்க்கு மன்னனான சூரபன்மனைப் பார்த்துப் பேசலானான்.

## 82. சிங்கமுகன் சீலம்

''**எ**ந்தையே! சிறையை விலக்குவாயானால குமரக் கடவுள் இங்கு வந்து போர் செய்ய எண்ண மாட்டான். நாம் செய்த குற்றங்களையும் அப்பெருமான் மனத்தில் கொள்ள மாட்டான். நாளைக்கே இமை மூடும் பொழுதுக்குள்

கயிலாய மலைக்குத் திரும்பிச் சென்று விடுவார். சிறந்தவர்களான தேவர்களின் சிறையை விட்டு விடாது நீ இருப்பாயானால், பகைவரின் நகரங்களையெல்லாம் எரித்த சிவபெருமானின் மைந்தரான ஆறுமுகப் பெருமான், நம் குலம் எல்லாம் அழியுமாறு கொன்று உன்னையும் கொல்வான். இது உண்மையே யாகும்!'' என்று சிங்கமுகன் முழங்கினான். மற்றவர் பேசுவதைத் தடுத்துச் சிங்கமுகன் இவ்வாறு சொல்லவும், கொடிய சூரபன்மன் தன் பெரிய கையுடன் கையை அடித்துப் பெருமூச்சுவிட்டு அதட்டிச் சந்திரனின் ஒளி போன்ற பற்கள் ஒளிவீச மென்மையான உதடுகளைக் கடித்து உடலில் தீப்பொறி பறக்கச் சினந்து முடியையுடைய தலையை அசைத்து இவற்றைச் சொல்லலானான். ''திருமால், நான்முகன் முதலான சான்றோர்களும் எல்லையில்லாத காலமாக நான் தேவர்களைச் சிறையில் அடைத்திருப்பதைப் பார்த்தும், மிகவும் எனக்கு அஞ்சியே இருந்தனர். அங்ஙனம் இருக்க தனித்த ஒரு சிறுவனா என் அழிவற்ற உயிரைப் பறிப்பவன்? மாறுபாடு இல்லாத வச்சிரவுடலும் வன்மையும் இறுதியில்லாததான ஆயுளும் என்ற இவற்றைப் பெற்றுள்ள என்னை எவராலும் ஊறு செய்ய முடியாது. அங்ஙனமாக, இப்போது பகைத்துப் போர் செய்து சிறுவன் ஒருவனோ என்னைக் கொல்ல வல்லான்? மதிக்கத் தகாத ஒரு சிறுவன் என்னைக் கொல்வான் என்று நீ சொல்வது எத்தகையது என்றால், வானில் கதிரவனை ஒரு கனியாகும் என்று கருதி விரும்பிக் கண் இல்லாதவன் காட்டிட, அதைக் கையில்லாதவன் சென்று அடங்காத ஆசையுடன் பறிக்கச் சென்றதைப் போன்றதாகும்'' எனச் சூரபன்மன் சொல்லவும் நெருங்கிய பல தலைகளைக் கொண்ட சிங்க முகத்தையுடைய சிங்கமுகாசூரன் என்ற தம்பி 'நன்று நன்று' என்று விளம்பி, 'அண்ணலே! இன்னமும் நான் ஒன்று கூறுவேன், கேள்' என்று உரைக்கலானான். ''அந்தப் பரம்பொருளான சிவபெருமானை நீ எண்ணியே அளவற்ற ஆண்டுக் காலம் உண்மையான பெரிய தவத்தைச் செய்தாய். நீ செய்த அந்த உண்மையான தவத்தைக் கண்டு உன்முன் வெளிப்பட்டுத் தோன்றி ஒப்பிலலாத வரங்களை உனக்கு அளித்து, பின்பு அவ்வரங்களில் முடிவையும் கூறி வைத்தான். அதனை நீ அறியவில்லை போலும்! பெறுதற்கரிய வரங்களான செல்வங்களை உடைய நீ அறத்தைக் கடைப்பிடித்து நெறிப்படி நடவாது உனக்குள்ள பேராற்றலால் தேவர்களைக் கோபித்துச சிறையில வைத்தாய். யாவர்க்கும் மேலான ஈசன் அத்தகைய உன் செயலைக் கண்டு நின் வலிமையை அழித்து உன்னைக் கொல்லத் திருவுளம் கொண்டுள்ளார்.

''வரத்தைச் சூரபன்மனுக்குக் கொடுத்த நாமே அழிப்பது முறையாகாது வரத்தால் பெருமை பெற்றுள்ள அந்தச் சூரபன்மனை மற்றவர் அழிப்பதும் முடியாது'' என இவ்வாறு எண்ணியே, தம் வடிவமாக உள்ள ஒரு மகனைக் கொண்டு உன்னை அழிப்போம் என்று அப்பெருமான் எண்ணியருளியள்ளார். செந்நிறத் திருமேனியும், அழகிய முகங்கள் ஆறும், அதற்கு இருமடங்கு தொகையான பன்னிரண்டு தோள்களுமாகக் கொண்ட திருமேனியுடன் முன்னவர்க்கெலலாம் முன்னவனான மேலான முழு முதற் பரம்பொருளான சிவபெருமான் தன் நெற்றிக் கண்ணின்று ஒப்பில்லாத ஒரு மைந்தனைக் தந்தருளினார்.''

''சீலமில்லாதவரால் உணரமுடியாத சிற்பரனான அப்பெருமானைச் 'சிறுவன்' என்று சொன்னாய். சிறிய விதையில் ஆலமரம் முழுவதும் அடங்கியிருந்து பின் தோன்றுவது போல அப்பெருமானிடத்திருந்தே முன் நாளில் பல பொருள்களும் வந்து தோன்றின. அப்பெருமான் அருவமாகவும் விளங்குவார். அருவமும் உருவமும் இல்லாத ஓர் தன்மையாகவும் விளங்குவார். ஊழின் காரியமாகவும் விளங்குவார். அதன் காரணமாகவும் விளங்குவார். அப்பெருமானின் திருவிளையாடலை எவரே சொல்ல வல்லார்? கருவாயான புலன்களும் காட்டுபவனும் காண்பவனும் காட்சிப் பொருளும் எனச் சொல்லப்படுகின்ற நால்வகைப் பொருள்களும் ஐம்பொறிகளும் ஐவகையாக விளங்கும் வினைகளும் இடமும் முறைப்படியே முற்றுகின்ற பயனுமாக இறைவர் விளங்குகின்றார்.''

''முடிவில்லாத ஆயிரத்தெட்டு அண்டங்களைப் பெற்று விட்டோம் என்று உன்னை நீயே வியந்து கொண்டாய். நீ தத்துவ பேதங்களை உணரவில்லை. பிருதுவி உலகங்களோ அளவற்றவை. மற்ற அண்டங்களைப் பற்றி நீ கேள்வியுற்றால் மயங்குவாய். ''நீ ஒப்பற்ற வச்சிரவுடலைப் பெற்று விட்டோம்'' என்று எண்ணி விட்டாய். இதனை அறவே விட்டுவிடு. நல்வினை தீவினைகள் என்னும் இவற்றுக்கு ஏற்ப உடல் எடுத்துள்ள உயிர்கள் எல்லாம் இறந்துவிடும் என்று மேலோர் முடிவு கூறியுள்ளார். அங்ஙனம் இருக்க நீ மட்டும் அழியாது இருப்பாயோ? அழிவில்லாத உண்மையான உடலமைப்புடையவனாக இருக்க வரம் பெற்று விட்டோம் என்று கூறினாய். அழிவற்ற உடல் என்பதற்குச் சொல்லப்படும் பொருளைக் கேட்பாயாக. மூன்று உலகங்களிலும் உள்ள உயிர்களைப் போல் சில நாள்களில் அழியாது மிக பெருநாட்கள் வாழும் இயல்பே அது! அறிவாயாக.'' சிங்கம் போன்ற

முகமுடைய தம்பியான சிங்கமுகன் அன்புடன் கூறிய இச்சொற்களைக் கேட்டு, முடியணிந்த தலையை அசைத்து, காதில் சிவந்த கனலைச் செருகியதைப் போன்று சினந்து மூத்தவனான சூரபன்மன், "நீருடன் கூடிய பல பாத்திரங்களுள் கதிரவன் தன் வடிவத்தை வெவ்வேறாகக் காட்டுவதைப் போல, பிரமம் என்று கூறப்படுகின்ற ஒப்பிலலாத பொருளானது உயிர் என்று பெயர் பெற்றுப் பல வடிவங்களைத் தாங்கி மாயையால் கெடாத பல கரும பேதங்களை ஆற்றும். குடமானது உடைநதவுடன் அந்தக் குடத்தில் இருந்த ஒளியானது வானத்துடன் கலநது நிற்கும் தன்மை போல, உடலின் பேதங்கள் எல்லாம் முடிந்த காலத்திலே சொல்லாலும் மனத்தாலும் தொடர முடியாத பெருஞ்சோதியானது அபேதமாகும். வெற்றியும் வல்லமையும் இல்லாதவர் தாழ்வர். அவற்றையுடையவர் உயர்வர். இது உலகத்தில் நிகழும் நிகழ்ச்சியாகும். ஆதலால் நான் அழிவு இல்லாத பெரியவன் ஆவேன். ஆறுமுகன் என்பவன் சிறுவன். ஆதலால அவனை நான் வெல்வேன். இது திண்ணம். தொகுதியான நம் குலத்து முந்தைய பெரியோர் பலரின் உயிர்களை அழித்த பகைவர் ஆதலால் தேவரைச் சிறையிலே அடைத்தேன். தீமை செய்தவரைத் தேடிக் கண்டு ஓர் அரசன் தண்டித்தல் நெறியானதே ஆகும என மனுநீதி சாத்திரங்களும் சொல்லும்."

"தேவராக உள்ளவரின் சிறைக் காவலைக் கைவிடேன். அவர்களே அல்லாது அத் தேவர்களின் தலைவரான இந்திரனையும் தேடிக் கண்டு இனிச் சிறையில் அடைப்பேன். ஏக நாயகனான சிவபெருமானே வந்து போரிட்டாலும், அவனுடன் எதிர்த்துப் போர் செய்வேன், ஆதலால் இத்தகைய சிறு சொற்களைச் சொல்லாமல் தவிர்ப்பாயாக! அசுரர்களின் குல ஒழுக்கத்தைக் கை விட்டாய். இப்போது தேவர் போல ஆகிவிட்டாய். வலிமையை இழந்து விட்டாய். மேலே நடக்க வேண்டிய ஆண்மையையும் வெற்றியையும் நீக்கியவன் ஆனாய். இனி மௌனமாக அரிய தவம் செய்யப் போவதே உனக்கு நல்லது. பூதகணத்தவரையும், அவருடைய தலைவர்களையும், சிவபெருமானின் மகனையும், மற்றவர் எல்லாரையும், வெல்லப் போருக்குச் செல்வேன்; நீ தளர்ச்சி அடையாதே! உன் பெரு ஊருக்குச் செல்!" என்று சூரபன்மன் சொன்னான். இத்தகையவற்றை அவுணரின் மன்னன் சூரபன்மன் சொன்ன போதில, சிங்கமுகன், 'இவன் அறிவு நன்றாக உள்ளது' என்று எண்ணி நகைத்து கண்களில எலலாம் பொருந்திய தீப் பொறியானது வெளிப்பட, கொடிய சினம் பொருநதிய தன் உள்ளத்தில் பின்வரும் இவற்றை எண்ணலானான். "நான் இவனுககு உறுதி

தருவனவற்றை எடுத்துச் சொன்னேன். நல்லறிவு இல்லாத இவன் என்னை இகழ்ந்து பேசி விட்டான். வர இருக்கும் தீமையை இவன் உணர்ந்து கொள்ளவில்லை. தான் அழியும் வகையைத் தேடிக் கொண்டான். அறிவில்லாதவர்க்கு எத்தகைய அறிவுரையையும் உரைப்பவர் அறிவற்றவரை விட அறியாமையுடையவர் ஆவார். நீண்ட சிவந்த கண்களையுடைய நின்மலரான சிவபெருமான் தந்த வாழ்நாள் அழிந்து விட்டது. மடியும் காலம் நெருங்கி விட்டது. இங்குள்ள எல்லாரும், இந்தச் சூரபன்மனான மன்னனும் இறப்பான். இந்திரன் செய்த தவமும் பொய்யாகுமா? மன்னவர்க்கெல்லாம் மன்னனான சூரபன்மன் ஆறுமுகனின் வேலால் இறப்பான்; இதையும் பார்த்துக் கொண்டு இங்கு இருப்பது குற்றமாகும். இவன் இறப்பதற்கு முன்னம் இறந்து விடுவதே முறையானதாகும்'' என்று இவ்வாறு எண்ணிய சிங்கமுகன், தன் தந்தை போன்ற சூரபன்மனின் அடிகளை வணங்கித் துதித்து, ''மன்னவனே! சினம் கொள்ளாதே! என் பிழையைப் பொறுத்துக்கொள். உள்ளத்தில் சினம் கொண்டு என்னை இகழ வேண்டாம். நான் போருக்குச் சென்று பகைவரை எதிர்த்துப் போர் செய்வேன். பகைவரை அழிப்பேன். அதனை நீ அறிவாயாக'' என்று கூறவும், சூரபன்மன் ''இன்று நின் ஊருக்குச் சென்று அங்குள்ள படைகள் எல்லாவற்றையும் ஒன்றாகக் கூட்டி வைத்துக் கொண்டு இனிதாக இருப்பாயாக! அச்சிறுவன் முருகன் இங்கு வந்தால் உன்னை அழைப்பேன். அப்போது வருவாயாக!'' என்றான். ''பகைவர் மீது நான் போருக்குச் செல்வேன் விடை தருவாயாக'' என்று தன் தம்பி சிங்கமுகன் வேண்டவும், தமையனான சூரபன்மன் பெரிதும் உள்ளம் மகிழ்ந்து, மிக்க அன்புடனே, 'வா' என்று அச்சிங்கமுகனை அருகில் அழைத்து, மார்புறத் தழுவிக் கொண்டான். ''விரைவாக முருகன் பெரு நகரத்துக்குள் போர் தொடுத்து, வந்தானாயினும் போர் மேல் நீ செல்லாதே! அவன் போருக்கு வந்த அதனை ஓர் தூதன் மூலம் சொல்லி அனுப்புவாயாக! நான் உடனே விரைந்து போர் செய்ய வருவேன்!'' என்று சிங்கமுகன் சொன்னான்.

